உ

கணபதிபதயேநமஃ

# மனோரஞ்சனி.

இஃது

ஸ்திரீ புருஷர்கள் நல்லறிவைப்பெற்று

ஜ்வலிக்கவேண்டுமென்னும்

கருத்தால்,

[இரண்டாம்பதிப்பு.]

சென்னை - சூளை

எஸ். பி. இராஜாராமவர்களால்

தமது

ஸன் ஆப் இந்தியா பிரெஸ்ஸிற்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

இதன் விலை] [அணா 2-00

உ

கணேசர் துணை.

# ரிஜிஸ்ட்டர் அறிவிப்பு.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில் 1867 வது வருஷத்திய 25-வது ஆக்ட்டின் 20-வதுபிரிவின் 6 - வது விதியின் பிரகாரம் இந்நூலை இங்கிலீஷ் இலாகாவாகிய மதராஸிலும் பிரஞ்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும் காரைக்காலிலும் காப்பிரைட் ரிஜிஸ்ட்டர் செய்யப்பட்டிருக்கின்றது, ஆகையால் இந்நூலுக்குடையவராகிய எஸ். பி. இராஜாராமவர்களின் உத்திரவின்றி இதை வேறு பாஷையில் மொழிபெயர்த்தலும் அல்லது இதிற் கண்டிருக்கிற பாகங்களைப் பிறர் அச்சிடுதலுங்கூடாது அப்படி அச்சிட்டால் அதனால் உண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

—(0)—

## முக்கியகவனிப்பு.

இப்புத்தகமாவது இன்னும் இதரமான புத்தகங்களாவது, ஔஷதங்களாவது, தேவையானவர்கள் அடியிற் கண்டிருக்கும் கம்பெனியாரவர்களுக் கெழுதிப் பெற்றுக் கொள்ளலாம். சேட்டலாக் தேவையானவர்கள் எமக்குத் தெரிவித்துக்கொண்டால் இனாமாக அனுப்பப்படும்,

எமது விலாசம்.

எஸ். பி. இராஜாராம் அண்டு கோ.

ஸன் ஆப் இந்தியா பிரெஸ்,

நெ. 14. ஆரிமுத்துமேஸ்திரிதெரு,

சூளைபோஸ்ட், மதராஸ்.

# நூதன புத்தகங்கள்.

படுக்கையறையில் பாசாங்குசெய்த

## பங்கஜவல்லிக்கதை.

(ஓர் நவீனக தமிழ் நாவல்)

பங்கஜவல்லி என்னும் இக்கதாநாயகி சீமானாகிய சித்தூர் - செல்வகேசவ முதலியாருடைய புதல்வி. இவள் கண்டோர் மையல் கொள்ளத்தக்க கட்டழகியா யிருந்ததோடு, தமிழ்க்கலை வாய் மடுத்துக்கலை மகளெனச் சொல்லும்படியான 11 பிரசங்கங்களை செய்தனள் அதை கவனியுங்கள்.

பின்னர்ப் பங்கஜவல்லியின் கலியாணச்சிறப்பும் அவள் படுக்கையறை சென்று தனது நாயகனோடு பாசாங்குசெய்து. தன் குற்றத்தை மறைப்பதும் இருவர்க்கும் நடக்கும் சம்பாஷணையும் வெகு இனிமையைத் தராநிற்கும் புத்திமான்களே!

கொஞ்சம் காப்பிகளே கைவசமிருப்பதால், வேண்டுவோர் எமக்கு எழுதிக்கொள்ளவும். விலை அணா 8

## மைத்ருவதிக் கதை.

இக்கதை வாசிப்போரும் நற்புத்தியும் ஆசாரியபக்தியும் அரியயுக்தியும் சாபானுக்கிரக சக்தியும் உண்டாகுமென்பதற்கு யாதொருதடையுமில்லை இக்கதையின் பெருமையைப் பூரணமாகச்சொல்லில் மிகவும் விரிவாகிறபடியால் சுருக்கமாக வரையலாயிற்று புத்தகம் 1-க்கு அணா - 12

## சுந்தராங்கி.

அனேக நீதிபோதங்களை யடக்கி தெவிட்டாத இன்பத்தைக் கொடுக்குந்தன்மையானது ஆதிமுதல் அந்தம் வரையில் எளியதமிழ் வசனநடையில் எழுதப்பட்டிருப்பதால் சாமானிய படிப்பினையுடைய நம்பெண்மக்கள் கூடவாசிக்கலாம்.

இதன்விலைஅணா6. விபிசார்ஜ்அணா 2.

| | |
|---|---|
| ராமரகசியம் | 0 6 0 |
| அனுபோகபிரச்னை ஆரூடம் | 0 8 0 |

பிருஹஜ்ஜாதகமென்னும்

## மங்களேஸ்வரியம்.

இது மகாசோதிட சாஸ்திரங்களிலொன்றுமேயலும் ஓராசாரம பாராசாரியமுதலிய சோதிட சாஸ்திரங்களுக்கும் இணையானது எல்லாச் சோதிடர்களும் கையாளத்தகுந்தது, இச்சாஸ்திரம், முற்காலத்ததாயும், மகாசிரேஷ்டமானதாயுமிருப்பதால் இதைப்பற்றி அதிகமாய் தெரிவிக்க வேண்டியதில்லை. இதனுண்மை பரம்பரையான சோதிடர்களுக்கு நன்றாய்த் தெரியவருமென்பது உண்மையே.

புத்தகம் 1-க்கு விலை ரூபா 1 4 0

வி-பி-சார்ஜ் அணா 4.

## மோகனசுந்தரி.

உலகத்தில் மாற்றாந்தாயாகவருபவள், முதற்றாரத்தின் பிள்ளைகளை நடத்தும்குரூரச்செய்கைகள் வவ்வளவல்லஎன்பதை அனுபவிகள் அறிந்தேயிருப்பார்கள். உலகத்தில்நடக்கும்மாற்றாந்தாயின் அக்கிரமத்தைப் பற்றியே இக்கதையில்எழுதியிருக்கிறது

விலை. 0-6-0. வி. பி. சார்ஜ் அணா 2.

## தற்கால வயித்திய போதினி.

அனேகவைத்தியர்களால் கையாளப்பட்டுவருகின்றபாகங்கள் மாத்திரமே 15-அத்தியாயங்களாகப்பிரித்துத் தற்கால வைத்தியபோதினிஎன்கிறபேரிட்டு எழுதி ஒருநூல்அச்சிட்டிருக்கின்றனன் ஆனால் இந்த நூலில்சொல்லியபடியே விபரீதமான அர்த்தஞ் செய்துகொள்ளாமல் சரியானமாதிரிசெய்து பார்த்தால்அவ்வம்மருந்துகளுக்குச் சொல்லியுள்ள வேலைகளைக் கட்டாயம் செய்தேதீரும் இதற்குச்சந்தேகமேயில்லை உயர்ந்தபதிப்பு.

கிளேஸ்கடிதம் இதன் விலை அணா-8.

வி-பி-சார்ஜ் அணா-2.

ஸ்ரீ இராமலிங்கபிள்ளையவர்கள்

அருளிச்செய்த

## திருவருட்பாத்திரட்டு

மூலமும் உரையும்.

இதன்விலை ரூபா 1. வி-பிஅணா-3.

உ

# முகவுரை.

மனோரஞ்சனி என்னும் இக்கதை, இதன்பெயரானே படிப்போருடைய மனதைக் களிப்பிக்குமென் றுணர்த்துகின்றது.

காமங் காரணமாகக்கொண்டு நடத்தும் சில கதைகளைப்போலாது, பெண்களின் கற்புநிலையினாலுண்டாகும் ஏற்றமும், செல்வம் தரித்திரமென்னுமிரண்டும் சகடக்கால் போல்வதென்னும் உண்மையும், தெய்வவல்லபமும், பேராசையின் தாழ்வும், நல்லறிவா லுண்டாகும் நன்மையும், யோக்யதையைப்பற்றிய பிரசங்கமும், முயற்சியின் பெரும்பயனும், ஞானிகளின்தரிசனவிசேடமும், சௌரியத்தின் ஏற்றமும் இன்னு மிவைபோன்ற பல அரியவிஷயங்களையும் இதில் கதாரூபமாக எழுதிப் பதிப்பிக்கப்பட்டது.

இதனைவாசிக்கும் நமது இந்துமாதர்களும் புருஷசிகாமணிகளும் நல்லறிவு, யோசனைசக்தி, தெய்வபக்தி, கல்வி, அடக்கம், பொறை, அன்பு. தூய்மை முதலியனபெற்று ஆஸ்திகபக்தர்களாய் ஜ்வலிப்பார்களென்பதிற் றடையில்லை:—சுபம்.

உ

கணாதிபதயேநம:

# மனோரஞ்சனி.

கல்வியிற் கம்பனெனத்தகும் கவிவல்லானொருவன் சமரபுரி யென்னும் திவ்யதேசத்தைத்தனக்கு வாஸஸ்தலமாகக் கொண்டிருந்தான். அவனுக்குக் கல்விச்செல்வம் நிரம்பி யிருந்ததுபோலவே பொருட்செல்வமும் மிகுந்திருந்தது. அவன்பெயர் சுந்தரம். அவனுடையமனைவியின்பெயர் பத்மாவதி. சுந்தரனுடைய முப்பத்தைந்தாம்வயதில் பத்மாவதி ஒருபுத்திரனையீன்றாள். அப்பிள்ளையின் பெயர் வல்லாளன். பின்னர் அவர்கட்குச் சந்தானமில்லாதொழிந்தது. ஏகபுத்திரனாகிய வல்லாளனைக் கண்ணுங்கருத்துமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்துவந்தனர். பிள்ளைக்கு ஐந்துபிராயமாயிற்று. பிள்ளையைப் பள்ளியில்விடத் தாயாருக்குச் சிறிதும் இஷ்டமில்லை. கல்விகற்பதனாலுண்டாகும் துன்பத்தைப்போல மற்றெதனாலுமுண்டாவதில்லையென்பது அவளுடைய ஆழ்ந்தகருத்து. கல்வியினாலுண்டாகும் பயனும் சிறப்பும் சுந்தரம் உணர்ந்திருப்பினும், மனைவியின்மேல்மோகமும் பிரியமுமுள்ளவனாதலால், அவள் கருத்தின்படி விடலானான். கல்வியில்லாத தன்மனைவிக்குக் கல்வியினாலுண்டாகும் பிரயோஜனத்தை எவ்வளவெடுத்துக்கூறினும் (அவளதை உணரும் சக்தியின்மையால்) அவளுக்குவிரோதமாகத் தோற்றுமென்பது அவனுடைய உட்கருத்து. ஐந்துவயதுவரையில் தாயின் தனப்பாலைப் புஷ்களமாயுண்டவல்லாளன் நாத்தடித்து மந்த சிகாமணியானானெனினும், எப்படிப்பட்ட பாரமான பொருளையும் லக்ஷியமின்றி யெடுத்தெறியும் பலசாலியாயினான். இவனுக்கிப்போது பதினாறுவயதாயிற்று. வித்வான்பிள்ளைமூடன்; வயித்தியன்பிள்ளை நோயாளி என்னும் பழமொழிப்படி, வல்லாளன் எழுத்தின் ஸ்வரூபமே தெரியாத மூர்க்கசிகாமணியாயினானென்று நாம் மற்றுமொருகால் சொல்லவேண்டியதில்லை.

வல்லாளன் கல்வி யொன்றிற் குறைந்தவனாயினும், அவன்கேளாத கிழக்கதைகளும், பாராத பர்வதங்களும் இல்லை. சொக்கட்

டான் - சூது - சதுரங்கமுதலிய விளையாட்டில் அவன் விருதுபெற்றான். அவனோடு நடக்கவும் ஓடவும் ஒருவனாலும் முடியாது. மற்றைவிளையாட்டுகளிலெல்லாம் அவனை ஜயிப்பவர் ஒருவருமில்லாதபடி பிரசித்திபெற்றிருந்தான். அவன்செல்வந்தனுடைய பிள்ளையாதலால் அவனைப்பிறர் இழித்துக்கூற அஞ்சினரென்றாலும் வித்வானாகிய சுந்தரம்பிள்ளை தன்மகனுக்குக் கல்விகற்பியாது கோயில்மாடெனத்திரியவிட்டது விவேகமல்லவென்று தம்முள் எண்ணி வல்லாளன் தந்தையை நிந்திக்கிலாயினன்.

ஒருநாள் இரவு சுந்தரம்பிள்ளையும் தன்மனைவியாகிய பத்மாவதியும் மஞ்சத்திருக்கையில், பதினெட்டுவயதாகிய தன்பிள்ளைக்கு விவாகஞ்செய்து பார்க்கவேண்டுமென்று பத்மாவதிகூறினாள். சுந்தரம்பிள்ளை தனக்கும் அக்கருத்துண்டென் றுரைத்தார்.

பத்மாவதி:—அழகும் செல்வமுமுடைய பென்ஷனர்கோபாலபிள்ளையினுடைய புத்திரியை நமது மகனுக்குக் கேட்கவேண்டுமென்பது என்கருத்து. தங்களுடைய இஷ்டம்யாது?

சுந்தரம்பிள்ளை:—பத்மாவதி! நீ சுத்த அறிவில்லாதவள். நமதுபிள்ளை ஞானசூன்யனாயிருப்பதை இச்சமரபுரியில் அறியாதாரில்லை. வல்லாளன் சிறுபிராயத்திலேயே கல்வி கற்பியாதிருந்தது, உன்னுடைய மனஸ்தாபத்தைச் சம்பாதித்துக் கொள்ளலாகாதென்னும் கருத்தாலேயாம். அதன்பொருட்டு என்னுடைய நண்பரும், செல்வந்தரும், என்னைப்புறங்கூறித் திரிவதை நீ அறிவையோ? "நீட்டோலைவாசியான் நின்றான் குறிப்பறிய-மாட்டாதவனைமரம்" என்பதைச்சாமானியருமறிவரே! வித்துவானென்னும் பட்டப்பெயா எனக்கிருந்தும் உன்மோகத்தால் மூழ்கி அறிவழிந்து விட்டதனால் இப்போது லோக அபவாதத்துக்குள்ளானேன். நிர்மூடனாகிய நமது பிள்ளைக்கு கோபாலபிள்ளை தன்குமாரத்தியைத்தர ஒருபோதும் இசையார்.

பத்மாவதி:—கல்விச்செல்வமுள்ளோரெல்லாம் பொருட்செல்வமுடையோர்தம் வாயிலைக்காத்துக் கையேந்திப்பல்லைக்காட்டிக்கெஞ்சிக் கூத்தாடித் தாளம்போடுவதை நீர் மறந்தீரோ? நமக்கு அருமையாகப்பிறந்த ஒருபிள்ளையைக் கல்வியில்விட்டுக் கசக்கக்கூடாதென்பது என்கருத்தென்றாலும், நீங்கள் பிள்ளையைப்பள்ளிக்கூடத்தில் விடுவதற்கு எப்போதேனும் முயற்சித்து நானதைத் தடுத்த

துண்டா? நீர் அப்போது கல்வியின் பிரஸ்தாபமே செய்யாமல் மௌனம் சாதித்ததால் தங்களுக்கும் அதுவே கருத்தென்றிருந்த என்தலையில் இப்போது பழிசுமத்துவது விந்தையேயாம். வெகு நன்றாயிருக்கிறது! நமது பிள்ளைக்கு என்னகுறை? அழகில்லையா? செல்வமில்லையா? ஜனக்கட்டில்லையா? எதில் குறைந்திருக்கின்றான்? பென்ஷன் கோபாலபிள்ளையின் செல்வத்திற்கு நமது செல்வம் எண்மடங்கதிகமாயிருக்க அவர் ஏன்பெண்கொடார்? (என்று வித்வான் வாயெடாவண்ணம் சரமாரிபொழிந்தாள்)

சுந்தரம்பிள்ளை:—பெண்ணே! வெகுதிறமாகப்பேசி பழியை யெல்லாம் என்மேற்சுமத்தினாய். கடந்தவிஷயத்தைப்பற்றி விவரித்தென்னபயன்? பாமரனாகிய வல்லாளனுக்கு நமது செல்வத்தை உரித்தாக்கப்போவது நிச்சயம். அவனுக்கோ பொருளீட்டலின் கஷ்டம் தெரியாது. இவ்வுண்மையை, ஆகாயத்தை வில்லாகவும், மணலைக்கயிறாகவும் செய்ய வல்லேமென்னும் படாடோபப் பகல் வேஷ அண்ணாத்தைமாரகளறிந்தால், வெகு எளிதில் நமதுபிள்ளையைச்சிநேகித்துப் பொருளையெல்லாம் கொள்ளையடித்துச்செல்வர். இவனைப்போலவே இவனுடைய மனைவியும் கல்வியில்லாதவளா யிருந்தால் அவனை நல்வழியில் திருப்பவல்ல சக்தியில்லாது போம். இப்படிச்செய்தால் நமது செல்வமனைத்தும் வெகுசீக்கிரத்தில் அழிந்து போமல்லவா? ஆகவே நமது மகனுக்குவாசித்தபெண்ணைப் பார்த்து விவாகம்செய்விக்கவேண்டுமென்பது எனதுகருத்து. கோபாலபிள்ளையின்மகள் செல்வமுடையவளேனும் சிறிதும் கல்வியில்லாதவள். ஆகவே சௌந்தரம் பிள்ளையின் மகளாகிய புஷ்பவேணியை நமது மகனுக்கு மனைவியாக்கிவைத்தால், மலைமேலிட்ட தீபம்போல் நமது மகன் பிரகாசிப்பான் என்றார்.

பத்மாவதி தன் கணவன் கருத்திற்கிசைந்தாள். நன்னாளாகிய ஒருதினம் சௌந்தரம் பிள்ளையின் குமாரத்தியைத் தன்பிள்ளைக்குத் தரும்படி சுந்தரம்பிள்ளைபேய்க் கேட்டு அவர்களைச் சம்மதிக்கச்செய்தார். உடனே நன்னாளொன்று நியமித்து சகலாடம்பரத்துடன் வல்லாளனுக்கும், புஷ்பவேணிக்கும் விவாகம் நிறைவேறியது. புஷ்பவேணி இன்னும் புஷ்பவதியாகாத சிறுபிராயமுடையவளேனும், அவள்வாசித்தவளாதல், கல்வியில்லாத தன் கணவனுடைய மௌட்டிய நடக்கைகள் அவளுக்குச் சிறிதும் சரிப்பட

வில்லை என்றாலும் அவள் இப்போது என்னசெய்யக்கூடும்? ஒவ்வொருநாளும் தன்கணவனுடைய நடையுடை பாவனைகளைக் கருத்தாய் கவனித்து வந்தாள்.

எந்தப்பெண்பிள்ளையாவது தலைவாயில்லாத கிழக்கதைகளைச் சொல்வாளானால் வல்லாளன் தனக்குள்ள எல்லாவேலைகளையும் விட்டு விட்டு அக்கதையைக்கேட்க வெகு ஆவலோடு செல்வான். அக்கதை முடியுந்தனையும் அவ்விடம் விட்டு இப்படி யப்படி நகரமாட்டான். அந்தச்சமையத்தில் அவனை போஜனம் செய்வதற்கு வீட்டிலழைத்தாலும்போகான். அவர்கள் செய்யும் தொந்தரவால் ஒருக்கால் போகும்படிநேரிட்டாலும், கதைசொல்பவரைத்தான் உண்டு வருந்தனையும் கதை சொல்லாதிருக்கும்படி வேண்டிக்கொள்வான். அவர்கள் அதற்கொத்துக்கொண்டால் அதன்பின் அவ்விடம்விட்டு விரைந்துசென்று அரைவயிற்றிற்கும் குறைவாய்ப் புசித்துவிட்டுக்கைகழுகினதும், கழுகாததுமாக ஓடிவருவான். இதைப் பலநாள் பார்த்திருந்த புஷ்பவேணி தன்கணவனுக்குக்கதைகேட்பதில் அதிக பிரியமிருக்கிறதென் றுணர்ந்தாள்.

இவ்வாறு இரண்டு வருடங்கள் கழிந்தன. புஷ்பவேணி ருதுவதியானாள். அவள் சிறந்த நக்ஷத்திரத்தில் ப்ரவுடையானதைப்பற்றி வீட்டிலுள்ளோர் பரமசந்தோஷ பரிதர்களாயினர். இப்போது ஏறக்குறைய வல்லாளனுக்கு இருபதுவயதிருக்கலாம், புஷ்பவேணிக்கு வயது பன்னிரண்டு அல்லது பதின்மூன்றிருக்கும், ப்ரவிடையான ஆறுமாதம் இருவருக்கும் நிஷேதமுகூர்த்தம் நிறைவேறியது.

சாந்தி முகூர்த்தம் நடந்தேறிய மூன்றுநாள் வல்லாளன் தன் மனைவி பக்கத்தில் மஞ்சத்திருந்து புஷ்பம்! நீபடித்தவளென்று கேள்விப்பட்டேன் அது உண்மைதானோ?

புஷ்பவேணி:—நாதா! என்னுடைய கல்வியென்ன: சிறுபோது சிலநாள் ஒருபள்ளிக்கூடத்தில் வாசித்தேன், பின்னர் என் தந்தைபயிற்றினர். பத்துவயதுமுதல் குடும்பகாரியத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தேனாதலால் அக்கல்வியைவிருத்தி செய்வதற்குச்சாவதான மேற்படவில்லை, இனி தங்களுடைய கிருபை யிருந்தால் அதை விர்த்தி செய்துகொள்ள வேண்டுமென்பது என தபிப்பிராயம்.

வல்லாளன்:—அடிபயித்தியமே!, பெண்கள்கற்பதனால் யாதுபயன்? புருஷர்கள் படித்தாலும் உத்தியோகம் செய்யக்கூடும். கல்வி

யால் அடையக்கூடிய இலாபமொன்று மில்லாமையாற்றான் என் தாய் தந்தையர் எனக்குப் படிப்பிக்க வில்லை.

புஷ்பவேணி:—நாதா! படிப்பாற் பயனில்லை யென்னுந் துணிபு தங்களுக்குண்டானதற்காக வருந்துகின்றேன். "எண்ணென்பவேனை யெழுத்தென்ப இவ்விரண்டும், கண்ணென்ப வாழு முயிர்க்கு" என்று திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்திருக்கும் ஒரு குறளினாலேயே பெண்களுக்கேனும் புருஷர்களுக்கேனும் கல்வி அவசிய மென்பதைப் போதிக்கின்றது.

பெண்கள் படித்தால் அவர்களுக்குச் சகலவிவேகமும் உண்டாகுமானதால், அவர்கள் புருஷர்களுக்குமந்திரிகளைப்போல சமயத்தில் புத்திசொல்வார்கள். காரியஸ்தர்களைப்போலக் கிருககிருத்தியங்களை யெல்லாம் நடப்பித்துக் கொள்வார்கள். கணக்கர்களைப்போல வீட்டைச்சேர்ந்த கணக்குகளையெல்லாம் எழுதிக்கொள்வார்கள். தாய்போலப் புருஷர்களைச் சம்ரக்ஷிப்பார்கள். காவற்காரரைப்போல வீட்டுப்பண்டங்களை யெல்லாம் காத்துக்கொள்வார்கள். நல்லசுயம்பாகிகளைப்போலப் புருஷர்களுடைய நாவுக்கிதமான பக்ஷணங்களைச் செய்து கொடுத்துபசரிப்பார்கள். வைத்தியர்களைப்போலப் புருஷர்களுடைய தேக சௌக்கியங்களுக்கடுத்த காரியங்களைத் தேடிச்செய்வார்கள். சங்கீத வார்த்தைகளைப் பேசியும் புருஷர்களுடைய வருத்தங்களைத் தீர்ப்பார்கள். உத்தம சிநேகிதர்களைப்போலப் புருஷர்களுடைய ஆபத்துக்கு உதவுவார்கள். புருஷர்கள் பிசகி நடந்தால் அவர்களுக்குக் குருவைப்போல உபதேசஞ் செய்வார்கள். பெண்களுக்குப் படிப்பில்லாமையால் இவ்வளவு நன்மைகளையும் புருஷர்கள் இழந்தவர்களாகிறார்கள்.

என்று புஷ்பவேணி குருவுபதேசம்போலச் சொல்லிக்கொண்டிருக்கையில், "வல்லாளன் கல்வியால் இவ்வளவு நன்மையுண்டாகுமானால் என் தந்தை எனக்கேன் கற்பிக்கவில்லை" என்றான்.

புஷ்பவேணி. — அதுதாங்கள் செய்த தீவினைதான்.

இவர்கள் இவ்வாறு வார்த்தையாடிக் கொண்டிருக்கையில் வல்லாளனுடைய தமக்கையாகிய கைம்பெண் தட்டில் தாம்பூலமெடுத்துக்கொண்டு கூடத்தில்வந்துட்கார்ந்துகொண்டு "யாரம்மா கதை கேட்கப்போகிறவர்கள்? எல்லோரும் வாருங்கள். நேற்று சொல்லி விட்ட கதையை முடித்துவிட்டு நான் படுத்துக்கொள்ள

வேண்டும். தேகமென்னமோ ஒருவாறு அசதியாயிருக்கிறது' என்றாள். இவ்வார்த்தையைக் கேட்ட சில சிறுபெண்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். வல்லாளன் கட்டிலினின்றும் திடீரென்று கீழே குதித்து 'நான்கதைகேட்கப்போகிறேன்' என்று விரைந்து போகும் சமயத்தில், புஷ்பவேணி அவன் கரத்தைப்பற்றித்தடுத்து "நான் தங்களுக்கு வேண்டுமான கதைகள் சொல்லுகிறேன். இப்படியேறி மஞ்சத்தில் உட்காருங்கள்" என்றாள்.

வல்லாளன். — புஷ்பம்! உனக்குக் கதை சொல்லத் தெரியுமென்பதை நான் உணரேன். எனக்குக்கதை கேட்பதில் அதிக பிரியமாதலால் ஏதோ நல்லகதையாக ஒன்றுசொல் பார்ப்போம்.

புஷ்ப.—அங்ஙனமே சொல்லுகிறேன். அதற்குப் பதிலாகத் தாங்கள் என் இஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டும். அதாவது, தாங்கள் வாசித்துக்கொள்ளவேண்டுமென்பதே.

வல்லா.—உன்கருத்திற் கிணங்க நடக்கிறேன். நீ நாள்தோறும் கதைசொல்லி என்னைக்களிப்பிக்கவேண்டும். அப்படிச் செய்வாயானல் உன்னிடத்திலேயே வாசித்துக் கொள்ளுகிறேன் என்றான்.

புஷ்பவேணி கதைசொல்ல ஆரம்பித்தாள்.

---

## புஷ்பவேணியின் பிரசங்கம்.

என்கண்ணாளரே!

ஆற்றின் மணலை எண்ணினாலும், நக்ஷத்திரக்கூட்டங்களைக் கணக்கிட்டாலும், உலகம் உண்டானதுமுதல் வர்த்தமான காலம் வரையில் இறந்து போனவர்களுக்கும் தொகை சொல்லக்கூடுமா? அவர்களுடைய பெயர்களெல்லாம் அப்பிரகாசமாய் மறைந்து போய்விட்டன. வித்வான்களுடைய பெயர்களும், அவர்களுடைய கிரந்தங்களும் என்றும் பிரகாசித்துக்கொண் டிருக்கின்றன. பூர்வீகசரித்திரங்களை எழுதி பூர்வீக அரசர்களுடைய பெயர் விளங்கும்படி செய்தவர்களும் கல்விமான்களே. கல்விமான்களுடைய கிருபை யில்லாவிட்டால் அந்த அரசர்கள் இறந்த நிமிஷத்தில் அவர்கள்பெயர் அப்பிரகாசமாய் மறைந்துபோயிருக்குமென்பது சந்தேகமா? இங்கிலாந்து பிரான்சு முதலிய ஐரோப்பாகண்டத்திலுள்ள நாகரீகமும் நீதியும் ஒழுங்கும் செல்வமும் அபூர்வமான வேலைகளும் அந்தத் தேசத்தாருடைய கல்வியின லுண்டாயினவே

யல்லாமல் மற்றவற்றாலல்லவே! சமுத்திரச்சைக் கிணறுவிழுங்கி னதுபோல இவ்விந்து தேசத்திலுள்ள கோடானுகோடி ஜனங்களைச் சில இங்கிலீஷ்காரர்கள் ஆளுவது கல்வியின் பலத்தினாலேயே யல்லாமல் சரீரபலத்தினாலல்லவே,

படித்தவனுக்கு உலகமே ஒருபெரிய புஸ்தகமாயிருக்கிறது. பஞ்சபூதங்களும், பூமியிலுள்ள மலைகள்-மரங்கள்-கடல்கள்-நதிகள் முதலியவைகளும், வானத்திலுலாவும் சந்திரசூரிய நக்ஷத்திரங்களும் மேகங்களும் தத்துவ ஞானத்தை யுபதேசிக்கிற குருமூர்த்தியாயிருக்கின்றன. பூமியிலுள்ள நானாபேத ஜீவாத்மகோடிகளையும், விருக்ஷஜாதிகளையும், அந்தவிருக்ஷங்களிலுள்ள மரகதத்தகடு போன்ற இலைகளையும், நவரத்தினத்தையொத்த பரிமள புஷ்பங்களையும், கற்கண்டுகட்டிபோன்ற மதுரக்கனிகளையும், பலவர்ணமுள்ள அழகிய பக்ஷிகளையும், கல்விமான் பார்த்துப் பார்த்து நேத்திரானந்தத்தை யடைகிறான். வானம்பாடி, குயில், கிளி, பூவை முதலிய பக்ஷிகள் பாடும் சங்கீதத்தைக்கேட்டு சுரோத்திரானந்தத்தை யடைகிறான். அந்த ஆனந்தத்தைக் கொடுத்த பரமகிருபாநிதியை உடனே தியானித்து ஆத்மானந்தத்தையும் அடைகிறான். படியாதவனோவென்றால் அந்த ஆனந்தங்களை அநுபவிக்கத்தெரியாமல் சஞ்சாரப்பிரேதம்போலக் கண்ணிருந்தும் பாராதவனாகவும் மனமிருந்தும் நினையாதவனாகவும் திரிகிறான்.

மனிதர்களுக்குக் கல்வியே பெருந்துணையாகவும், அது அவர்களுக்கு எவ்வகை நன்மைகளையும் விளைவிக்கின்றது. எவர்க்கும் கல்வியானது மிகமனக்களிப்பையுண்டாக்க வல்லது. உயர்ந்ததோராபரணமாகின்றது. சிறந்த சாமர்த்தியமும் சம்பாதிக்கின்றது. ஏகாந்தமாய் உட்கார்ந்திருக்கும்பொழுது கல்வியானது மிக்கமகிழ்ச்சியைத்தரும். பண்டிதர்களுடைய சபையிலேபோய்ப் பிரசங்கம் செய்யும்பொழுது அத்தனையும் ஆபரணம்போல்வதாகும். யுத்தாயுக்தமறிந்து வியாபாரங்கள் நடத்துவதில் மிகத்திறமையுண்டாகும். அந்தந்த சமயங்களில் அதததற்குச் சென்றபடி யோசித்து நடப்பதும், நியாயா நியாயங்களையறிந்து நியாயாதிபதிகள் தீர்ப்பு செய்வதும், பின்னும் பற்பலகாரியங்களைத்தக்கபடி நடத்துவதும் இவை முதலிய எல்லாம் படிப்பினால் அமைந்த திறமையேயன்றி வேறென்ன? படிப்பில் நெடுநேரம் பொழுதுபோக்குவது சோம்பலாக்குவதும், அதை ஆபரணமாக அடிக்கடி உபயோகிப்பது மிகவும் இகழ்ச்சியாகும். படிப்பின் திறமையை அதிகமாய் உப

யோகிப்பதும் பொல்லாங்கு செய்வதாகும். படிப்பானது அவரவருடைய சுபாவசித்தமான குணங்களைப் பரிபூரணமாக்கித்தானும் அப்பியாசித்தல் பூரணமாகின்றது. இயற்கையான திறமைகள், இயற்கையாய் உற்பத்தியாகின்ற செடிகள்போன்றவை படிப்பாகிய ஆயுதத்தைக்கொண்டு அவற்றின் தழைகளைக்கழித்து வந்தாலல்லது அவை செம்மையாக வளரமாட்டா. அந்தப்படிப்பையும் உலகநடவடிக்கைகளைக்கொண்டு ஒருநிதானத்தில் நிறுத்தாவிடின் அதன் செய்கைகள் யாவும் அளவுகடந்ததாகி விடும்,

தந்திர சாலிகள் படிப்பைப் பகைக்கிறார்கள், ஒன்றும் தெரியாத சாமானியர்கள் கல்வியைப் புகழ்கின்றார்கள். விவேகிகள் அதை உபயோகப்படுத்துகின்றனர், விவேகிகள் தங்களுடைய புத்திக்குத் தோன்றியபடியே நடப்பதில்லை, பிறருடைய அபிப்பிராயங்களை நன்றாய்க் கண்டறிந்து அதற்கேற்க நடக்கிறார்கள், நாம்படிப்பது ஆக்ஷேபம் செய்வதற்கும், எதிர்த்துப் பேசுவதற்குமன்று எதனையும் உண்மையாகவே நம்பி அப்படியே அங்கீகரிப்பதற்கன்று, வீண்வாதாடிப் பொழுது போக்குவதற்கன்று; எதையும் ஆய்ந்து ஆலோசித்து யுக்தப்படி நடப்பதற்காகவேயாம்.

படிக்க வேண்டிய பலபுத்தகங்களில் சிலவற்றை உருசியைமாத்திரம் பார்த்தறிந்துகொள்ளவேண்டும். சிலவற்றை அப்படியே விழுங்கிவிடவேண்டும்; சிலவற்றைநன்றாய் மென்றுதின்று ஜரிப்பித்துக்கொள்ளவேண்டும். அதாவது இங்கு மங்குமுள்ள விசேஷங்களை மட்டும் கண்டறிந்துகொள்ள வேண்டிய புத்தகங்கள்சில, ஒருவாறு முழுதுமே படிக்கவேண்டியவை சில; சிறிதும் தப்பாமல் முழுதும் மிக்க ஊக்கத்தோடு கருத்தாய்ப் படித்து முற்றும் மறவாது வைத்துக்கொள்ள வேண்டியவைசில; பிறரைக்கொண்டு படிக்கச்செய்து அவற்றின் முக்கிய தாற்பரியத்தை மட்டும் எழுதி வைத்துக்கொள்ள வேண்டியவை சில; அற்பவிஷயங்களும், உபயோகமற்ற விஷயங்களும் உள்ள புத்தகங்களுமே இவ்விதமானவைகள்.

படிப்பினால் மனிதன் பூரணனாகிறான்; சிந்தையினால் சமுசயமற்றவனாகிறான்; எழுதுவதனால் தவறற்றவனாகிறான். விஷயங்களை எழுதிவைத்துக் கொள்ளாதவனுக்கு ஞாபகசக்தி விசேஷமாகவேண்டும்; சிந்தனை செய்யாதவனுக்குப் பிரிதிபை அதிகமாக வேண்

டும், படியாதவனுக்குத் தான்படியாதவனல்லவென்று பார்ப்போரை பிரமிக்கச் செய்யச் சூது விசேஷமாக வேண்டும்.

சரித்திரங்களைப் படிப்பதனால் மனிதர்களுக்கு ஞானம் அதிகமாகும். காவியங்களைப் படிப்பதனால் சாதுரியம் அதிகரிக்கும். கணிதத்தில் பழகுவதனால் புத்திசூக்ஷ்மம் உண்டாகும், பிரகிருதிதத்துவசாஸ்திரங்களைப் படிப்பதனால் ஆழ்ந்த அறிவும், நியாய புத்தியும் உண்டாகும். தர்க்கசாஸ்திரமும் அலங்காரசாஸ்திரமும் வாசிப்பதனால் வாதம் செய்யத் திறமையுண்டாகும்.

புத்தி சாதுரியத்திற்கு எவ்விதமான இடையூறுமில்லையென்றாலும், படிப்பைக்கொண்டு அதைமிகவும சீர்திருத்தலாம் சரீரத்தில் உண்டாகும் வியாதிகளுக்குப் பலவிதமான தேகபயிற்சி செய்து பரிகாரம் செய்வதுபோல், யுத்தி செம்மைப் படுவதற்கும் பயிற்சி செய்யலாம். பந்தாடுவது குடல்களுக்கும், வில்லடித்து வேட்டையாடுவது சுவாசப்பைக்கும் இருதயத்திற்கும், மெல்லென உலாவுவது இறைப்பைக்கும், சவாரி செய்வது சிரசுக்கும் இப்படியாகச் சரீரப்பயிற்சி பலவுள. அநேகவிதமாகவே பத்திநிலையில்லாமல் அலைகிறவன் கணிதசாஸ்திரம் படிக்கலாம், அதில் உள்ள நியாயங்களை நிரூபித்துக்கொண்டிருக்கும்பொழுது புதகி சிறிதளவுசலிக்குமானால் மறுபடியும் அடியைப் பிடிக்க வேண்டுவதுதான் பகுத்தறியும் திறமையில்லாதவன் உபாத்தியாயத தொழில் கற்கலாம். இவ்வாறே ஒவ்வொருவிதமான மனக்குறையை மாற்ற ஒவ்வொரு வழியுண்டு.

யாவரோ சில கொடியவர்களுக்குக் கல்வியானதுபொல்லாங்குக்கு ஏதுவாகிறதென்றாலும், வெகுவாகக்கொடுமை, முரட்டுத்தனம் மடமை முதலியகுறைகளை நீக்கி ஐயந்திரிபாதி எல்லா விஷயங்களையும் எளிதாக விளங்கச் செய்கினறது,

---

## ராஜமோஹினி.

முன்னொருகாலத்தில் விவர்த்தநகரை அரசாண்டிருந்த சோமகாந்த னென்பவன் வயோதிகதசை யெய்தி தன் மரணகாலத்தை எதிர்பார்த்திருந்தான். தன் அருமைமகனாகிய ஒரேபுதல்வனிடத்தில் அவன்மனம் ஊசலாடிக்கொண்டிருந்தது, தனக்குப்பின் அவனைக் கிரமமாக்காத்து அரசாளக்கூடிய யோக்யதையுடையவன் யாவனென்பதைச் சோமகாந்த னென்பவன் நெடுநேரம் சிந்தித்

தான், கடைசியாகத் தன் பிரதமமந்திரியே நன்னெறியுடைய சத்புருஷனென்று தீர்மானித்து அவனைத் தன்னிடம் வரவழைத்து "ஏ அமைச்ச! நீ சர்வோத்தமனென்பதை நான் அறிவேன். என்னுடைய ராஜ்யத்துக்கு நீ பிரதமமந்திரியாக வந்தமர்ந்து இன்றைக்கு முப்பத்தைந்து வருஷங்களாகின்றன, இதுவரையில் நீ திரிப்திகரமாகவே நடந்துகொண்டாய், எனக்குப்பின்னும் அவ்வாறு நடந்துகொள்வாயென் றெண்ணுகின்றேன்.

பஞ்சபூத சம்பந்தமாக உள்ள இவ்வுடலைப்பலர் பலவிதமாக ஓம்புகிறார்கள், சிலர் பிறர்க்கு மனஸ்தாபமும் துன்பமுமில்லாத தொழிலைச்செய்து ஜீவிக்கின்றனர், சிலர் பலபேர்க்குத் துன்பத்தை யுண்டாக்கிப் பொருள்சம்பாதித்துத் தன்னையும், தன்குடும்பத்தாரையும் போஷிக்கின்றார்கள், கொலைபாதகன் துடிக்கப்பதைக்க உயிரைப்போக்கி அதனாற்கிடைக்கும் பொருளைக்கொண்டு ஜீவித்துக் களிக்கின்றான், திருடன் இராவும்பகலும் பிறர்பொருளிலேயே நாட்டமுடையவனாக விருந்து கன்னம்வைத்துப் பிழைக்கின்றான், வயிற்றுக்கில்லாத வஸ்தாதுகள் பலபேராகச்சேர்ந்து ஒருவனை அடித்து உபத்திரவஞ்செய்து அதனாற்கிடைக்கும் பொருளைக் கள்ளுக்கும் சாராயம் கஞ்சாவுக்கும் அழுது குடித்து வெறித்துத் திரிகிறார்கள், இன்னும் பலபேர் பலவிதமாக ஜீவிக்கின்றனர், மொத்தத்தில் எல்லோரும் ஏதோ ஒரு தொழிலைச்செய்து பிழைக்கிறார்களென்றாலும் ஈனத்தொழிலைக்கொண்டு பிழைக்கும் பிழைப்பை இவ்வுலகம் நன்றென்று ஏற்றுக்கொள்ளாது. அத்தகைய பாபிகட்கு மேலுலகத்தும் நரகப்பிராப்தமன்றி வேறென்ன உண்டாகும்? மனமறியப் பிறர்பொருளில் நாட்டமும், பொறாமையும்கொண்டு அசத்தியவழியாக அபகரிப்பது, அப்படிச் செய்தோனுக்கு நீங்காத அபகீர்த்தியை யுண்டாக்குமென்பதை நான் உனக்குச் சொல்லவும்வேண்டுமோ? மந்திரீ! நான் எனது சுற்றத்தாரை நம்பவில்லை. உன்னையே நம்பினேன், என்பிள்ளை ஜயந்தனுக்கு இப்போது பதினாறுண்டாயிற்றென்றாலும் இன்னும் அவனுக்கு அரசகாரியங்களின் ரஹஸ்யங்களொன்றும் தெரியாது, என்னுடைய தேகநிலைமையோ இப்போதோ இன்னும் சற்றுநேரத்திற்கோவென் றிருக்கிறது, ஆகவே என்னுடைய செல்வங்களையெல்லாம் உன்னுடைய வசத்தில் ஒப்புவித்தேன், அரசகாரியத்திற்கு வேண்டிய எல்லாவிஷயங்களையும் ஜயந்தனுக்குப் போதித்துச்சிங்காசனத்திலேற்றி உன்னுடைய முழுப்பார்வையை அவன்

மேற்செலுத்திக் காக்கவேண்டும் இந்தா அரண்மனைச்சாவி, ஜயந்த னுக்கு எல்லாச்சொத்தையும் இடத்தையும் காண்பித்துக்கொண்டு வருகையில், என்னுடைய ஏகாந்த மண்டபத்திற்குத் தெனபுறமு ள்ள அறையைமட்டும் அவனுக்குக்காட்டவேண்டாம், அதில் இரா ஜமோகினியின் படமொன்றிருக்கிறது, அப்படததிலுள்ள பெண் மணியை நான் விருமபி அதற்காக பட்டபாடு இவ்வளவவ்வளவ ல்ல, கடைசியில் அவள் தரிசனம் கிடைக்காமலேபோயிற்று, ஆக வே அவ்வறையை மட்டும் திறந்து காட்டவேண்டாம், காட்டினால மோசம்வரும், ஜயந்தன் அதைக்கண்டால் மோகமுற்றுக் கருத்த ழிவான், அதனால் உனக்கும் கஷ்டம்நேருமு, உன்னிடத்தில் நான் தெரிவிக்க வேண்டுவது இவ்வளவுதான், மந்திரீ! எனக்கு மேற்சு வாசமாயிருப்பதால் அதிகம் பேசக்கூடவில்லை. நீ அந்தப்புரஞ்செ ன்று ஜயந்தனை என்னிடமனுப்புவாய், அவனுக்குச் சில போதிக்க வேண்டி யிருக்கிறது என்றான், மதிமந்திரி அவ்வாறேசென்று ஜய ந்தனை யனுப்பினான்,

அண்ணா! ஜயந்தன் வணங்குகின்றேன்,

மகனே! சிரஞ்சீவியாயிரு,

என்னை அழைப்பித்தகாரணம் என்னோ? அறிய விரும்புகி ன்றேன்,

ஜயந்தா! என்னுடைய உயிர்நிலை பிரியுமுன், நீ சிறுவனாகை யால் உனக்குச்சில நீதிகளைச்சொல்ல எண்ணியிருக்கிறேன். வே றொன்று மில்லையப்பா,

கிருதார்த்தனாபினேன், அப்படியே அருள்செய்யவேண்டும்,

உன்னைப்பற்றி நமது பிரதமமந்திரியிடம் எல்லாம் சொல்லி யுள்ளேன் இனி அவரே உனக்குத்தாயுந்தந்தையும் குருவுமாவார் அவருடைய சொல்லை நீ தட்டலாகாது. அவர் நற்குணசீலர். புத் திமான் என்னுடைய அரசுக்குவந்தபின் அனேகநூதனகாரியங்க ளைச் செய்துகுடிகளாலும் என்னாலும் புகழப்பட்டவர். இந்நாள் தனையும் பரராஜ பயங்கரமின்றி அரசுசெலுத்தி வந்தேன், ஆகவே நீ அவருடைய ஒவ்வொரு சொற்களையும் வேதவாக்கியமாகக்கொ ண்டு நடந்தால் நீ சிறப்படைந்து வாழ்வாய்,

தேவரீருடைய கட்டளைப்படியே நடந்துகொள்வேன், தவ றேன்.



ஜயந்த !

நல்லோருடைய சேர்க்கையில் ஆசையும், பிறர்குணத்தில் விருப்பமும், குருவினிடத்தில்வணக்கமும், கல்வியில் அவாவும், தன்னுடைய மனைவியின் நலத்தில் இன்பமும், பழிதொழில்செய்வதில் அச்சமும், பரமனிடத்துப்பக்தியும், தமக்கு அபாயம் நேர்ந்தபோது பராக்கிரமமும், தீயோரினத்துப்பிரிவும் ஆகிய இக்குற்றமற்ற குணங்கள் எவரிடத் துள்ளனவோ அப்படிப்பட்ட மஹாபுருஷரே யாவராலும் வணங்கற்பாலர், மனமடங்குதலும், வேதாந்த விசாரமும், நல்லோர் சேர்க்கையும், இவற்றாலாகும்சந்தோஷமும் ஆகிய இந்நான்கும் பேரின்பவீட்டின் தலைவாயில் காப்போராம் எனவும், மகத்ஸேவையே முத்திக்குத்துவாரம்எனவும் கூறியவாறு, பெரியோரைத்துணைக்கோடலே வீடு பேற்றுக்குவழியாம். இம்மையில் அடக்கத்தைச்செய்து, புகழைவுண்டாக்கி மறுமையில் உயர்கதியி லுய்ப்பவராய் நல்லறிவுடையாரே நாட்டரெனப்படுவார் என்றும் கூறப்பட்டுள்ளது. அதனால் நல்லோருடைய சிநேகமே கொள்ளற்பாலது. அல்லார் நட்பு தள்ளற்பாலது. தான்தொழுது வழிபடும் தெய்வத்தினிடத்துச் செய்வதுபோலக் குருவினிடத்தும் எவனொருவன் நிர்மலபக்தியைச் செய்கின்றானோ அந்த மஹாத்மாவுக்கு எல்லாப்பொருளுங் கைகூடும்எனவும், ஒருவனுக்குக் குருவேபிரமன், குருவே திருமால், குருவே சிவபெருமானும். ஆதலின், அக்குருவையே நமஸ்கரிக்கின்றேன் எனவும் சொல்லியிருந்தால், ‘குருவாய்மொழியே திருவாய்மொழி’ என்றும் எண்ணி அக்குருவினடியைக் கனவிலுமறவாமல் அவருக்கு வந்தனைவழிபாடு தவறுதியற்றி அவரருளை நாடல்வேண்டும்.

மகனே! இன்னணம் நல்லொழுக்கங்கொண்ட அறிவுடையார்க்கு ஆபத்தில் தைரியமும், செல்வத்திற் பொறுமையும், வேந்தரவைக்கண் பேசுந்திறனும், போரிற்புறங்கொடாமையும், புகழ்த்தேட்டத்தில் விருப்பமும், கல்விகேள்விகளில் ஊற்றமும் இயலபில்மைந்த குணங்களாகும்.

அன்னோர் கைக்கு ஈகையும், தலைக்கு குருபாதசேவையும். முகத்துக்கு வாய்மையும், மனத்துக்குத் தூய்மையும், புயத்துக்கு வீரமும், செவிக்குக் கேள்வியுமே, அணியாகஅமைந்துஅழகுசெய்கின்றமையால், அவருக்கு வேறோரணிவேண்டுவதில்லை. பொன்னின் குடத்துக்குப் பொட்டிட்டுப்பார்க்கவேண்டுமோ? பூமிக்கு

மலைகளும்; கடல்களும், மரங்களும் பாரமல்ல, இப்பேர் மனமறிந்து அதனைப் பூர்த்திசெய்ய எவன் பிறவி உபயோகப்பட வில்லையோ அவனே உலகத்துக்குச்சுமையென்றும், பயமின்மை, சித்தநிர்மலம், தக்கார்க்கீதல், வேட்டல்பிறர்க்குத் துன்பஞ்செய்யாமைபொய்சொல்லாமை, கோபமின்மை, மனத்தையடக்கல், கோட் சொல்லாமை, பூததயை, மென்மை, வெட்கம், பெருந்தன்மை,தைரியம் அகத்தூய்மை, கர்வியாமை, ஆகிய இக்குணங்கள் தேவர்க ளடைதற்குரிய சம்பத்தைப் பெறத்தக்க யோக்கியதையுடன் பிறந்தவனுக்குண்டாகின்றன என்றும் கூறப்படலான், கொலை செய்யாமையும், பிறர்பொருள்மேல் மனஞ்செல்லுமிடத்து அதனை அடக்கியாளுதலும், தனக்கியலும் அளவினால் ஈவதும், அந்நியரான பெண்கள் விஷயமான பேச்சில் ஊமையாதலும், குருவினிடத்து வணக்கமும், சகல சாஸ்திரங்களையும் கற்பதும் இன்னு மிவைபோன்ற தூயகுணங்களுமெல்லாம் மேலோரிடத்தே உள்ளன. ஆனதுபற்றி அவரே எவ்வித மேம்பாட்டிற்கு முரியர்,

ஆபத்திலும் சம்பத்திலும் மேலோருடைய மனநிலையெத்தன்மையதெனின், தமக்குத் தலைபோகத்தக்க துன்பம் வருங்காலத்தும் அவர்மனம் மலைபோலச்சலியாது உறுதியாய் நிற்கும் இன்பம் வருங்காலத்தில், மலர்போல் மெல்லியதாகும், இன்னும் அம்மேலோர்.பிரியமும் நியாயமுமாண வழியில் ஜீவிப்பதேயன்றி அந்யாயார்ஜிதமான பொருளைக்கொண்டு காலங்கழிப்பார். உயிர்போதும் சமயமாயினும்தீயகாரியங்களைச்செய்யஒருமைப்படார், தம்மித்திரனாயினும் அவனைஇரவார்.அவனும்தனவீனனாயிருப்பவனாயின் அவனை ஒருபோதும் இரவார். புலிபசித்தால் புல்லைத்தின்னுமோ? கற்றூண் பெரும்பாரந் தாங்கினும் தளர்ந்து வளையுமோ? அதுபோல உயர்ந்தோர் பெருந்துன்பம் தம்மேல்வருங்கால் அதற்குடைந்து இழிதொழிலைப் புரிவரோ? புரியார் இன்னதொரு கல்ங்காநிலைமை அவருக்கு இயற்கையா யமைந்ததேயாம் அன்றியும் அம்மேலோர் தானத்தை இடம்பமாகச்செய்யாது மறைவாகச்செய்வர்,

மகனே? கவனித்துக்கேள்,

வண்டுகள் பொழில்களிலுள்ள மலர்களின் மதுவினைப் பருகுதல்போல, உயர்ந்தோர் பிறரிடத்துள்ள நர்குண நற்செய்கைகளை மட்டும் எடுத்துரைப்பர், காக்கை பொழிலிற்பூத்துச் செழித்த பல மரங்களிருப்பினும் அவற்றைவிட்டு வேப்பங்கனியை உண்ணக்கரு

துமாப்போல, இழிந்தோர் அந்நியரிடத்துள்ள துர்க்குணத்தையும் துஷ்டகிருத்தியத்தையுமே எடுத்துரைப்பர், ஆகையால் புல்லோரை விடுத்து நல்லோரையடுத்து உறவாடவேண்டும், பழுக்கக்காய்ச்சிய இரும்பில் நீர்த்துளியைத்தெறித்தால் நீரென்னும் பெயரும் அற்றுப்போகின்றதன்றே? அந்நீர்த்துளிதானே தாமரையிலைமேல் தங்கியபோது முத்தினது தோற்றத்தையடைகிறது பின்னும் அந்நீர்த்துளி கடலிப்பியின்வாய் விழுமாயின் விலைபெற்ற முத்தாகவே மாறுகின்றது இவ்வாறே அதம-மத்திம-உத்தமர்களின் விருத்தியும் இருக்கின்றது ஆதலால் மேலோர் சேர்க்கையே கொள்ளத்தக்கது,

என்றிவ்வாறு சோமகாந்தன் சொல்லிக்கொண் டிருக்கையிலேயே மேற்சுவாசம்கண்டுவிட்டது கண்கள் பஞ்சடைந்தன,கடைவாய் ஒருவாறு கோரமாய் அசைந்தது, ஒரு நிமிஷத்திற்கெல்லாம் அவன் உயிர்போயிற்று,

சிறுவனாகிய ஜயந்தன் விம்மிவிம்மி யழுதான், மதிமந்திரியும் கண்ணீர்விட்டுக் கலங்கினானெனினும் பின்பொருவாறுதேறி இளவரசனைத்தேற்றி அவனைக்கொண்டு ஈமக்கடனாற்றிவைத்தான்,

பின்னர் சோமகாந்தனுடைய குமாரனாகிய ஜயந்தனென்பவன் கல்விபயிலல்-குதிரைஏற்றம்-யானையேற்றம் - வில்வித்தைமுதலியன கற்றுத் தேறுவதற்குச் சிலவருடங்கள் சென்றன, இப்போது இவனுக்கு இருபதாவது வயது நிரம்பியது,

மந்திரி கிரமப்படி விஜயனுக்கு நன்னாளொன்றில் சிங்காசனத்தேற்றுவித்து (பிரஜைகளெல்லாம் ஜயஜயவிஜயீபவா) என்றுவாழ்த்த முடிசூட்டுவித்தனன்; முடிசூட்டுவித்த மூன்றுநாள் பிரதான மந்திரியாகிய சம்புமான் அரசகுமாரனைநோக்கி அரசே உம்முடைய தந்தை உயிர்நீங்குந் தருணத்தே தங்களைக் காக்கவேண்டிய முறைமையினை எனக்கறிவித்துள்ளார், அதன்படியே நான்நடந்துகொள்ள வேண்டியவனாயிருக்கின்றேன், ஆகவே என்னோடு தயைசெய்துவந்து தங்களுக்குச்சுதந்த்ரமானபொருள்களும், அவைகள் இருக்குமிடங்களும் காண்பீர்களாகவென்றான்,

ஜயந்தன் அங்ஙனமேயாகுகவென்று ஆடையாலங்கிருதனாய் மந்திரியுடன் புறப்பட்டான், மந்திரி அரசே!இது அரசிறைமண்டபம், இஃது அமைச்சியல் மண்டபம், என்று முறையே முரசெறி

மண்டபம், மூன்றுறுமண்டபம், அத்தாணிமண்டபம், வித்தார மண்டபம், சித்திரமண்டபம், விசித்திரமண்டபம், ஆராய்ச்சிமண்டபம், தேராயமண்டபம், பட்டி மண்டபம், குட்டிமமண்டபம், கலைபயில் மண்டபம், கழகமண்டபம், கல்விமண்டபம், செல்வமண்டபம், விநோதமண்டபம், மனோரதமண்டபம், சிலம்பமண்டபம், திறலறிமண்டபம், அலங்காரமண்டபம், ஆசாரமண்டபம், ஆடல் மண்டபம், பாடல்மண்டபம், தேவமண்டபம், சேவல்மண்டபமுதலிய மண்டபங்களும்,—அன்னசாலை, ஆயுதசாலை, எழுததறிசாலை, ஏகாந்தசாலை, நாடகசாலை, பாடகசாலை, மந்திரசாலை, யந்திரசாலை, தேரணிசாலை, தோரணசாலை, வசந்தசாலை, வாகனசாலை, முதலிய சாலைகளும்,—கணக்கறி தெற்றி, வழக்கறிதெற்றி, கூடத்தெற்றி, மாடத்தெற்றி, வாதத்தெற்றி, கீதத்தெற்றி, முதலியதெற்றிகளும்,—நீதிமன்றம், நியாயமன்றம், நல்லோர்மன்றம், வல்லோர்மன்றமுதலிய மன்றங்களும்,—தேவர் வாழ்பொது, காவலர்சேர்பொது, ஊரார்சேர்பொது, நேரலர்பேர்பொது, கற்றவர்முதலாமற்றவர் யாரும் நித்தமுங்கூடும் வித்தகப்பொதுக்களும், சதுக்கமுஞ் சந்தியும் விதப்பருமிடங்களும், செய்குன்றுகளும்திருந்து சூளிகைகளும், கோபுரநிலைகளும், கூடமாடங்களும், நெடுந்தேர்ச்சாலை முதலியனவும் முறையே காட்டிக்கொண்டு வருகையில், ஏகாந்த மண்டபத்திற்குத் தென்புறமுள்ள ஓருன்னதமான அறையைக்காட்டாது அதற்குப்புறம்பேயுள்ள மற்றோரறையைப்பற்றி மந்திரி பிரஸ்தாபித்தபோது, ஜயந்தன் அமைச்சன்காட்டாத அறையைப் பற்றி வினவினான்.

சம்புமான்.—வேந்தே! அதைப்பற்றிக் கேட்காதிருந்தால் உமக்கும் எனக்கும் நன்மை பயக்கும்.

ஜயந்தன்,—நம்மிருவருக்கும் தீமை பயப்பதாகிய யாதோ ஒன்று அவ்வறையிலிருப்பதாக உன்சொல்லாலுணர்ந்தேன் அது யாது? அறிவித்தல்வேண்டும்.

சம்புமான்.—அரச! தான்சாகமருந்துண்பாருமுண்டா? அங்கே ஏதோ ஒரு இரகசியமிருந்ததான அதைத்தங்களுக்குச் சொல்லலாகாதென்றிருக்கிறேன், அதைப்பற்றி மற்றுமொருகால் பீடிக்கவேண்டாம்,

ஜயந்தன்.—அறிவின்மிக்க அமைச்ச!உம்மைப் பார்க்கிலும் நான் புத்தியிற் சிறந்தவனன்று. இராஜாங்க சுமையைநான்சுமந்து

கொண்டு அரசனென்னும் பட்டப்பெயரை உம்மாற்றுங்கியுள்ள எமக்கு என் இராச்சியத்திலுள்ள அந்தரங்கம் தெரியாதிருக்கலாகுமோ? நம்மிருவருக்கும் துன்பம் பயப்பதாகிய ஒன்று அது மற்றவர்க்கும் அங்ஙனமே செய்யுமன்றோ? ஆகவே அதை நான் அவசியம் பார்க்கவே வேண்டும், தடைசெய்யாமல் அச்கதவைத் திறந்துவிடும்,

சம்புமான்,—அதைக் காட்டவேண்டுமென்பதும்காட்டக்கூடாதென்பதும் என்னுடைய அபிப்பிராயமன்று, தங்கள் தந்தையார் இறக்குந் தறுவாயில் எனக்கு ஆக்ஞை செய்ததாகும்,தங்கள் தந்தை மொழியைத்தடுப்பது தங்கள் சம்மதமானுல் தங்களுக்கு நான் சொல்லப்போவதென்னவிருக்கிறது?

ஜயந்தன்:—என் தந்தையார் அவ்வறையை யெனக்குக்காட்ட வேண்டாமென்றுரே அப்போது நீவிர் அவ்வறையிலுள்ளது இன்னதென்றும், அதைத்திறந்துபார்ப்பதனுல் நமக்குண்டாகும் தீங்கு இன்னதென்றும் தங்களுக்குத் தெரிந்துதானே இருக்கும், அதை விவரித்தால்அதன்மேல்என்யோசனையைத்தெரிவிக்கின்றேன், உள்ளப்டி உரைக்கவேண்டும்,

சம்புமான்;—அரசே! அதில் ஜோதிஷ்புரத்தரசகுமாரியாகிய இராஜமோஹினியின் சித்திரப்படமொன் றிருக்கின்றதாம், அதைத்தாங்கள் திருஷ்டித்தால் மனமதிரிந்து, அரசகாரியம், கெடுமென்றும் தங்கள் தந்தை எனக்குத் தெரிவித்திருக்கிறுர். இதுதான் நடந்தவிஷயம்.

ஜயந்தன்:—இதென்ன புதுமை! சித்திரப்படத்தைக் கண்டு மோகிப்பவரும்உண்டோ? இதற்கேமனம் வேறுபடுமானுல் நானென்ன அரசகாரியத்தைப் பார்க்கப்போகின்றேன்? இது வீண்கலவரமேயாம், நீர் அஞ்சாது திறமின், அச்சித்திரமோஹினியைக் காண்போம், (என்று பிடிவாதம் செய்தான்.)

சம்புமான்சின்னேரம்யோசித்தானெனினும், அரசனுக்கினேதன்தலைமேல் கொடிதாக வந்தேறுமென்றஞ்சி கபாடத்தைத் திறந்தான். திறக்குமுன்ஜயந்தன்உட்சென்றுன். மந்திரிஉட்செல்லுமுன் "ஹா! மோஹினி! என்னபேரழகியோ" என்னும்வார்த்தைஅவ்வறையினின்றுண்டாயிற்று. காரியம் கெட்டுப்போயிற்றென்று மந்திரி உட்சென்றபோது விழித்தகண் விழித்தபடியே ஜயந்தன் அப்படத்தைத்தழுவியவாறு மூர்ச்சைபோயிருந்தான். அதைக்கண்ட

மந்திரிதிடுக்கிட்டு அலறி அரசகுமாரனுக்கு சயித்தியோபசாரம் செய்துதேற்றத்தேறினன்.

ஜயந்தன்:—நீசொன்னசொல் உண்மையாயிற்று. என் அறிவழிந்தேன் ஆயினும் இத்தகைய கட்டழகியைக் காணும் எவர்தான்மனமழியார்? என்தந்தையர் தெரிந்தேசொன்னார். இவளே என் மனையாட்டி, இவளே என்பட்டத்தரசியாவள். வேறொருபெண்ணை நான்கனவிலும் எண்ணேன் இனி ஒருபோதும் இங்குநில்லேன். இப்போதே புறப்படுகின்றேன். மனமிருந்தால் நீரும் எனக்குத்துணையாகப்புறப்படும் என்றான்.

அரசகுமாரனைத்தனியேவிட மதிமந்திரிக்கு எவ்வளவும் சம்மதியில்லாமல்தானும்உடன்வருவதாகக்கூறி நாம்ஜோதிஷ்புரத்திற்கு எவ்வாறு செல்லல்வேண்டும் என்பதைப்பற்றி நீளயோசித்து ஜயந்தனைநோக்கி அரச! நாம் இராஜமோஹினியைக்காணவேண்டுமானால் அவள் பிரியப்படத்தக்க வஸ்துக்களை நாம் சேகரித்துக் கொள்ளவேண்டும். அவள் பொன்னையன்றிப் பிறபொருளில் இச்சையில்லாதவளென்று கேள்வி. ஆகவே இப்போது நம்மிடத்துள்ள பதினாயிரம் பவுன் பொன்னைக்கொண்டு விசித்திர வேலைப்பாடுடைய நவீனசாமான்கள்செய்து எடுத்துக்கொண்டு போவோமானால் பின்னர் ஈசுவரன் விட்டவழியாகிறது என்றான், காதலைவிடப் பதினாயிரம்பொன் அதிகமாகத்தோன்றுமோ? தோன்றாது. உம்மிஷ்டப்படியே செய்யுங்களென்று வேந்தன் கட்டளையிட்டான். ஒரே மாதத்தில்பெருமிதமான அவ்வளவுபொன்னையும் எண்ணிறந்த கம்மாளர்களைக்கொண்டு பற்பலவிதமான உன்னத சாமான்கள் செய்வித்துக்கொண்டு படகேறிச் சென்றனர்.

நாற்பத்தைந்தாநாள் ஜோதிஷ்புரத்தைக்குறுகினர்.கரையைவிட்டிறங்குமுன் இருவரும்வர்த்தகசோலம்பூண்டனர். மந்திரி அரசகுமாரனைப் படகிலேயே யிருக்கச்செய்து நான் ஒருவனே சென்று காரியம் அனுகூலப்படுமார்க்கத்தைத் தேடுகின்றேன், முடியாதபக்ஷத்தில். அதன்பின் நீவிர்பிரவேசிக்கலாம்என்று அமைச்சன் சில சாமன்களை எடுத்துக்கொண்டுகப்பலைவிட்டுக் கரையிறங்கிச்சென்று இராஜமோஹினியின்அரண்மனையைக்குறுகிப்பலகாவலாளர்களைக் கடந்து இருபுறமுஞ் சாலைகளையுடைய வழியேநடந்துகொண்டிருந்தான். அச்சாலைக்குத் தென்புறத்தே ஒருதடாகமிருந்தது. அதில் ஒருபருவப்பெண்பொற்குடமிட்டுஜலம்மொண்டுகொண்டிருந்தாள்.

இம்மந்திரிவர்த்தகன் அப்பெண்ணருகிற்சென்று அம்மா! அரசகுமாரியின் அந்தப்புரம் இன்னு மெவ்வளவு தூரமிருக்கின்றதெனன, அவள் நீவியார்? எத்தேசத்தவர்? யாதுகாரணமாகவந்தீர்? என்று வினவினள். அதற்கவன் "அம்மா என்ஜனனதேசம் விவர்த்தநகர். என்பெயர்மல்லையன். நானொருவர்த்தகன். பொன்னாற் செய்யப்பட்ட வேலைப்பாடுடைய பலவகைச் சாமான்கள் கொண்டுவந்திருக்கிறேன். என்று,தான்கொண்டுபோனமூட்டையை அங்கிறக்கி அவளுக்கு ஒவ்வொன்றாகக் காண்பித்தான். அவற்றை அப்பெண்பார்த்து வியந்து இது இராஜகுமாரியின் அரண்மனையிலில்லாத நவீன சாமான்களாயிருப்பதால் உமக்கு அதிகம் செலவாகலாம். நீர் என்னுடன்வாரும். அரசகுமாரி யிருக்குமிடஞ் செல்வோமென்று அவனை அழைத்துச்சென்றாள்.

இராஜமோஹினிதாதியர்புடைசூழ ஒருமஹமலால் தைக்கப்பட்டு நாற்புறமும் பொற்சரிகை லடியால் அழகுசெய்திருந்தசோபாவில் உட்கார்ந்திருந்தாள், இப்போது மந்திரியாகிய சம்புமானுக்கு 68-வயதாயிற்றெனினும், இராஜமோஹினியைக் கண்டவுடனேநடந்துகொண்டிருந்த கால்கள்நின்றுவிட்டன. கண்ணினிடையிலுள்ளகருவிழிஇப்படியப்படி அசையவில்லைதலைகிறுகிறுத்தான் அப்போதுபதினாறுவயதுடைய பாலகுமாரனுக்குள்ளசேஷ்டைகளெல்லாம் அவனுக்குவந்துவிட்டது. ஆயினும் புத்திமானாகையால் நிதானித்துநடந்தான். ஆஹா! என்னஅழகு! சாதாரணமோஹினிக்கேஉலகம் மயங்குமென்றால், இந்தஇராஜமோஹினியைக்கண்டு யார்தான்மயங்காத தீரர்கள் வெறும் வார்த்தையாக ஒருமனிதன் இருப்பானென்று சொல்லிக்கொள்ளலாமேயொழிய அனுபவத்தில் நிலைக்காது இவளுக்கு நாம்கண்ட ஸ்திரீகளில் யாரைநிகராகச் சொல்லலாம், சீச்சீ! நாம் நினைப்பது அறிவீனம்! இந்த அழகொழுகு முகத்தாளுக்கு, அரிமனைவியும், அயன்பெண்ஜாதியும், இந்திரனுடைய தேவியும் மற்றைக்கந்தர்வஸ்திரீகளும் நிகராவரோ? என்றின்னணம் பலவாறுநினைத்து நினைத்துத்தேங்கிதான்கொண்டு சென்ற சாமான்கட்டையவிழ்க்க நெடுநேரஞ்சென்றது,

இராஜமோஹினி:—யார்ஓய் என்னசாமான் கொண்டுவந்திருக்கிறாய், எந்நேரம், சீக்கிரம் கட்டையவிழேன், கிழவா! ஜடுதியிற் காட்டு.

சம்புமான்:—அம்மணீ! சித்தம், அப்படியேஇதோபாருங்கள்.

என்று ஒவ்வொன்றாய்க் காட்டினான்.

இராஜமோஹினி பொன்னாற் செய்யப்பட்ட பல பதுமைகளையும், அன்னாசி, வாழை, பலா முதலிய பழவகைகளையும் பிறவற்றையும் வெகு அவாவோடு வாங்கிவைத்துக்கொண்டு இன்னுமிருந்தால் கொண்டுவா எல்லாவற்றையும்நானே எடுத்துககொண்டு தக்கவிலை தருகிறேன் என்றாள்.

காரியம் பாதிக்குமேல் ஜயமாயிற்றென்று தன்னுள் சந்தோஷித்த மந்திரி'' ராஜேஸ்வரி! இவ்வூரில் அருமையான சாமான்களில்லையாகுமோ ஆகாதோ என்னும் சந்தேகத்தால் தாழ்ந்தசாமான்களிற் சிலவற்றைக்கொண்டுவந்தேன். உயர்ந்தசாமான்களெல்லாம் கப்பலில் நிரம்பியிருக்கிறது. என்னுடைய தலைவரும் அங்கிருக்கின்றார். எங்களோடு கூடவந்த ஆட்களிருவருக்குதேக ஜாட்டியமுண்டானதால் இங்கு அவற்றைக் கொண்டுவர முடியவில்லை. அன்னியரிடமும் அவற்றைக்கொடுக்க என் தலைவன் இசையான் என்றான்.

இராஜமோஹினி, அப்படியானால் நாமேவருகின்றோமென்று இரண்டு தாதியரோடு ஒருதந்தவண்டியிலேறிக்கொண்டு கரையருகில்வந்து கப்பலைக்கண்டு வண்டியைவிட் டிறங்கி! கப்பலிற் சார்த்தியிருந்த ஏணிவழியே யேறி உட்சென்றாள்.

இராஜமோஹினியைக்கண்டவுடனே ஜயந்தன் தன்னைமறந்தானென்று சுருக்கிக் கூறிமுடித்து நமதுகதையை நடத்துவோம். தள்ளாத விருத்தனாகிய மந்திரியே மயங்கினானென்றால் அரசகுமாரனுடையபுத்தி எவ்வளவு மயங்கி யிருக்குமென்பதைநாம்அதிகமாகக் கூறவேண்டுவதில்லை,மேலும்தான்கோரிவந்தபொருள் தன்வசப்பட்டு விட்டதென்னும சந்தோஷத்தால் அவன் அதிகமாக நெடுநேரம் தன்னை மறந்திருக்கவில்லை என்று கொள்வதே சிலாக்கியமாம்,

மதிமந்திரி-தாதியரிருவர், ராஜமோஹினி ஆகநால்வரும் கப்பலிலேறினார்கள் சம்புமான் அரசனைநோக்கித் தலைவரே (இராஜமோகினியைச் சுட்டிக்காட்டி) இவர்தான் இவ்வூர் வேந்தரின்செல்வக்குமாரத்தியாவார, இவர்க்குப் பலசாமான்கள் தேவையாயிருப்பதால்கீழ்த்தட்டில்வைத்துள்ளசாமான்கள்ஒவ்வொன்றையும் பொறுமையாகக் காட்டுங்கள் என்றான், அரசியும் தாதிகளும் உடனே சென்றனர்.



மேற்றட்டிலிருந்த மகிமந்திரி வெகு விரைவாய் கப்பலிற்கட்டப்பட்டிருந்த எல்லாப்பாய்களையும் விரித்து வெகுவேகமாய்க்கப்பலைச்செலுத்தினான், காற்றும் சகாயமாயிருந்ததால் கட்டுடியனைப்போல் கப்பல் அசைந்தாடி யோடிற்று.

கீழ்த்தட்டிலிருந்த இராஜமோகினி நவீனமானசாமான்களைப் பார்த்துக் களித்திருந்தாள், அவற்றையெல்லாம்பார்த்து முடிக்க நெடுநேர மாயிற்று. கடைசியாகத் தனக்குவேண்டிய சாமான்கள் இன்னின்னவையென்று ஒருஜாப்தாஎழுதிக்கொடுத்துவிட்டுஇன்று பொழுது சாய்ந்ததால் நாளை அவற்றின்தொகையாகிய இருபத்தையாயிரரூபாயை எமது ஆள்வசம் கொடுத்தனுப்புகின்றோம், நம்முடையஜாபிதாவிற்கண்டுள்ள சாமான்களை அனுப்புங்கள்என்றுவர்த்தகஅரசனிடம் விடைபெற்றுமேற்றட்டில்வந்தாள், கரைதுரைகள் ஒன்றும் காணப்படவில்லை, கப்பல் நடுக்கடலில் சென்றுகொண்டிருக்கக்கண்டு திடுக்கிட்டாள், தாதிகள் திகைத்தார்கள்.

இராஜமோஹினி மந்திரியைநோக்கிப்பெரியவரே! இதென்ன மோசம்! உம்முடைய தந்திர சக்திதானோ இது? பரராஜ பயங்கரனாகிய குணத்தமசனுடைய குமாரியென்பதை நீவிர் அறியீர்போலும், தேவரும், கப்பலை நிறுத்துங்கள், என்று அதட்டிக்கூறினாளேனும். அவள் உள்ள மட்டும் நடுங்கிக்கொண்டிருந்தது,

அரசகுமாரன் தன்னுடையபுதிய வேஷமாகிய வர்த்தககோலம் நீங்கி, இராஜஉடைதரித்துக்கொண்டுஇராஜமோகினிமுன் ஒரு யௌவன சுந்தரபுருஷனாகத்தோன்றி அவளுடைய மலரனும் மிருதுவாகிய வலக்கரத்தைப்பிடித்துக்கொண்டு குயிலினுமினியமொழியாய்! முனிவருமருளும் பெருவிழிபாய்! என்தேனே! திவ்யரசமே! நான்யார்தெரியுமோ? மூட்டையைமுதுகிற்சுமந்து, அரசர்கள் பிரபுக்கள்முதலினோர்இல்லங்கடோறும்திரிந்தலைந்துவாத்தகஞ்செய்து அதனால் ஜீவிப்பவனன்று, உந்தனைப்போல, நானும்விவர்த்தகர்க்கரசனாகிய சோமகாந்தனென்று மோர்மன்னனுடைய புதல்வனேயாக்கும், இனி உன் அச்சமொழிந்து, நின்னிடத்தே நெடுங்காதல்கொண்டு 400-மைல் தூரம் தேககஷ்டத்தையும்பொருட்செலவையும் பாராது வந்த என்னை அன்போடுநோக்கி ஆதரித்தல்வேண்டும். நீயே என்னுடையபட்டபுதேவியாவை என்று பல இனியவார்த்தைகள் மொழிந்தான்.

தன்னைக் களவாடிவந்தவன் தன்னைப்போல் ஒரு அரசகுடும்பத்திற் பிறந்தவனுயுள்ளமைபற்றி அவள் ஒருவாறு மகிழ்ந்தாளெனினும், தன்னைக்காணுத தந்தை தாயர் கவலுவதல்லாமல் தான் உலக நிந்தைக் குட்பட்டதைப்பற்றி மிகவருந்தினுள். பெண்பாலாகிய நாம் இனி வருந்தியதனுல் யாதுபயன்? இவ்வரசகுமாரன் நமக்கேற்ற அழகிற் சிறந்தவனுகவே காணப்படுகின்றுன். யாரையேனும் ஓ ராசபுதல்வனைக் கணவனுக வகிக்கவேண்டுவது நம்முடைய கடனென்றுலும், இது விவகாரப்பழுதான காரியமாய் விட்டது. நம்முடைய ஊழ்வினை இருந்தவாறென்னே! என்று இன்னணம் பல எண்ணங்கள் அவள்மனத்தே ஒன்றன்பின்னென்றுக எழுந்து வாட்டியது.

தங்களுக்கென்று கொண்டுவந்த போஜனசாமான்கள் முழுதும் செலவழிந்து விட்டது. அல்லாமலும் அரசகுமாரிக்கு நல்லுணவு தரவேண்டுமென்னுமெண்ணம் அரசனுக்குண்டாயிற்று. உடனே இடையிற்காணப்பட்டதோர் துறைமுகத்தருகே கப்பலைநிறுத்தி, உயர்ந்த வகையான போஜனபதார்த்தங்கள் வாங்கிக்கொண்டுவரும்படி மதிமந்திரியாகிய சம்புமானென்பவன் கப்பலை விட்டிறங்கினுன். சமுத்திரக்கரையில் இரண்டு விருத்தாப்பிய சந்நியாசிகள் நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் கரங்களில் இரண்டு புத்தகங்களிருந்தன. அவர்கள் சமுத்திரஜலம் மேலெழுந்து மோதுவதையும், கரையகத்தே நீர் வாழ்ஜந்துக்கள் வெண்மணலில் துளைசெய்தோடுவதையும் கண்டுமகிழ்ந்து நின்றனர். மந்திரி அச்சந்நியாசிகளுடைய கிழத்தன்மையினையும் தேசகாந்தியையும், கட்பார்வை மேனேக்கி நிற்றலையும், காவிவஸ்திரத்தின் பளபளப்பையுங் கண்டு அச்சமீக்கூர்ந்து இவர்கள் முக்காலமுமுணர்ந்த முனிபுங்கவர்களாயிருத்தல் வேண்டும். இவர் தம்மனமானது உலகமுகமாகத்திரும்பிற்றுபோலும். அதனுற்றுன் சமுத்திரக்காட்சிகளைக் கண்டு நிற்கின்றனர் என்று தன்னுளெண்ணினவனுகி அவாருகிற் சென்று வணங்கிக் கைகட்டி வாய்பொத்தி நின்று, தேவரீருக்கு * மஹேஸ்வரபூஜை ஆயிற்றே? நானெருசப்பற்பிரயாணி என்றுன்-அச்சந்நியாசிகளிருவரிலொருவர் மந்திரியை உற்றுநோக்கி அமைச்ச! நீமிகக்கருணையாளன். இந்நாள் தனையும் உன் அரசனுக்காகப் பிரயாசப்பட்டு அவனுல் விரும்பப்பட்ட இராஜமோகினியை அவன் சமீபத்தேகொண்டு வந்து சேர்த்தாயெனினும், இனி நடக்கப்போகும்விபரீதங்கள் இனைத்தெனநீஅறிவையோ?என்றுர்

* மஹேஸ்வரபூசை என்பது, போஜனம்செய்தற்கோர் பரியாயப் பெயர்.

சம்புமான்:—(மீண்டும் அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வணங்கி) ஜயனே! நேற்று நடந்தேறியவற்றை இன்று மறந்துள்ள இழிஞனாகிய நாயேன் இனிநடக்கப்போகும் எதிர்காலத்தைப்பற்றி யுணரும் சக்திஎனக்கெங்கிருந் துண்டாகும்? தங்களுடைய பாதசேவிதனாகிய அடியேற்கு இனி நிகழப்போகும் விஷயங்களை நான் உணருமாறு உள்ளபடி கூறியருளல் வேண்டும் (என்று வேண்டிக்கொண்டான்).

சந்நியாசி:—அமைச்ச! அதைத்தெரிந்து சொன்னால் நீதுன்பப்படவேண்டிவரும்.

சம்புமான்:—முக்காலங்களும் தெரிந்துரைக்கும் தங்களுக்கு எங்கள் விஷயமாக நேரவிருக்கும் துன்பவிஷயத்தினின்றும் எங்களைக்காத்தருளும் தன்மை தங்களால் முடியாததோ? இதைவிட அதிகமொன்றும் சொல்ல அடியேனுக்குத் தெரியவில்லை. குருமூர்த்திகளாகிய தாங்கள் என்மேற் கடைக்கண் சாத்தியருள வேண்டுமென்று மற்றுமொருகால் பணிந்து நின்றான்.

சந்நியாசிகளிருவரில் ஒருவர் மற்றொருவரை நோக்கி உதங்க! கப்பலிலுள்ளஜயந்தன் நாட்டருகேசென்றுகரையிலிறங்குகையில் அங்கேயாது நிகழும்?

உதங்கமுனி:—விசாக! ஜயந்தன் ஊருக்குட் செல்லுமுன் (அதாவது, கப்பலைவிட்டிரங்கியவுடனே அவனெதிரில் ஒரு பஞ்சவர்னக்குதிரையொன்றுவந்துநிற்கும். அதில்ஏறிச்சவாரிவிட அரசனுக்குப்பிரியமுண்டாகிப் பரிசெலுத்துதலில் தனக்குள்ள சமர்த்தை இராஜமோகினுக்குக்காட்டவேண்டுமென்னும் எண்ணமுடையவனாகி அதில்லேறுவான்.ஏறியவுடனே அச்குதிரைவாயுவேகமும் பின்னிடும்படியோடி அவனை ஒருதீவாந்தரத்திற் கொண்டு செல்லும். பின்னரவனைக்காண்பது கூடாதகாரியம்.

சம்புமான்:—என்னைப் பிழைப்பிக்கவந்த குருமூர்த்திகளே நான் அரசனை அவ்வாபத்தினின்றும் எவ்வாறு காப்பேன் திருவாய் மலர்ந்தருள வேண்டுகின்றேன்.

உதங்கமுனி:—அரசகுமாரன் குதிரைமேலேறியவுடன் மற்றொருவனும் உடனேறி அதனை நெற்றிக்குச்சரியாகத் துப்பாக்கி கொண்டு சுட்டால் அது இறந்துபடும்.

விசாகமுனி:—அவ்வாபத்தினின்றும் நீங்கினாலும் அரசனுக்கு மற்றோராபத்துண்டு. அதாவது, சிங்காதனத்தேறியுட்காருகை

யில்,மேலே பொற்சங்கிலியால் தூக்கிக் கட்டப்பட்டுள்ள நவரத்ந கிரீடத்தைத்தலைக்கு நேராகப்பொருந்தும்படி (வழக்கப் பிரகாரம்) பிராமணன் விடுகையில், அதிலொரு செந்தேளொன்றிருந்து அரசனைத்தீண்டும். உடனே வேந்தன் பஸ்பமாய்விடுவான்.

சம்புமான்:—ஐயோ! அத்தகைய ஆபத்தினின்றும் அரசனைப் பிழைக்கும் வழியை எனக்குத் தெரியச்சொல்லியருளல்வேண்டும் (என்று வேண்டிநின்றான்)

விசாகமுனி:—அமைச்ச! அந்தக்கிரீடம் அரசன் முடிமேல் வந்து படிந்தவுடனே கிரீடத்தை எட்டியுதைத்துத்தள்ளினால் அந்தச் செந்தேள் கீழேவிழுந்து அசைவறநிற்கும். உடனே அதைக் கொன்று சுட்டெரித்திடல்வேண்டும்.

உதங்கமுனி:—அந்தகண்டத்தினின்றும் அரசன் பிழைத்தானாயினும், வேந்தன் விவாகப்பந்தரி லுட்கார்ந்துகொண்டு இராஜமோஹினிக்கு மாங்கல்யம் சூட்டியபின்னர் (இவ்வரசன் முன் ஜனனத்தில் ஓரந்தணன்மேற் பழிசுமத்திய பாவமானது) ஒரு மாயப்பசுவாய் அவ்விவாகப் பந்தரிற்றோன்றி அரசனைக் கொம்பாற் குத்திக் கொன்றுவிடும்.

சம்புமான்:—ஐயனே!இதென்ன ஆபத்தின்மே லாபத்தாய் வந்து விளைகிறதே! இவ்வாபத்தினின்றும் அரசனைக்காக்குந் திறத்தைத் தெரிந்து சொல்லவேண்டும் என்று வேண்டினான்:

உதங்கமுனி:—சக்ரவர்த்தி விவாகப்பந்தலுக்குப் பதினறடி தூரத்தில் மாயப்பசுதோன்றும். இருவர்நீண்டதோர் கத்தியைக் கையிற்பிடித்துச் சர்வஜாக்கிரதையாகக்குறித்த விடத்தில் நின்றுகொண்டிருந்து அம்மாயப்பசு தோன்றிய அந்தக்கணத்திலேயே அதனிரண்டு கொம்புகளையும் துணித்தெறிதல்வேண்டும். துணித்த கொம்புகள் கீழேகிடக்க மாயப்பசு முன்னே எவ்வாறு திடீரென்று தோன்றியதோ அவ்வாறே ஜடுதியில் மறைந்துபோம்.

விசாகமுனி:—உதங்க! மாயப்பசுவுக்குத் தப்பிப்பிழைத்தாலும் அரசன் இராஜமோஹினியைக் கூடிச்சுகியான். மற்றோராபத்தும் உண்டு. அதாவது விவாககாரியம் நிறைவேறியபின் அந்தப்புரத்தில் ஆட்டககச்சேரி நடந்தேறும். இராஜமோஹினி குதூகுலத்தோடு அதில் ரமித்திருக்கையில், திடீரென்று தேகம் நடுக்கமெய்தி முகம்வெளுத்து முடிசாய்ந்து வீழ்ந்து இறந்துபடுவாள். இதுதான் கடைசி ஆபத்து என்றார்.

சம்புமான்:—குருமார்களே! அரசகுமாரிக்குநேரும் இம்மரணத்தினின்றும் அவளை உயிர்ப்பிக்கக்கூடுமோ?

விசாகமுனி:—கூடும். இராஜமோஹினி முடிசாய்ந்து கீழ் வீழ்ந்த அப்பொழுதே அவள் இறுக்கிக் கட்டப்பட்டுள்ள இரவிக்கையைச்சின்ன பின்னமாகக் கிழித்தெறிந்து, வலது தனத்தைக்கையாற்பற்றி முலைக்காம்பை நெருடி அக்காம்பின் அடிப்பாகத்தில் ஊசியாற் கீறி மூன்று துளி இரத்தத்தைப் பூமியிற் சிந்தியவுடனே அவள்மறுபடியும் நித்திரையினின்றும்விழித்தவள்போல் எழுந்து வெட்கி நிற்பாள். பின்பு அரசனுக்காவது அரசிக்காவது யாதோரபாய முமின்றி, புத்திரசந்தானமெய்தி சிரஞ்சீவிகளாய் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். இந்த தேவரகஸ்யத்தை நாங்கள் அறிவித்ததாகயாவரேனும் அரசனுக்குத்தெரிவிப்பாராயின் அவர் கல்லுருவாகக் கடவர் என்றார்.

மந்திரியாகிய சம்புமானுக்கு ஆநந்தமேலிட்டுக் கண்களை மூடிக் கைகூப்பி அச் சந்நியாசிகளை மனமாரவாழ்த்திக் கண்டிரந்து பார்க்கையில் அம்மஹாரிஷிகளை அங்குக்காணாது வருந்தி, கடைக்குச்சென்று போஜனபதார்த்தங்களை வாங்கிக்கொண்டு கப்பலிற்சென்றான். அரசன் இவ்வளவு காலதாமதமென்னென்ன வினவ, அமைச்சன் இவ்வூர் வளப்பத்தைச் சின்னேரம் கவனித்திருந்தேன் என்று பதில்கூறினான். எல்லோரும் உண்டானபின் கப்பலைக்கடத்தி விவர்த்த நகர்க்கரையை யடைந்தனர். அரசகுமாரனும், இராஜமோஹினியும், அமைச்சனும் படகைவிட்டிறங்கினவுடனே, கண்டவர்மையல் கொள்ளத்தக்க பஞ்சவர்ணமுடைய ஒரு குதிரைவந்து நின்றது. குதிரை ஏற்றத்தில் வல்ல அரசகுமாரன் அத்தெய்வப்புரவியைக் கண்டவுடனே, தனக்குப்பாரியையாகப்போகும் இராஜமோஹினி மெச்சிக்கொள்ளட்டுமென்று அதிலேறினான். உடனே மந்திரியும் அக்குதிரையின்மீதேறிமுன்னமே சித்தஞ்செய்து வைத்திருந்ததும். பாக்கிவேட்டு தீர்த்துக் கொன்றுகீழே வீழ்த்தினான். அரசகுமாரன் அச்சமுற்றுநின்று மந்திரியைநோக்கி இக்கிடைத்தற்கரிய தெய்வப்புரவியையொத்தஇதனை எதற்காகக்கொன்று வீழ்த்தினை? ஐயோ! என்மனமெல்லாம்துடிக்கிறதே என்று வினவ, அமைச்சன் கையமர்த்தி நடப்பதை யெல்லாம்பார்த்திரு என்றான். பின்னர், அரசன் வரவையறிந்த அரண்மனை உத்தியோகஸ்தர்கள் சகலாடம்பரத்துடன் எதிர்கொண்டழைத்துச் செல்லவந்தனர். இராஜமோஹினி மூடுபல்லக்கிலேறினள் அரசனும் அமைச்சனும் குதிரையிலேறிச் சென்றனர்.

இப்போது அரசன் முதலியயாவரும் உண்டிளைப்பாறி சயனித்துக் கொண்டனரென்று வைத்துக்கொள்வோம்.

மறுநாட்காலை இளவரசன் சிங்காசனத்தில் வந்தமர்ந்தான்-மந்திரிகள். பிரபுக்கள், தண்டத்தலைவர், யூகைத்தலைவர்முதலினோர் வந்துட்கார்ந்தனர். நெடுநாட்களாக சபையில்லாதிருந்தால் தாமரையில்லாத்தடாகம்போன்றிருந்தது. இப்போது இந்திரசபையைப்போற் பிரகாசித்தது. அரசன்சிங்காசனத் தேறியவுடனே பிரஜைகளெல்லோரும், ஜய ஜயவிஜயீபவ, என்று ஆசிகூறினர் பொற்சங்கிலியிற்றொடுத்திருந்த ரத்தினகிரீடத்தை அரசன்முடிக்குச்சரியாகவந்து பொருந்த அவிழ்த்துவிட்டனர். அது அரசன் முடிமீதுவந்து பொருந்துவதற்குமுன் சம்புமாலென்னும் அமைச்சன் திடுக்கிட்டு விரைந்தெழுந்து அவ்வரசன் முடியை வலதுகாலால் எட்டி யோருதை யுதைத்தான். சபையிலிருந்தவர்களெல்லாம் "ஹா-ஹா! கொடிதுகொடி" தென்றனர். அரசனும் திப்பிரமை யடைந்தானெனினும் மந்திரிஅவ்வாறு செய்வதற்கு யாதோ ஒருகாரணமிருக்குமென்னும் உறுதியால் சின்னேரம் பொறுமையாயிருந்தான். உடனேமந்திரி கீழிறங்கிக்கிரீடம் விழுந்து கிடக்குமிடம்போய் அதைப்புறட்ட, அதினின்றும்மிகச் சிறிய செந்தேளொன்று தரையில்ஊர்ந்து செல்வதைக் கண்டு அமைச்சன் அதை ஒரு கூரிய கத்தியால் இரண்டு துண்டாகச் சிதைத்து நெருப்பிட்டுக்கொளுத்தினன். இப்புதுமையைக்கண்ட அரசன்முதல் அனைவரும் மந்திரி முன்னமே தெரிந்து செய்ததைப்பற்றிச் சந்தோஷித்தனர்.

சிறிதுநாட்கள் சென்றபின் ஜயந்தன்விவாகத்தைப்பற்றி நன்றொளொன்றுநியமித்து, இராஜமோஹினியின்தந்தைக்கொரு கடிதமெழுதினர். அவ்வரசன் தன்மகள் திடீரென்று காணாதுபோனதைப்பற்றிவருந்தினவனாகிப் பலவேவுகாரரைப் போக்கி எங்குந் தேடச்செய்தும் புலம்கிடைக்காமல் பெருங்கவலைக்குள்ளாயிருந்த வேந்தன் ஜயந்தனுடைய கடிதத்தைக்கண்டுடனேவியாகூலமொழிந்து விவாகதினத்திற்கு முந்தி தீர்த்தநகர்க்கு வந்தனன். நடந்தேறிய விஷயத்தைத் தெரிந்துகொண்டது மல்லாமல், தன்புதல்விக்கும் ஜயந்தனை விவாகம்செய்துகொள்ள பூரணவிருப்பமிருந்தமையால் அரசனும் அதற்குச் சம்மதித்தான்.

விவாகத்திற்கு வேண்டியவைகளெல்லாம் சித்தமாயின. ஜயந்தனும், இராஜமோஹினியும் மணவறையில் உட்கார்ந்து கணகணவென்று பேரிசைமுழங்க. மங்கலவாத்தியங்கள் கோஷிக்க, பிராமணர்கள் ஆசிகூற, பிரபுக்கள்முதலினோர் மலர்தூவ ஜயந்தன் இராஜமோஹினி திருக்கழுத்தில் மாங்கல்யத்தைச்சூட்டினன்.

ஹா! என்ன ஆச்சரியம்! உதங்கமுனி கூறியபடி விவாகப் பந்தலருகே திடீரென்று நீண்ட கூரிய கொம்பினையுடையதோர்

மாயப்பசுதோன்றியது. மந்திரியும் மற்றொருவீரனுமாக அதன் கொம்பைத் துணித் தெறிந்தனர். பிரஜைகளெல்லாம் கொடிது கொடிது மஹாகொடிது. விவாகசுபகாலத்தில் கோஹத்தி செய்தது தகாது. ஆயினும் இங்கு பசுவருவானேன் என்று சொல்லிக் கொண் டிருக்கையிலேயே அப்பசுமறைந்தது. எல்லோரும் மயங்கினர் பலர் பலவிதமாக மந்திரியைத்தூஷித்தனர். அரசனோ ஏதோதக்ககாரணமில்லாமல் நமது அமைச்சன் இக்கோஹத்தி செய்யானென்று நினைத்துக்கொண்டிருந்தான்.

விவாக முடிந்தவுடனே எல்லோரும் போஜனஞ்செய்துதாம்பூல மருந்தி களித்திருந்தனர். அன்று சாயரக்ஷை அந்தப்புறத்தே ஆட்டக்கச்சேரி நடந்தேறியது. அதை இராஜமோஹினி உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். சின்னேரத்திற் கெல்லாம் அவளுடையமுகம் வெளுப்புற்று கிருகிரென்று சுழன்றுகீழே வீழ்ந்து போனாள். இதை எங்கோ ஒளிந்து பார்த்துக்கொண்டிருந்த மதிமந்திரி ஓடோடியும் வந்து இராஜமோஹினியையெடுத்துத் தன் மார்புமேற்சாற்றிக்கொண்டு அவள் அணிந்திருந்தஇரவிக்கையைச் சின்னபின்னமாகக்கிழித்தெறிந்துமார்பைக்கையிற்பற்றி, முலைக்காம்பை நெருடி, காம்பின்கீழ் ஊசியாற்கிறி உதிரத்தைக் கீழே ஒழுகவிட்டான். இராஜமோஹினி நித்திரையினின்று மெழுந்தவள்போல் விழித்துக்கொண்டு தானொரு அன்னியபுருஷனுடைய மார்பகத்தே சார்ந்து கொண்டிருப் பதையுணர்ந்து திடுக் கிட்டு எழுந்து நாணி ஒதுங்கி நின்றாள்.

இவ்விஷயம் அரசகுமாரனுக்குத் தெரிந்து மனோவியாகூலப்பட்டு மந்திரியைப்பிடித்துக் காவலில்வைக்கும்படி உத்தரவுசெய்தான். காவலர் அங்ஙனமே செய்தனர். மறுநாள் அரசன் கொலுவமர்ந்து மந்திரியைச் சபைமுன்கொணர்ந்துநிறுத்தும்படிச்செய்து அவனை அரசன்நோக்கிஇராஜதுரோகி! நேற்று நீ செய்தகாரியம் தக்கதோ? நீ ஒவ்வொன்றாகச் செய்துவந்தகாரியத்தை அவ்வப்போது நான் கண்டிக்காமல் மௌனஞ்சாதித்திருந்ததனாலன்றோ யாரும் செயற்கஞ்சும் காரியத்தை நேற்றுச்செய்யத்துணிந்தனை? சிச்சீ உன்முகத்தைப்பார்க்கவும் எனக்கு அறுவறுப்பாயிருக்கிறது இன்றோடு உன் ஆயுள்நாளும் முடிந்ததால் உனக்குத் தூக்குத் தண்டனை விதித்தோம். என்று இவ்வாறு அரசன்வாயினின்றும் இச்சொல் வந்த வுடனே கொலைஞர் மூவர் அமைச்சன் கரத்தைப் பற்றிப் பிணித்து ஈர்த்துச் செல்கையில் அவன் அரசனிடத்து ஒருவிஷயம், விண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டி

யிருப்பதால் தயைசெய்து என்கருத்தை நிறைவேற்ற வேண்டு மென்று அக்கோலேனுரைக்கேட்க, அவர்கள் இது அரசமுறையா தலால் அவ்வாறே மீண்டும் அமைச்சனை அரசனிடம் கொண்டு வந்தனர்.

மந்திரி அரசனையும், சபையோர்களையும் நோக்கித் தான் போஜனபதார்த்தங்கள் வாங்கும்பொருட்டுக் கடைக்குப்போ யிருந்தபோது இரண்டு முனிவர்கள்சொன்ன தேவரஹஸ்யமும், தான் அரசனுக்கு உற்ற ஒவ்வொரு ஆபத்துக்களையும் நீக்கிக்காத் தயாவும் சாங்கோபாங்கமாக வெடுத்துக்கூறி முடித்ததே அங்கு மந்திரியைக்காணேம். மந்திரி யிருந்தவிடத்தில் ஓர் கருங்கல் இருந்தது. அதைக்கண்டு எல்லோரும் வியப்புற்றனர்.

அரசன் ஐயா! உண்மையறியாது போனேனே! எனக்காக எவ்வளவோ பிரயாசப்பட்டு தெய்வரகஸ்ய முணர்ந்த மந்திரியை இழந்தேன். இனி இக்கல்லுருவம் ஒழுந்து நமது மந்திரியைக் காண்பது எப்படி? நன்றிசெய்தவனுக்கே தீங்குசெய்த மாபாவி யானேனே. இந்த கொடுமைக்கு என்செய்வேனென்று மிகவரு ந்தினன். இவ்வாறே இராஜமோஹினியும் வருந்தா நின்றாள்.

பின்பொருநாள் அரசன் அக்கற்சிலையைப் பெயர்த்துக் கொண்டு போய்த் தன் பள்ளியறையில் வைத்துக்கொண்டு நாள் தோறும் காலையிலெழுந்ததே ஆலயத்திற்குச்சென்று கடவுளை வணங்குவதுபோல, அரசனும் அரசியும் மந்திரியாகிய கற்சிலையி னருகேவந்து அதை வணங்கி ஓ என்தந்தைபோல்பவரே! உம் மை எப்போது பழயபடி காண்பேன்? எப்போது என்மனேதுக் கம் அகலும் என்று அரசன் சொல்வான். இராஜமோஹினி அக் கற்சிலையை நோக்கி என் மணாளர் என்னைக் காதலித்தபோது எவ் வளவோ பிரயாசப்பட்டு என்னை அவர்க்கு மனைவியாக்கி வைத்த ஏ உத்தமபுருஷரே! உம்மை எப்போது பழயபடி மந்திரியாகக் கண்டு களிக்கப்போகின்றேன். தெய்வமே! சீக்கிரம் அருள்பா லிக்கவேண்டும் என்று பிரார்த்திப்பாள்.

இவ்வாறு ஆறுவருஷங்கள் கழிந்தன. அரசனுக்கு ஒரே காலத்தில் இரட்டைப் பிள்ளைகளாக இரண்டு ஆண்குழந்தைகள் பிறந்தன. அவற்றைக் கண்ணுங்கருத்துமாய் வளர்த்துப் பிள்ளை கலிதீர்ந்தவர்களாயின ரெனினும் மந்திரி கற்சிலையானதுக்கம் அவர்கள் மனத்தே நீங்கா திருந்தது.

இளவரசி ஒருநாட்காலையில் தாதியர்களோடு ஆலயத்திற்குச் சென்றிருந்தாள். அரசன் பள்ளியறையிலிருந்து தன்னுடைய

இரட்டைப்பிள்ளைகள் தவழ்ந்து விளையாடுவதைக்கண்டு களித்தி ருந்தபோது, எதிரிலிருந்த கற்சிலையைநோக்கி கண்ணீர்விட்ட ழுது ஓ தாயினுங் கருணையுடைய தயாளுவாகிய மதிமந்திரியே! என்வயிற்றிற் பிறந்த இப்பிள்ளைகளைப்பார்த்து நான் களிப்பதும் ஒரு களிப்பாகுமா? நீ உயிரோடிருந்தால் என் செல்வப்புதல்வர் களைக்கண்டு எவ்வளவு சந்தோஷப்படுவாய்! உன்னை உயிர்ப்பிக்கு மார்க்கம் ஒன்றுமில்லையா? என்றுகூறி வருந்தினன். அப்போது அக்கற்சிலையினின்றும் ஒரு சத்தமுண்டாயிற்று அதாவது "ஓ கருணைநிறைந்த அரசர்பெருமானே! இவ்வுலகில் நீ விருப்பத்த க்கபொருள் எதுவோ அதை எனக்கு அளிப்பாயானல் நான் உயிர்பெற்றெழுந்திருப்பேன்" என்பதே.

அரசன் திடுக்கிட்டுப்பயந்து சின்னேரம் அசைவறவிருந்து, எனக்குரிய எல்லாப்பொருள்களையும் உனக்காக அர்ப்பணம் செய்வேன். நீ உயிர்பெற்றிருந்தால் இது எனக்குப்போதும் என் றான்.

உன்னுடைய அருமைக் குழந்தைகள் இரண்டினுடைய சிர ங்களையும் உன் கையால் கொய்து அவ்வுதிரத்தை என் மேற்பூசி ல் நான் உயிர்பெற்றெழுந்திருக்க யாதொரு தடையுமில்லை என்று மற்றொரு சத்தமுண்டாயிற்று.

தன்னுடைய செல்வக்குழந்தைகளின் தலையைத் தன்கை யால் வெட்டவேண்டுமென்பதைப்பற்றி முதலில் சிறிது அஞ் சினனெனினும், மந்திரிசெய்த மகோபகாரங்களை நினைந்து எப் படியாவது மந்திரி பிழைத்தால் போதுமென்று, உடனே கூரியகத்தியை எடுத்துத் துணிவோடுகூடிய மனத்தினனாகிதன் அருமைக் குழந்தைகளினுடைய சிரங்களைக்கொய்து அவற் றிற் சிந்திய உதிரத்தை அக்கற்சிலையின்மேல் பூசினன். உட னே அரசன் ஆச்சரியப்படும்படி சாபவிமோசனமாகி இயற்கை வடிவத்தோ டுயிர்பெற்றெழுந்தான். ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொண்டு சந்தோஷசாகரத்தில் மூழ்கினர்.

மந்திரி அரசனைநோக்கி அரசே! நீ என்பொருட்டுச்செய்த இம்மகோபகாரம் என்னே! இப்படிப்பட்ட காரியத்தை யாவர் தாம் செய்யத்துணிவார்? இவ்வுபகாரம் என்றென்றைக்கும் மற க்கத்தக்கதன்று. ஜகதீசன் அதற்கேற்ற நன்மை உனக்குச் செய் வானென்று தலைகளற்றுக் கிடக்கும் அம்முண்டங்களில் சிரங்க ளைப்பொருத்தி, தெய்வரகஸ்யத்தைத் தெரிவித்த முனிவர்களை யும் கடவுளையும் மனத்தே தியானித்து அங்குச்சிந்திக்கிடக்கும் உதிரத்தை எடுத்துப்பொருந்திய சிரசிற்பூச குழந்தைகள் உயிர் பெற்றுத் தவழ்ந்து சென்றன.

ஆலயத்திற்குச் சென்றிருந்த அரசி அரண்மனைவந்து சேர்ந்தாள். அவள் வருகையைக்கண்ட அரசன், அமைச்சனையும், தன் குழந்தைகளையும் மறைத்து, தன் மனைவியைநோக்கிப் பெண்கள் நாயகமே! நீ ஆலயத்திற்குப்போய் நெடுநேரமாயிற்றே! இதுவரையில் அங்கு யாது செய்தாயென, அவள் அரசே! நமது மந்திரி கற்சிலையாய்க்கிடப்பதை எண்ணி, அது விமோசனம் பெறுமாறு வேண்டிக்கொண்டிருந்தேன். அதனால் நேரமாயிற்று என்றாள்.

அரசன், பெண்ணே நமது மந்திரி உயிர்பெற்றெழவேண்டுமானால், நமது குழந்தைகளிரண்டையும் கொன்று அந்த உதிரத்தைக் கற்சிலைமேற் பூசினால் மந்திரி உயிர்பெற்றெழுவார் என்றான். அச்சொல்லைக்கேட்ட அரிசி நடுக்கமெய்தினாள் என்றாலும், மறுகணத்தே அரசே! அவர்சிலையுருவெய்திபதற்கு நாமே காரணஸ்தர்களாகையால், அதற்காக என்னசெய்யவேண்டுமானாலும் செய்யவேண்டுவதுதான் என்று கூறினாள். அரசன் தான் செய்த காரியத்திற்குத் தன் மனைவியும் உடன்பட்டாளென்று உவந்து நடந்தவற்றைக்கூறினான். அரிசி ஆச்சரியமெய்தி, மந்திரியைக்கண்டு "அண்ணா! உம்மை மீண்டும் காணும் பாக்கியத்தைப் பெற்ற என்போலும் அதிர்ஷ்டசாலிகள் யார்" என்று அவனைத் தழுவிக்கொண்டாள்.

இக்கதை நன்றிமறத்தல் கூடாதென்பதை உணர்த்துகின்றது.

## அம்புஜாக்ஷி.

அதிகாலையில் நெடுந்தூரம் உலாவிவருதல் தேகசுகத்திற்கேற்றசெயல்போல, தேசசஞ்சாரத்தால் பல சுகுணங்களும் பிரயோசனமும் உண்டாகின்றனவென்பதை நன்குணர்ந்த விமலனென்பவன் தன்னுடைய ஜனனதேசமாகிய மாலியபுரத்தைவிட்டுத் தேசசஞ்சாரம் செய்வதென்று மதுரைக்குப் புறப்பட்டான். இவனுக்கு வயது இருபது அல்லது இருபத்திரண்டிருக்கும். பேரழகும் பெருஞ்செல்வமு முடையவன் கல்வியிற் கம்பனையொத்தவன் என்னலாம். டிக்கட்டுபெற்றுப் புகைவண்டியேறி மேற்குறித்த மதுரைக்குவந்தான். அவ்வூர் அவனுக்குப் புதியதாதலால் இவனுக்கு அங்கே உறவின்முறையாராவது ஸ்நேகிதராவது ஒருவருமில்லை. தான் ஊரைவிட்டுப் புறப்படுகையில் மதுரையிலிருக்கும் சிறந்த தனவந்தனாகிய சமரபுரி என்னும் சீமானுக்குச் சிபாரிசுகடிதம் வாங்கிக்கொண்டு வந்திருந்தானாகையால், அந்த தைரி

யத்தால் அச் சீமான்வீட்டை விசாரித்துக்கொண்டு அங்கு போக லானான். அத் தனவந்தனாகிய பெரியமனிதனுடைய புகழானது மதுரைமாநகரத்தில் மட்டுமல்ல, எல்லாவுலகத்திலும் பிரசித்தமாகப்பரவியிருந்தது இவன் வேளாளர்குலத்திலுதித்தவன். அப்பதியில் இவனைப்போன்ற பல தனிகர்களிருப்பினும் இவனுக்குள்ள நற்குணங்கள் அவர்கட்கில்லை. இவன் ஸர்வஜனப்பிரியன். பிறவுயிர்களைத் தன்னுயிர்போ லெண்ணுபவன். இத்தகைய இலக்கணங்கள்வாய்ந்த சமரபுரியினுடைய உன்னதமான கட்டிடங்களைக்கண்டு விமலன் ஆச்சரியப்படலானான்.

விமலன் தான்வந்திருக்கும் செய்தியைச் சமரபுரி முதலியாருக்குத் தெரிவிக்கவே, ஒராள் ஓடோடியும் வந்து விமலனை அதிக மரியாதையோடு மெத்தைமேல் அழைத்துக்கொண்டு போனான். விமலன் அங்கு நிருமிக்கப்பட்டிருந்த பலவகைய அரிய பொருள்களைக் கண்குளிரக்கண்டு முன்னிலும் அதிக ஆச்சர்யமடைந்தான் பொன்மலாம் பூசிய நிலைக்கண்ணாடிகள் நான்குபக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன. நான்கு மூலையிலும் ஆபரணங்களோடு கூடியபெண்கள் நால்வர்நின்று அகலேந்தி நிற்பதுபோன்ற ஸ்வர்ணப் பிரதிமைகள் நின்றிருந்தன. அவற்றின் பேரழகானது கண்ணொளியைக் கவர்ந்து சென்றன. இடையிடையே கைதேர்ந்த வேலைக்காரர்களாற் செய்யப்பட்ட நாற்காலிகள் பலபோடப்பட்டிருந்தன. அன்றலர்ந்த மல்லிகை, முல்லை, ரோஜா, மனோரஞ்சிதம் முதலிய புஷ்பங்கள் ஒன்றோடொன்று தொடுத்துகக்கட்டப்பட்டுப் பளிங்குச் செம்புகளில் பன்னீர்வார்த்து அவற்றின்மேல் இப்புட்பச் செண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. பல இரவுண்டு மேஜைகள் போடப்பட்டிருந்தன. சுவர்களினிருமருங்கும் ரவிவர்மாவின் படங்களும், இங்கிலீஷ்லீலைப்படங்களும் தொடுக்கப்பட்டிருந்தன. ஒருபக்கம் விசித்திரகடியாரமொன்று வாத்தியம்வாசித்துக்கொண்டிருந்தது, அச்சுவர்கள்கண்ணாடிபோல்முகத்தினழகை விளக்கியது. நடந்து செல்ல அஞ்சத்தக்க பல இரத்தினகம்பளங்கள்கீழேபரப்பப்பட்டிருந்தன. இன்னும்இவைபோன்ற பலவகைப்பொருட்காட்சிகளின்மேல் தன்திருஷ்டியைச் செலுத்திக்கொண்டிருக்கையில், அவ்வரண்மனைத்தலைவனாகியசமரபுரிமுதலியார் அங்குவந்தார். அப்போதுவிமலன் திடுக்கிட்டெழுந்து மரியாதையாக நின்றான். சமரபுரி கருணை ததும்பும் பார்வையோடு விமலனைப்பார்த்துப்புன்முறுவல்செய்து அவனைபோர் ஆசனத்திருத்திக்தானும் ஒராதனத்திருந்தான். விமலன் தன்ஜேபியில்

கையிட்டு ஒரு கடிதத்தை யெடுத்துச் சமரபுரியிடம் நீட்டினான். அவர் அதைப் பெற்று வாசித்து 'ஐயனே! உம்முடைய வரவால் நான் புனிதனானேன். நீவிர் எனது நண்பரின் சினேகரானதால் எனக்கும் அதிபிரியராய் விட்டீர். தங்களுக்கு என்னாலாகவேண்டிய காரியத்தைத் தெரிவித்தால் உடனே முடித்துத்தர சித்தமாயிருக்கின்றேன்.' என்றான். விமலன் சந்தோஷபரிதனாகி "உங்களுடைய நற்கீர்த்தியைப்பற்றி நான் நெடுநாட்களாகக் கேள்வியுற்றிருக்கின்றேன் இன்று தங்களைக்கண்டு ஆனந்தித்தேன். நான் இங்குவந்தது வேறு உத்தேசத்தாலல்ல; தேசசஞ்சாரம் செய்யவேண்டுமென்பது என்னுடைய உத்தேசம்" என்றான். சமரபுரி, "மிக்கசந்தோஷம். தாங்கள் என்னுடைய கிருகத்திலேயே யிருக்கலாம். இந்நகரமுழுதும் நீர் பார்வையிட்டாயிற்றா" என்றான் விமலன் -'ஐயா! நான் ஓர் விந்தையைக் கண்டேன் நதிதீரத்தில் அனேகஸ்திரீகள் ஸ்வேச்சையாய் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள் இவ்வாறு எங்கள் நாட்டில் பெண்கள் வெளிச்சென்றுலாவும் வழக்கமில்லை." என, சமரபுரி, "விமல! இன்னும் என்னவிசேஷங்கள் பார்த்தாய்" என்றான் மீனாக்ஷியின் சந்நிதானத்துட்சென்றேன் அப்போது தேவிக்கு மங்களஹாரதி நடந்துகொண்டிருந்தது அங்கு நான் பார்த்தகாக்ஷியை என்னென்றெடுத்துரைப்பேன். அத்தேவி சந்நிதியில் பரம சௌந்தரிய ஸ்திரீரத்நங்கள் நின்று தேவியைத் தொழுதுகொண்டிருந்தனர் ஹாரதி முடிந்ததும் அப்பெண்மணிக்குத்தலைவியோ அல்லது தேவமாதோ என்னும்படி ஒரு அதிசுந்தர யௌவனப்பெண் கையில் வீணையையெடுத்து சர்வஜனங்களும் சுவற்றிலெழுதிய சித்திரம்போல அசைவற்றிருக்கும்படி சங்கீதம்பாடினாள். அவள் குரலோசைக்கு எதை நிகரெனச் சொல்வேன்? யாழிசையும் குயிலின் தவனியும் பிறவும் அவள் தவனிக்கு நிகராகுமோ? நான் எனது சொந்ததேசத்திலும் பிறஊர்களிலும் அநேக ஸ்திரீகள் பாடக் கேட்டிருக்கிறேன் அவர் இப்பெண்மணியின் அழகில் காற்றாசுக்கும் ஒப்பாகார். சங்கீதத்திலோ ஒரு எள்ளின் முனைப்பிரமாணம்கூட ஒக்குமென்று சொல்லமுடியாது. ஆகவே அப்பெண்மணியைப்பற்றி நினைந்து சந்தோஷிக்கின்றேன் என்றான். சமரபுரி முதலியார் நீ "இப்போது பிரஸ்தாபித்த பெண்மணியை எங்கே பார்த்தாய்?" என, சுந்தரன் "ஐயா! தேவிசந்நிதியில் நானப்பெண்கொடியைக் கண்டேன். அத்தேவஸ்திரீயைக் கண்டபின் என்மனம் என்னைவிட்டகன்றது. ஈசுவரியைத்தொழுவதை மறந்தேன். அந்தச் சந்நிதானத்தைவிட்டு நான் வந்தவிதம் எப்படியென்று எனக்கே தெரியாது. ஹா! நண்பீர்! அம்மாது யாரு

டைய பத்னிபோ அறியேன். அப்பெண்கள் நாயகத்தைக் கூடுகிற புருஷனன்றோ தனவான்! அவனன்றோ புருஷரத்னம்! அவனன்றோ இவ்வுலகிலடைய வேண்டிய வெல்லாப் பாக்கியத்தையும் பெற்றவனாவான். சிறந்த இராஜபதவியிலிருப்பதைப் பார்க்கிலும் அவளது பாததாமரையைத் தலைமேற்சுமந்து திரிவது அதனினும் சிலாக்கியமாம்" என்றுவிடாமற் பேசிக்கொண்டிருந்தான்: சமரபுரி முதலியார் விமலனுடைய முகாரவிந்தத்தையும் அவன் எண்ணத்தின் தடிப்பையும் மனோ உல்லாசத்தையும் கண்டு "ஏ விநேஹ! நீ உன் ஆருயிரினுஞ் சிறந்தவளாக நீஆலயத்திற்கண்ட அப்பெண்பணியை மதிக்கின்றாயா" என, சுந்தரன் இன்னது பதில் சொல்வதென்று தோற்றாமல் சிரத்தைத் தொங்கவிட்டான் சின்னேரத்திற்கெல்லாம் மிகுமனோரம்யமான சங்கீதத்தனி விமலன் செவியிற்கேட்டது. அவ்வோசை முடியுந்தனையும் சுவற்றிலெழுதிய சித்திரப்பாவைபோலச் சுந்தரன் அசைவற்றிருந்தான் தன்னுள் இப்போது நாம்உண்மையாகவே சங்கீதத்தைக்கேட்கின்றோமோ? அல்லதுஸ்வப் நமோஎன்று சந்தேகிக்கலானான். தன்னெதிரிலுள்ள பொருள்களெல்லாம் நன்றாய்த் தனக்குத் தோற்றப்படுவதால் இது கனவல்ல, நினைவேயென்று தெளிந்து பரமாநந்தபரிதனாய் அச்சண்டத்வனியில் லயித்திருந்தான். திடீரென்று சங்கீதம் நின்றது. விமலனுடைய முகத்திருந்த விகாசம் குறைந்தது இவையெல்லாம் கண்ணுங்கருத்துமாகப் பார்த்துக்கொண்டிருந்த சமரபுரிமுதலியார் பின்னகைசெய்துகொண்டே தாங்கள் தேவிசந்நிதியில் கேட்டதாகக் கூறிய சங்கீதம் இதுதானோவென, விமலன் பதில்கூறாமல் ஏதோ யோசனையில்மூழ்கினான். சமரபுரிமுதலியார் மீண்டும் "ஐயா !என்மீது காதலுடையவள் தங்கள்மீது காமுறாள் அவள்மேல் தாங்கள்கொண்டிருக்கும் பிரியமானது பலிதமாகாது ஆகவே தாங்கள் அவ்வெண்ணத்தை ஒழித்துவிடுங்கள்" என்று புன்முறுவலோடு கூறினார். அச்சொல்லை மலனுக்குத் தன்மார்பில் ஈட்டியாற் குத்தினதுபோலாயிற்று. நாமென்ன அறிவிழந்தோம்! வாய்ப்பதட்டம் உதவாதென்றுகூறும் பெரியோர்கள் வாய்க்குக் கற்கண்டிட வேண்டும் நம்மைவிட அறிவிலியொருவனுமிரான் என்று மனோவியாகூல மிகுதியுமுற்றுத் தலையிறங்கினான். இதைக் கண்ட தனவந்தன் "விமல! உனக்கென்ன பயித்தியமா? "பெண்ணென்றால் பேயுமிறங்கும்" என்ற பழமொழி பொய்யாகும் போதன்றோ நீ கொண்ட எண்ணம் பழுதாகும். ஸ்திரீ ரூபம் (மாயை) யாரையும் மயக்குவது இயல்பாயிருக்க நீ வருந்துவானேன்? நீயுண்மைகூறினாய் அதற்காக நான் சந்தோஷிக்கின்றேன். எந்த ஸ்திரீயினிடத்தில் உன்னுடையநாட்டம் சென்றதோ அப்பெண்

ணரசியின் முன்னின்று நீ வார்த்தையாடுவாயானல் உன்மனம் களிப்புறும். அப்போதுதான் உன்னைப்பற்றிப் பீடித்துக்கொண்டிருக்கும் லஜ்ஜையானது உன்னைவிட்டொழியும். ஆகவே எழுந்திரு. அம்மனமோஹினியிடஞ்செல்வோம்" என்று அவனை அழைத்துக்கொண்டு தன்பத்நியிருக்கும் க்ருஹத்துக்குட் பிரவேசித்தான். விமலன் அந்த ஸ்திரீமணியைக்கண்டதும் அவளை ஸ்ரீலக்ஷ்மியாகவே மதித்துத் தன்மனத்தில் வணங்கினன். சமரபுரிமுதலியார் தன் இல்லக்கிழந்தியாகிய அம்புஜாக்ஷியைக்கண்டு "பெண்ணே! இவ்வாடவர் என்னுடைய அந்தரங்க ஸ்நேஹசர். இப்பதியைக் சாணும்பொருட்டு வந்துள்ளார். இவருக்கேற்ற உபசாராதிகளை நீ செய்துவரவேண்டும்" என்றார். எழிசையைப்பழிக்கும் யாழ்மொழியாளாகிய அப்பெண்மணி விமலனை நோக்கி மின்னலெனப் பிரகாசிக்கும் வெள்ளிய தந்தபந்தி சிறிது தெரியப் புன்முறுவல் பூத்து "தாங்கள் கலிங்கதேசத்தினர்போலும்! தங்களுடைய பெயரென்ன?" வென்றாள். இம்மொழி அவள் வாயினின்றும்வந்ததே விமலன் தேவாமிர்தமுண்டவன்போலாயினன். அம்புஜாக்ஷியினுடைய கேள்விக்கு விடையாக இவர் பெயர் விமலர். கலிங்கதேசத்தினர்தாம். குற்றமற்ற பெரியதோர் குடும்பத்திற்பிறந்த சற்குணசீலராக்கும் என்றார்.

அச்சமயத்தில் பதினறுவயதுடைய பெண்ணொருத்தி அங்கே வந்தாள். "அவள் கூந்தலுக்கு எண்ணெயிட்டு வாரிப்பின்னி கிருஷ்ணன்கொண்டையிட்டு அதன் நடுவில்பொன்னாலாகிய திருகுபில்லைமுடித்து, அதற்கு வர்ணத்தால்அழகுசெய்யப்பட்டஒரு சிறியகிளியொன்றும் ரோஜாபுஷ்பமொன்றும் சொருகியிருந்தாள். தோளில் செம்பட்டுக்கஞ்சுகமும், இடையில் சிகப்புப்புள்ளிகளையுடைய வெள்ளைப்பாவாடையும் தரித்திருந்தாள். பச்சைவர்ணப் பட்டாடை யொன்று வலதுதோளின் வழியாக அவளுடைய மார்பிற்பரவி இடதுதோளின் மேற்புரண்டு பின்புறமாகத்தொங்கியது. அவள்கழுத்தில் காசிமாலையோடு, கிள்ளட்டிகையும், காதிற் பளபளவென்றுமின்னி அழகுசெய்யும் கம்மலோடு சத்திரிபாவலும், கையிற் காப்பும் கொலுசும், இடையில் ஒட்டியாணமும், காலில் தண்டையும் அணிந்திருந்தாள். அவள் தங்கத்தைக்காய்ச்சி யூற்றியது போன்றஅழகுடையவள். அவளுடையஅகன்றுயர்ந்த நெற்றியிலிட்ட சிந்துரப்பொட்டானது தளதளவென்று பிரகாசித்தது. பரந்தகண்களும், நீண்டுயர்ந்த நாசியும், திரண்ட கன்னங்களும், சிவந்துமெலிந்த உதடுகளும் உடையவளாயிருந்

தாள்." இவளைக்கண்ட அம்புஜாக்ஷி "விமலனைச்சுட்டிக்காட்டியிவர் உன் ஜனனதேசத்தவர்" என்றாள். கோகிலா விமலனை உற்று நோக்கிய வண்ணமிருந்தாள். சமரபுரிமுதலியார், "விமல! நீ என் மாளிகையிலேயே வசிப்பாயானால், இக்கோகிலாளின் சிநேஹமும் உனக்குக் கிடைக்கும். இவள் இவ்வூர் பாலிகாபாடசாலையில்உபாத்தியாயிருக்கிறாள். உன்னுடைய கிருகத்திலிருப்பது போலவே என் மாளிகையிலும் சர்வசுதந்தரத்தோடிருக்கலாம்" என, விமலன், "ஐயனே! மன்னிக்கவேண்டும். தங்களுடைய மாளிகையில் நான் வசித்திருக்க முடியாது. வேறெங்கேனுமோரிடத்தில் நான் வசித்திருக்கும்படி உத்தரவுசெய்யவேண்டும்" என, சமரபுரிமுதலியார், "விமல! நீயேன் வெட்கப்படுகிறாய்? நீ என்னிடத்திலேயே யிருந்தால் நான் களிப்படைவேன். உன் ஸ்வதந்தரத்திற்கு யாதொரு இடையூறும் நேராது என்னுடையதொழிலாளர்களும், பக்ஷியும் உனக்குவேண்டிய உபசாராதிகள் செய்வார்கள். என்னைவிட்டு நீ அன்னியவிடத்தில் செல்லக்கூடாது." என்றார். அதற்குள் அம்புஜாக்ஷி "ஐயா! தாங்கள் இங்கிருப்பீர்களானால் அடியாளும் தங்களுக்குப் பணிவிடை செய்வேன்" என்றாள். இவளுடைய மிருதுவான மதுரகண்டத்தைக் கேட்ட விமலன் நல்லதென்றொப்புக்கொண்டான்.

பின்னர் எல்லோருஞ் சேர்ந்து நாள்தோறும் உயர்ந்த ஷட்விதபதார்த்த பரமான்னம்புசித்து, வாசனைகலந்த வெற்றிலைப்பாக்குத்தின்றுனதே, அம்புஜாக்ஷியும், கோகிலாளும், விமலனும் சமரபுரிமுதலியாரும் மேல்மாடியிற்சென்று உன்னதாசனத்திலிருந்து தம்பதிகளிருவரும் விமலனோடு விளையாடுவதும், கோகிலாளைப்பற்றி ஏதாவது வேடிக்கையாய்ப் பேசுவதுமாயிருந்தார்கள். கோகிலாள் எப்போதும் விமலனைப் பார்த்து பெருமூச்சுவிடுவாள். மோகதிருஷ்டியோடு விமலனைப்பார்ப்பாள். ஒருநாள்இரவு விமலன், தன் நண்பராகிய பிரபுவைப்பார்த்து இதுவசந்தகாலமாகவும், பூர்ணசந்த்ரப் பிரகாசமாகவும் இருப்பதால் ஏதேனும் பாடினால் அதிரசமாயிருக்கும் என்றுசொல்லி வாய்மூடுமுன் அம்புஜாக்ஷி தன் எதிரிலிருந்த கோகிலாளைநோக்க அக்குறிப்பறிந்த அவள் திடுக்கென்றெழுந்துபோய் வீணையைக்கொண்டுவந்து அம்புஜாக்ஷியினிடம் கொடுத்தாள். அவள் சுதிகூட்டிக்கொண்டிருக்கையில் பிரபு மெத்தையைவிட்டுக் கீழிறங்கினார்கள்.

அம்புஜாக்ஷி சுதிசெய்தவுடனே சின்னேரம் ஆலாபித்து அடியில்வரும் பாடலைப் பாடினாள்.

இராகம்-கலியாணி. தாளம்-ஆதி.

பல்லவி.

7

வரவரஎன்மீதிற் கிருபைபிரிவதென்ன ...
மாயம் - சொல்லுவாய் ... ஞாயம் ...

அநுபல்லவி.

கரணமும்மலமுங் ... ... ... காமாதிகளோ ராறுங்
கடந்தைம்புலனடக்கி நித்தியாநித்தியத்தைத்தேறும்
பரமஞானியரன் பாய்ப்பூசிக்கும்பேரின்பப்
பழமுதிருந்தரு ... ... வேபரைமுதலே
முழுவதிரும்பதி ... ... மாபுரிவடிவே

வரவர.

சரணங்கள்.

நம்பிநின்றவர்கள் வெம்பிநின்றழ நடந்திடுகவர்கர்மமோ-முன்
னுளிலேயுனதுபாததாமரையை நாடிடாமையினோர்கர்மமோ
வம்புசெய்வோர்கட் ... சுதிட்டானுகூலமோ
மருவும்எளியனுக்கு ... ... விபத்தானகாலமோ
இம்பர்மகத்துவமில் ... லாதவுருக்கோலமோ
இதுதொழில்நன்றல ...வேயெனுமனமோ
துதிதனில்அன்பில ... னுகியசினமோ

வரவர.

அலைந்தலைந்துதிரிகுரங்குளந்நீயறிந்திடும்படிசெய் வேஷமோ-
கிட்டி, அடுத்தவர்க்குநிதம் அளித்தளித்துக்கையில் அரைக்காசும்
இல்லாததோஷமோ
கலந்திருக்குமபித்தன் உரைத்ததர்ப்போதனையோ
கருதுந்தக்கனிடத்திற் ... பிறந்துற்றசாதனையோ
குலைந்தென்போல்பவர்செய் கூசலின்வேதனையோ
குவடிசையுங்கன ... காசலக்குறியோ
நவமருமங்கையர் ... ... பேதமைநெறியோ

வரவர.

வானுலோகமக வாஞ்மாலயனு ... மாசிலாதுபணி நாயகி-நிதம்
வந்திறைஞ்சினிய அன்பர்சிந்தையில் அமர்ந்தபஞ்சமலர்ச்சாயகி

கானுலாவுமுனி ... ... ...வோர்மகிழுந்தெருளே
காமியப்பன்தமிழ் ... ... நிலைக்கநிற்கும்பொருளே
ஞானவாசகத்தியா ... ... ... கேசர்மகிழருளே
நவனிலகும்பது ... ... மாசனத்திருவே
வலனுயரும்பெரு மாதவவுருவே

வரவர.

இவ்வாறு பாடிமுடிந்ததே விமலன் ஆநந்தக்கடலிலாழ்ந்துக ரைதெரியாது தத்தளித்திருந்து என்ஜன்மம் சாபல்யமாயிற்று இப்போதைமனம் இன்னொரு பாடல் கேட்க விரும்புகின்றதுஎன்ன மீண்டும் பாடத்தொடங்கினாள்.

இராகம்-தோடி தாளம்-ஆதி.

பல்லவி.

எந்தாய் மனம் இரங்கி வந்தாதரணைசெய்ய *
இதுசமயஞ்சமயமே *

அநுபல்லவி.

செந்தாமரைத்தளமுந் திகழ்ந்தவெண் தரளமும்
வந்தா டியகுளமும் வளமும் பரிமளமும்
மதிலு மன்னுகொடி- யிலங்கு சோதியும்
கதலிதென்னவனம் நிறைந்த வீதியும்
மருவு திருமயிலை நகரி லுறைகமலை
பொருது நெடுமயிலை யனைய விழியமலை
மாரி சூரி காம ரூப நாயகி
வீரி தரி நீலி யோக நாயகி
வானயன் வகுத்தருளும் வானகமு தன்மும்மை
யானவுலகத்துயிரை யாளவரும் எல்லம்மை

எந்தாய்.

சரணங்கள்.

ஜநநசாகரத்தினிற்சுழன்று
தந்தைதா யிருவ ருஞ்சையோகமுற
விந்துசோணிதநி றைந்துகூடிவரு

தன்னிலை யதார்த்த மோரா தலமரு
சஞ்சித பிராரர்த்த ஆகா மியமுறு

ஜநந.

தளர்பெண் ணாசையொடு மண்ணாசை மிகுதுயர்
கிளர்பொன் னாசைசொல வொண்ணாத வசைபெறு
ஜநநசாகரத்தினிற் கழன்று மயங்கிச்
சமுசாரசேற்றிற்சிக்கி யழன்று
மனதுகட்டுப்படாமல் கழன்று நிதமும்
வல்வினைத்துயரத்தால் அழன்று
சினமய லிற்சிறந்து சித்த மகிழ்துறந்து
கனக பதமறந்து கவலைக்கா ளாய்ப்பிறந்து
கமரி லேயமுதை யுகுத்த தெனநிலை
யமையு நாள்களவை யொழித்து முதியவர்
கண்ட கண்டவுல கெங்கும் வம்பனென
வம்பு கன்றிடப் லம்பல் கொண்டுபல
காலமும் விகாதவழி பேயணைந்துய் யாமலே
வேளையடி யேன்மிசை பராமுகஞ்செய் யாமலே

எந்தாய்.

சந்நிதிதனைவலம்புரிந்து

சங்கொடு துந்துமி பம்பைமி ருதங்கம
ருந்தவில் பைங்குழை கொம்புமு ழங்கிடு

சந்நிதி.

சதிர்பொ ருந்துமட மயில்கள் செம்பதும
அடிசி லம்பசைய மிகுந டங்குலவு

சந்நிதி.

தவத் தின்முக் கியத்து முனி வர்கள் திரு
வுளத் தினிற் களித்து மிகத் துதி பெறு
சந்நிதிதனைவலம் புரிந்து வளருன்
சரித்திரங்களைநன்ருய்த் தெரிந்து
வின்னமானமுறைமை பிரிந்து புவியில்
வேறுநெஞ்சம்வையாமற் பரிந்து



மன்னன்ப ரொடுகூடி மலரடி யிணைநாடிப்
பன்னுகின் துதிபாடிப் பரமா னந்தக்கூத்தாடிப்
பவத்தின் வழி யுதித்த பிறவிகடனை
யறுத்து நல வியப்பி னுடனலாதரு
பாரினி லேபசி யாதனை நோய்களில்
லாமையில் லாதுநல் வாழ்வது மேவிசு
பம்பெற நினைந்துமுன் னெடுத்திருகை கட்சேர்த்து
கும்பிடல் புரிந்துஎன் முகத்தைவிழியாற்பார்த்து

எந்தாய்.

புரந்தரன்பணிமஹாதேவி

பொற்புறு மற்புத கற்பக நற்றரு
சொர்க்கந கர்க்கொரு கர்த்த னெனத்திகழ்

புரந்தரன்,

புயல்வா கனமொளிர் அயிரா வதமுடல்
பயிலா யிரவிழி வயிரா யுதமுள

புரந்தரன்.

புனித முற்றநற் கியானமுள கின்னரர்கிம்
புருடர் சித்தவித் தியாதரர்கள் நின்றுதொழு
புரந்தரன்பணிமஹா தேவி வணங்கிப்
போற்று தவர்க்குவச்ச நாவி
கரங்குவிப் பவர்க்குச்சஞ் சீவி வகுத்துக்
கருதரிய வுலகுக் காவி
நிரந்தரப் பொருளாதி நித்தியா நித்யவினோதி
துரந்தரி தர்மநீதி சுகுணிநற் சகசோதி
சுந்தரி கடுரி மங்கலை யுதாரி
யந்தரி விகாரி சங்கரி யகோரி
சுமுக வாணி மகுடவேணி புராணி
இமய தாணி யரவப்பூணி கல்யாணி
தோமகற்றும் பூரணவி லாசமுறு காரணி
காமியப்பன் பாடலி னுலாவிவளர் நாரணி

எந்தாய்.

இவ்வாறு பதினொருதினங்கள்சென்றன பன்னிரண்டாநாட்
காலையில் முதலியார் விமலனைப்பார்த்து நண்ப "நண்ப! நான் தஞ்
சைமாநகரத்திற்கு ஒரு அவஸ்யமான காரியார்த்தமாகச் செல்ல
வேண்டியிருக்கிறது கடவுள் உன்னை நல்லசமயத்தில் இங்கனுப்பி
னார் நான் வர சற்றேறக்குறைய ஒருமாதம்செல்லலாம் இதுவரை
என்பத்தினியை நீ பார்த்துக்கொள்ளவேண்டும்" என்றான். விம
லன் வெகு கஷ்டத்தோடுகூடிய மனமுடையவனாகி முகஞ்சுருங்கி
ஐயனே! எளியேனுக்கு வேறு யாதேனுமொரு வேலைவைத்துச்
சென்றால் அதை ஜாக்கிரதையாகப் பார்த்துவருவேனேயன்றித்
தாங்களில்லாதவேளையில் என்னை யிங்கு வசிக்கச்சொல்வதைப்ப
ற்றி நான் தடுப்பதற்காக மன்னிக்கவேண்டும் அது நற்காரியமல்ல
நான் என்பதிக்குச் செல்கின்றேன் என்றான். சமரபுரிமுதலியார்
சினேகா! நீ உன்பதிக்குச செல்வாயாகில் என்மனம் மிகத் துன்ப
ப்படும் என்பத்தினியின்மேல் உனக்குப் பிரியமுண்டு அப்படியே
அவளும் உன்மேல் ஆசைகொண்டிருக்கிறாள் ஆகவே உங்களிருவ
ரையும் நா னிவ்விடத்தில் நிறுத்துகின்றேன் உனக்கு யாதொரு
கஷ்டமும் உண்டாகாது வீட்டுவேலைகளையெல்லாம் குமஸ்தாக்க
ள்செய்துவிடுவார்கள் என் பத்தினியோடிருந்து சுகமாய் காலங்க
ழிக்கலாமென்றுகூறி சேவகனையழைத்து வீட்டை பத்திரமாகப்
பார்த்துக்கொள்ளும்படி உத்திரவுசெய்து தன் மனையாளிடத்தில்
தான் பிறதேசம்போவதைத் தெரிவித்தான் அவள் மெய்யன்
போடு அவன்பாதத்தில் விழுந்து பணிந்து விடைகொடுத்தாள்
இச்செய்கைகளெல்லாம் விமலனுக்கு ஆச்சர்யத்தை யுண்டுபண்
ணிற்று.

அம்புஜாட்சி தன்கணவன் உத்திரவுபடி விமலனுக்கு சர்வோ
பசாரங்களும் செய்வாள் வேடிக்கையாகப் பேசி விளையாடுவாள்
இவளுடைய நடக்கையெல்லாம் விமலனுக்கு வியப்பைத்தந்தது
கோகிலாளும் இவர்களோடு சிற்சிலசமயங்களில் ஒன்றுசேர்ந்திரு
ப்பாள் ஆனால் இவர்களுடைய ஒற்றுமையைக்கண்டு கோகிலாள்
பொறாமையுற்று திடீரென்று அவ்விடம்விட்டகல்வாள் கோகிலா
ளுடைய நாட்டமெல்லாம் விமலனிடத்திலேயேசென்றது இவள்
கருத்தை விமலன் ஒருதரமாவது கவனித்தானல்ல கோகிலாளுக்
கு அம்புஜாக்ஷியின்மேல் பொறாமையுண்டாயிற்று ஆகவே அவ
ள் முன்போ லவர்களோடு சேருகிறதில்லையெனினும் இவர்கள் எ
ன்னபேசிக்கொள்கிறார்களென்பதைப்பற்றிமட்டும் பதுங்கியிருந்
து செவிகொடுத்துக் கேட்பாள்.

ஒருநாள் இரவு விமலன் தன்னறையில் படுத்து நித்திரைசெய்துகொண்டிருந்தவன் இரண்டாஞ்சமயத்தில் விழித்துக்கொண்டபோது தன்பக்கத்தே கோகிலா நின்றிருப்பதாக அங்கு எரிந்துகொண்டிருந்த விளக்குவெளிச்சத்தால் நன்குணர்ந்தான் அவனுக்கு தேகம் திடுக்கிட்டு அச்சமுற்று அவளைநோக்கி நீ இந்நேரவேளையில் இங்கு தனித்துவருதல் கூடுமோ தலைவி கண்டால் என்னவாய்முடியும் இக்கட்சணமே இவ்விடம்விட்டகலுதி என்று வற்புறுத்தினன்.

கோகிலாள்:—என் ஆசைக்கினிய அநங்கனே! இப்போது உண்மையாக எனக்குள்ள எண்ணத்தை வெளிப்படுத்துகின்றேன் நானுன்மேல் நெடுநாளாகக் காதல்கொண்டிருக்கின்றேன் நீ இங்கு வந்தநாள்தொட்டு நான் வயிறார உண்டிலேன் மற்ற சுகங்களையுந் தவிர்த்தேன் உன்னுடைய பேரழகென்னும் விஷம் தீண்டப்பெற்று மயங்கியுள்ளேன் ஆகவே நீயே எனது இன்பநாயகன் என்னிஷ்டத்தைத் தவிர்க்கலாகாதென்று வேண்டினள் விமலன் மிகநடுங்கி நமக்கு கிரகசாரமிருந்துதான் இவ்விடத்திற்கு நம்மை யிழுத்துக்கொண்டுவந்ததென்று மனம்புழுங்கி ஒருவாறு மனதை திடப்படுத்திக்கொண்டு சீச்சீ இதென்னசெய்கை கீழ்மக்களைப்போல் நடக்கின்றாய் என் சயனகிரகத்தில் நீ தனித்துவந்து ஒழுங்கீனமான சொற்களைச் சொற்றல் தக்கதன்று தலைவி பார்த்தால் போசம் வரும் என்றான்.

கோகிலா:—என்னசொன்னாய்? எஜமானியா? (பற்களை நெறுநெறுவென்று கடித்தல்) அவள் என்னை அதிகாரம்செய்ய அவள் யார்? அவளுக்கு நான் அஞ்சவேண்டியதில்லையென்பதை நீ உன் மனத்தே நிலைபெறக்கொள் (என்று ஆர்ப்பரித்தாள்.)

விமலன்:—தூர்த்தே! நீ என்னெதிரில்நில்லாதே நீ களங்கமான மனமுடையவள் நிஷ்களங்கமாயிருந்த என்னைச் சோதனைசெய்யவந்தாயோ அல்லது உண்மையில் தீயகாரியத்திற்பிரவேசித்து என்னை அசுத்தனாக்கித் துன்பத்தையனுபவிக்கச்செய்யவேண்டுமென்று வந்தனையோ நானுணரேன் எப்படியானாலும் உன்னுடைய நடக்கை ஒழுங்கீனமானதால் என்னெதிரே நிற்காதே என்று கடுகடுத்துப்பேசினான்.

கோகிலா:—என்னசொன்னாய் நானா ஒழுங்கீனமானவள் உன் வைப்பாட்டி அம்புஜாட்சியின் ஒழுங்கீனத்தை வெளிப்படுத்திப் பின்பு உன்னோடு பேசுகின்றேன் என்று அதிகோபத்தோடு அவ்வறையைவிட் டகன்றாள்.

பின்னொருசமயம் விமலனும் அம்புஜாட்சியும் தேவிசந்நிதிக்குச்சென்றனர் அன்று மீனாட்சி ஸ்வரூபமான தேஜசோடு ஜ்வலித்திருந்தாள் சந்நிதி நிஸ்சப்தமாயும் மனோல்லாசமாகவு மிருந்ததால் அம்புஜாட்சி தன் யாழினுமினிய கண்டத்வனியால் சங்கீதம்பாடலானாள் இவளுடைய சங்கீதத்தைக்கேட்டு மெய்மறந்துநிற்கும் விமலன் அந்தச்சமயம் அதைச் செவிகொடாதவன்போலிருந்தான் இதையறிந்த அம்புஜாட்சி எந்த ஆடவன் பலதரம் என்னுடைய பாடலைக்கேட்டு ஆனந்தித்திருக்கின்றானோ அவனே யிப்போது வெறுப்புற்றிருக்கின்றான்போலும் என்று குறிப்பாய்மொழிந்தாள் விமலன் கரும்புதின்னக் கூலி வேண்டுவாருமுளரோ? தேவாமிர்தம் சிரமமின்றிக் கிடைக்குமானால் அதை ஆவலோடு விரும்பிப் புசியாதவன் யாவன்? என்று மீண்டும் யாதோசொல்ல வாயெடுத்தவன் வாளாவிருந்தான். யுவாபுருஷரே! தாங்கள் காரணமின்றி என்மீது அந்தரங்கத்தில் அவநம்பிக்கைகொண்டிருப்பதால் இனி உம்மோடுபேச நான் வல்லவளென்று என்றுகூறி சந்நிதியைவிட்டுச் செல்கையில் அகன்ற வாசற்படிதடுத்து அம்புஜாட்சி கீழேவீழ்ந்தாள் பிரசைகள் சிவசிவாவென்று ஆரவாரித்தனர் விமலன் விரைந்துசென்று அவளைத் தீண்டியெடுத்து நிற்கவைத்தான் அவள் சிறிதும் வெட்கமின்றி மனோல்லாசமாகவே நடந்துசென்றாள்.

விமலன், இன்னும் அவளோடு பேசிலன் அம்புஜாட்சிமுகத்தில் கருணாரசம்தோற்றியது அவள் ஐயா! எனக்குநேர்ந்த எதிர்பாராத அபாயத்தினின்றும் காத்தருளிய உமக்கு நான் என்னகைம்மாறு செய்யப்போகின்றேனென விமலன் தன்னுள் ஏதோ நாணினவனாகிக் கீழேவிழுந்தவர்களை எடுத்து நிறுத்தியதுகூட ஒருசகாயமாமா? வென்றான். பின்னிருவரும் பேசியும் சிரித்தும் வீடுபோய்ச்சேர்ந்தனர் விமலன் தன்னுடைய ஆபத்சமயத்தில் காத்தவிஷயத்தை எல்லோரிடமும் சொல்லிச்சொல்லி அம்புஜாட்சி களித்திருந்தாள். இதுபற்றி கோகிலாள்மட்டும் பொறாமைகொண்டாள்.

இப்போது இரவு பத்துமணியிருக்கலாம் எல்லோரும்உண்டு களித்து காடாநித்திரையிலிருக்கின்றனர் கோகிலாள்மட்டும் நித்திரையின்றி யாதோ ஒன்றைச் சிந்தித்துக்கொண்டே மேலுப்பரிகையில் உலாவிக்கொண்டிருந்தாள் அன்று அமாவாசையாகையால் கள்ளர் சிலர் சமரபுரிமுதலியார் வீட்டுக்குட்புக நூலேணியைவைத்துக்கொண்டு வழிபார்த்துக்கொண்டிருந்தனர். இதை



யுணர்ந்த கோகிலா அவர்களை நட்புசெய்துக்கொண்டு தான் எல்லாரகசியங்களையும் தெரிவித்துவிடுவதாகவும் அவ்வீட்டுஎஜமானியைக் கொலைசெய்துவிடவேண்டுமென்றும் அவ்வீட்டின் மற்றோரறையில் நித்திரைசெய்யும் விமலனை யாதொருஉபத்திரவமுஞ்செய்யவேண்டாமென்றும் தெரிவித்தாள். கள்ளர் அவள்மொழிக்கிணங்கி அம்மாளிகைக்குட் பிரவேசித்தனர் இதற்குள் கோகிலா விமலன் சயனக்கிரகத்துட்புகுந்து அவனை விழிக்கச்செய்து நீ அரவஞ்செய்யாமல் என்னுடன்வா கள்ளர்கள் இம்மாளிகைக்குள் பிரவேசித்திருப்பதால் உன்பிராணனை நான் இரட்சிக்கிறேன் என்றனள் கோகிலா அர்த்தராத்திரியில்வந்து ஆபத்தான சொல்லைச் சொன்னதனால் திப்பிரமைகொண்டவனாகி கோகிலா நீ சொன்னது எனக்கு நன்றாய் கேட்கவில்லை இந்த சந்தர்ப்பத்தில் சிறிதுதூரத்திலிருந்து திடீரென்று அம்புஜாட்சியின் இனிய குரலோசை மிக்க பரிதாபமாய்க்கேட்டது விமலன் அரையிற்கட்டியிருந்த அங்கவஸ்திரம் அவிழ்ந்ததையும் எடுத்துக் கட்டாமல் கௌபீனத்தோடு விரைந்தோடி அம்புஜாட்சியிருந்த அறைக்குட் சென்றான் இதனிடையே கோகிலா விமலனைப் போகாதபடி தடுத்தாளெனினும் அவள் சொல்லை அவன் பொருட்செய்யவில்லை அங்கு அப்போது நடந்துகொண்டிருந்த கோரசெய்கையைக்காண விமலன் மனஞ்சகியாமல் குறுந்தடியொன்று கைக்கொண்டு தன்னை எதிர்த்த ஒவ்வொரு கள்ளர்களினுடைய மண்டைமேற் சிதறவடித்து வீழ்த்திக் கள்ளர்களிடமிருந்த எல்லா ஆயுதங்களையுங் கைப்பற்றினன். அம்புஜாட்சி தன் வலதுதோளிற்பெருகும் உதிரத்தோடு சும்மாவிராது எதிர்த்துப் போர்செய்யும் திருடனைக் கத்திகொண்டு தானுமெதிர்த்து வெட்டினாள். இதற்குள் அவ்வாண்மனைக் காவலர்முதலானோர் வந்து சூழ்ந்து திருடர்களைப்பிடித்து காவல் செய்தனர் அம்புஜாட்சிக்குப் பட்ட காயத்துக்குத்தக்க மருந்து பூசினார்கள்.

"குற்றமுள்ள நெஞ்சம் குறுகுறுக்கும்" என்றபடி கோகிலா தான் செய்யத்தகாதகாரியத்தைச் செய்ததைப்பற்றி எண்ணி மிகவும் வருந்தினாள் மறுநாள் அம்புஜாட்சி கோகிலாளை வரும்படிச் சொல்லியனுப்ப தன்குற்றத்தை விமலன் சொல்லிவிட்டானோவென்றெண்ணினவளாய் நடுக்கத்தோடு அவள்வருவதைக்கண்டு அம்புஜாட்சி ஸ்னேகபாவமாய் கோகிலா! இன்றென்ன முகாரவிந்தம் வாட்டமுற்றிருக்கின்றதே நேற்றுநடந்த சோரத்தால் உனக்கு பயமுண்டாய் நித்திரைவரவில்லையோ? என்றாள். கோகிலாளுக்கு அவள்சொல்லியசாந்தமொழியானது ஒருசட்டியை அவள் மார்பகத்தே சொருகியதுபோலிருந்தது அவள் ஒன்றும் பதிலு

ையாமல் விமலனைப் பார்த்தவண்ணமிருந்தாள் அம்புஜாட்சி கோகிலா! நீ என் பயப்படுகிறாய் எனக்கு யாதொரு தொந்தரையும் நேர்ந்திலது நீ அச்சப்படவேண்டாமென்றனள். இவர்களுடைய ஒரு மைப்பாட்டைக்காணச் சகியாதவளாகிய கோகிலா அவ்விடம்விட்டகன்றுபோய்த் தன்மனதில் எதையெதையோ தானெநினைந்து துன்புற்றாள் பின்பு மனந்தேறி விமலனுக்கு ஒருகடிதம் வரைந்தாளன்றிரவு விமலன் படுத்திருக்கும் சயனக்கிரகத்துள் ஒருதாதி வந்து விமலனிடம் ஒரு கடிதத்தைக்கொடுத்தாள் அவனதைப்பிரித்து வாசித்தான் அம்புஜாட்சி தன்னைப்பார்க்க வரும்படி கடிதமெழுதியிருக்கிறாளென்று அயர்ந்துநின்றான் இங்கு இந்நேரவேளையில்போவது யுக்தமாகுமாவென்று நீளயோசித்தான் என்னசங்கதியோ பார்த்துவருவோமென்று துணிந்து கடிதங்கொண்டுவந்தவளுடன் சென்றான் இவன் போய்க்கொண்டிருக்கையில் ஒரு பெண் மற்றொரு ஆடவனுக்கு விமலன் போவதைக் காட்டிக்கொண்டிருந்தாள் அப்படி காட்டிக்கொண்டுநின்ற பெண் என்சொல்லை இப்போதாவது நம்புவீர்களோ? வென்றாள். அந்தப்புருஷன் பெருமூச்சோடு இன்னுமென்னசந்தேகம்? இப்போதே இதோ ஒருநிமிஷத்தில் கொன்றுவிடுகிறேனென்றான் கோகிலா நீங்கள் மெதுவாக அவன்பின் தொடர்ந்துசெல்லுங்கள் என அவன் நல்லதென்று அவ்வாறே தொடர்ந்தான்.

தன் அறைக்குவந்த விமலனைக்கண்ட அம்புஜாட்சி விமலா வரவேண்டும் ஏன் கூசிநிற்கின்றாய் சிலபுருஷர்கட்கு ஸ்திரீகளைக் கண்டால் சங்கோசமுண்டாவதை நான் பலதடவைகளில் பார்த்திருக்கின்றேன் நீ இந்தவேளையில் அந்தஅச்சத்தைத் தவிர்த்து என்னிடம் வரவேண்டுமென விமலன் பாவைபோலசைவற்றிருந்தான் மீண்டும் அம்புஜாட்சி ஐயா! உன்மேல் நான் மிக்க பிரீதி கொண்டுள்ளேன் நீ இச்சமயம் என்னிஷ்டத்தை நிறைவேற்றவேண்டும் உன்னை நான் பலதடவைகளில் சோதித்திருக்கிறேன் அன்றுநான் ஆலயத்தில்விழுந்ததுகூட உன்பிரியத்தைப் பரிட்சிக்கவேண்டியேயென்றாள் விமலன் பேராச்சரியத்தோடு என்னைப் பரிட்சிக்கவா கோயிலில் குப்புறவிழுந்தீர்கள் நான் இதுவரையில் உங்களை என் மாதாவைப்போல நினைத்திருந்தேன் உங்களிடத்தில் நான் பலதடவைகளில் அனுமானித்ததுண்டு ஆனால் அதை ஒரு பொருட்டாய் ஊன்றிப்பார்த்திலேன் இன்று உங்களை ரூபத்தில் மட்டும் இலட்சுமிக்கொப்பாகச் சொல்வேன் தங்களுடைய நடவடிக்கை என்மார்பைப் பிளக்கின்றது நானொரு விசுவாசகாதகன்

போலத் தலைவனுக்குத் துரோகம்நினைப்பேனா? என்னையும் நம்பி அவர் பிறதேசஞ்சென்றார் நீங்கள் அவர்களிக்கும் பத்திநி உங்களுடைய பர்த்தா திரவியசம்பன்னர் அவற்றோடு அழகும் அருளும் உடையவர் இத்தகைய நற்குணசீலரை வஞ்சித்துத் தாங்கள் இவ்விழிகுணகாரியத்திற் பிரவேசிக்கத்துணிந்தது தக்கதன்று நானுங்கள் கடிதத்தைக்கண்டு காமபரவசனாய் வந்தவனல்லன் உமக்கு இந்நன்மொழியைச் சொல்லவேவந்தேன் நான் உங்கள்விஷயமாக என்மனதோடு யுத்தம்செய்து அர்ப்பலனானது சத்தியமே ஆனால் இப்பொழுது என்மனதைப் பூர்ணபலத்தோடுவைத்து நானதைத் தூஷிக்கவல்லனாயினேன் இப்பொழுது நீங்கள் எனக்குத் தாய் நான் உங்களுக்குப் புதல்வனென, விமலன் பரிசுத்தன் விமலா! நீயே நற்குணமுடையவனென்று பெருஞ்சத்தமிட்டுக்கொண்டு நமது சமரபுரிமுதலியார் ஓடோடியும்வந்தார் தான் அவ்வாறு ஓடிவருகையில் கோகிலாளையும் பிடித்திழுத்துக்கொண்டு வந்தார். திடீரென்றுண்டாகிய கூக்குரலையும் அக்கூக்குரலுடைய சமரபுரி முதலியார் தன்னெதிரில்வந்து நின்றதையும் கண்ட விமலன் திப்பிரமையும் வியப்புமுற்றவனாகின்றான். முதலியார் புன்னகையோடு கோகிலா! உன்னுடையமுயற்சியே பலித்ததல்லவா என்றனர் அவள் கூச்சத்தோடு தலையிறங்கி விமலன்பால் நான்செய்தமுயற்சி வீணாயிற்றென்றாலும் உமதுமனைவி விமலனிடத்திற்கொண்டிருந்த கருத்து வெளிப்பட்டது என்றாள் முதலியார் அடிதூர்த்தே! அவள்விஷயத்திலும் நீ இப்போது கற்பிக்கும்வார்த்தை பொய்யேயாயிற்று இந்த விமலனைப் பரிட்சைசெய்யும்படி நானென்மனைவிக்குக் கற்பித்துத்தந்தபடி ஒருஎழுத்தாவதுபிசகாமல்நடந்து என்னைக் களிப்பித்தாள் இதனால் பார்ப்பவர் ஏதாவது சந்தேகிக்கக்கூடுமெனினும் என்னுடைய பத்தினி அனங்கனேவந்து எதிரில்நின்றாலும் ஏறெடுத்துப்பாராள் முடிவாகச்சொல்லவேண்டுமானால் என்னைத்தவிர அவள் வேறொருவனைப்பரிசியாள் ஆனால் என் சொற்படி எதுசெய்யவேண்டுமானாலும் தடைசெய்யாது முன்னின்று அக்காரியத்தை நடப்பித்து என்னைச் சந்தோஷிப்பிக்கப்பண்ணுவதிலேயே அவளுக்குப் பிரிய மதிகமென்றான்.

இல்வார்த்தைகளால் விமலனுக்குவியப்புண்டாயிற்று அங்கு நின்றிருந்த கோகிலா எப்படியோ அறையைவிட்டு மெள்ளநழுகினாள் மறுநாளுதயத்தில் புருஷன்மனைவிய ரிருவரும் ஏகாசனத்திலுட்கார்ந்து சிங்காரத்துட னதிகுதூகலமான வார்த்தைகளாடிக்

களித்திருந்தனர். விமலனுடைய நன்னடக்கையைக் கண்டதுமுதலாகசமரபுரிமுதலியாருக்கு அவன்மீதும்மிக்கபிரீதியுண்டாயிற்று.

முதலியார்:—விமலா! முதன்முதல் அம்புஜாக்ஷியைத்தேவி சந்நிதியிற் கண்டபோது அதி ஆச்சரியமுற்றுயே! நேற்றையதினம் இவள் உன்பால் துர்நடக்கை நடக்கவேண்டியதுபோல் உனக்குத் தோற்றிய அந்த நிமிஷம் உன்னுடையமனம் மிக வருந்தியிருக்குமென் றெண்ணுகிறேனென்முன். "நடந்தனவெல்லாம் ஒரு ஸ்வப்பனத்திற்கண்ட காக்ஷிபோல் எனக்கிருக்கின்றேன்" என்று விமலன் பதில்கூறினன்.

முதலியார்:—ஸ்திரீகளைத் தம்மிஷ்டம்போல் நடக்கவிடுவதனல் யாதொரு கெடுதலும்நேராது. உன்னுடைய தேசத்தில் ஸ்திரீகளுக்குச் சுதந்தரந் தெரிகிறது. பெண்களைப் புருஷர்கள் கட்டுப்படுத்தி அவர்களை மிருகங்களைப்போலெண்ணி அடக்கியாள்வது அவ்வளவு உசிதமானதல்ல.

விமலன்:—தாங்கள் ஸ்திரீகளுக்கு இத்தகைய ஸ்வதந்தரம் கொடுத்திருப்பதை நன்மையென ஒருநாளும் ஒப்பேன். அவ்விஷயத்தை இப்போது நினைத்துக்கொண்டாலும் என் உடல்மிக்க நடுக்க மெய்துகின்றது.

முதலியார்:—எவ்வெப்பெண்களுக்கு எவ்வெவ்வளைச் சுதந்தரங்களைத் தருவோம். ஆனல் அம்புஜாக்ஷிக்கு அதிக ஸ்வதந்தரமொன்றும் நான் தரவில்லை. தந்திருக்கிறவரையில் அவள் கிரமமாகவே நடந்துகொண்டுவருகிறாள். எனக்கு அவளிடத்திலுள்ள பிரியத்தைக் காட்டிலும் என்மேல் அவளுக்கு அதிக ஆசை உண்டென்பதை நான் நன்கறிவேன்.

விமலன்:—என்னமோ ஐயா, நீங்கள் சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை. நான் உண்மையைக் கைசோரவிட்டு அகிருத்தியத்திற் பிரவேசித்திருப்பேனுயின் அப்போது எவ்வாறுகியிருக்கும்?

முதலியார்:—அம்புஜாக்ஷி! நமது விமலன் சொல்வதுபோல் நடந்திருந்தால் என்ன செய்வாய்? சொல்.

அம்புஜாக்ஷி:—(தன்தலையிலிருந்து பளபளவென்று மின்னிக்கொண்டிருக்கும் கூர்மையான ஒருவைடூரியத்தை யெடுத்து) அப்படி ஒருக்கால் நடக்குமானல் அந்த விஸ்வாசகாதகனுடைய மார்பைக்கீறி உதிரத்தை வெளியே வருவித்திருப்பேன்.

விமலன்:—(உடனே அம்புஜாக்ஷியின் பாதத்தை எடுத்து அவன் கண்களி லொற்றிக்கொண்டு புகழ்ந்து துதித்து) அம்ப

ணீ! எது உனக்குச் சிறந்த ஆபரணம் போல் விளங்கிற்றோ அதுவே உனபகைவனுயிரைக்கவரும் ஆயுதமாயிற்றுஎன்றாலும், நான் ஒருசமயம் இருகரங்களையும் பிடித்துக்கொண்டிருந்தால் அப்போதுஎன்ன செய்யக்கூடும்?

முதலியார்:—விமல! அப்போது எம்முடைய காவற்காரரும் பிறரும் என்னத்திற்காக இருக்கிறார்கள்? உடனே அவர்கள் ஓடிவந்து சூழ்ந்துகொள்ளமாட்டார்களா? என்னுடைய ஆணையின்றிஅவளொன்றும் செய்யாள். இப்போதுநடந்தேறியவெல்லாம் நான் கற்பித்ததேயாகும்.

விமலன்:—இவ்வாறு செய்ததனால்தங்களுக்கென்னகியாதி?

முதலியார்:—உன்மனத்திலெழுந்த ஆசை தானேஒழியவும், உன்னுடைய தேசத்திற்கும் இத்தேசத்திற்குமுள்ள தாரதம்மியம் விளங்கவுமே செய்தேன்.

விமலன்:—ஐயா! தங்களுடைய ஸ்நேக விசேஷத்தால் அனேக அரிய விஷயங்களுணர்ந்தேன். என் அறியாமையால் கேட்ட கேள்விகளைக் குறித்து என்னை மன்னிக்கவேண்டும். அம்புஜாக்ஷி என்வயதிற் சிறியதங்கையேனும், அப்பெண் ரத்தினமே எனக்கு ஆசிரியள்.

என்று நமது விமலன் சொல்லிக்கொண்டே வருகையில் அதிகமொன்றும் அவன்புகழ்ந்துகூறுதபடி அவன்வாய்ச்சொல்லைத் தடுத்து,

அம்புஜாக்ஷி:—அண்ணா! உன்னை நான்பலவிதத்திலும் சோதித்ததைப்பற்றி என்னை மன்னிக்கவேண்டும். இன்றுமுதல் தங்களை என்னுடைய மூத்தசோதரராகக்கொண்டேன். தாங்கள் என்பொருட்டுசெய்த நன்மைகளெல்லாம் என்றும் மறக்கற்பாலதன்று.

இவ்வாறு இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், கோகிலா ஒருபெரிய கத்தியொன்றைக் கையிற்பிடித்துப் பின்புறமாக மறைத்துக்கொண்டு இவர்கள் எதிரேநின்று ஓரேவீச்சாய் தன்கழுத்தை வீசிக்கொண்டாள். ஒரு நிமிஷத்தில் கோகிலாளுடைய தலை ஒருபக்கமும், உடலொருபக்கமுமாக வீழ்ந்தது.

எல்லோரும் மிக்க விசனமுற்றனர்.

உலகீர்! கோகிலாளுடைய தீய எண்ணமே அவளுடையஉயிருக்கு ஹானியாயிருந்ததுகண்டீர்!

இக்கதை, அம்புஜாக்ஷியின் கற்பின்பெருமையும் அதனாலுண்டாகும் நன்மையும் விளங்குகின்றது.

---

## மோகனப்பெண்ணின் கதை.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுளம் கற்பென்னும்
திண்மையுண்டாகப் பெறின்"—குறள்.

மிகவும் எளியவனான பள்ளன் ஒருவன் ஒருநாள் காலையில், ஆற்றோரத்தில் ஒருகாட்டிலே தனிப்புறமாயிருந்த தன் குடிசையில உட்கார்ந்துகொண்டிருந்தான். அப்பொழுது அவன்நிலைமிகவும் துக்ககரமாயிருந்தது. அந்தாடெங்கும் அப்போது பஞ்சம் மிகக் கொடிதாய்க்குடிகளை மிகவும் வருத்திக்கொண்டிருந்தது. அவ்வூர்க்குடிகள் அநேகமாய் மாண்டுபோனார்கள். நமக்கும் அந்தக்கதி எந்தநிமிஷத்தில் நேரிடுமோவென்று அவன் திகிற்பட்டுக்கொண்டிருந்தான். அவன் மனைவியாள் பட்டினியாய் உடல்வற்றி எழுந்திருக்கமாட்டாமல் தன்கைக்குழந்தை ஒன்றையும் மடியில் விட்டுக்கொண்டு ஒரு மூலையில் கைகால் சோர்ந்துவிழுந்து கிடந்தாள். சோறுவேண்டுமென்றால் அதற்காக ஏதாவது கொஞ்சம் பக்கத்துப் பட்டணத்துக்குப்போய்த்தான் வாங்கிவரவேண்டியதாயிருந்தது. அதற்கும் அவன் கையில் காசுகிடையாது. ஊரிலே ஈனஜாதியானுக்குச் சோறிடுவாரொருவருமில்லை. அதனால் அவன்அப்படியே இறந்துபோகிறதென்று தீர்மானித்தான். அநேக நாளாய் அருமையாக ஏதோ சில காய்கிழங்குதவிர மற்றொன்றும் அவன் புசித்ததில்லை. அந்தக்கிழங்கும் அபூர்வமாய் எங்கேயோ ஓரிடத்தில் ஆற்றங்கரையில் கிடைத்ததேயன்றி மற்றெங்குமில்லை. அன்று காலையெல்லாம் அவன் மாட்டுமந்தையின்பின்னேபோய் அதன்சாணியில் ஏதாவது கொஞ்சம் கொள்ளுகலந்திருக்குமோ வென்று அவற்றின் சாணியையெல்லாம் கும்பலாய்ச்சேர்த்து ஆய்ந்துபார்த்தான். ஒருகைக்கொள்ளு அகப்பட்டது. அதைச் சமைத்துத் தன்பெண்சாதிக்குக் கொடுத்தான். அவன் தன்வாயில் தண்ணீர்விட்டு மூன்றுநாளாயிற்று. அவன் பெண்சாதிக்கோ இன்னும் பதினாறுவயதாகவில்லை. ஆயினும் அவளுக்குக்குழந்தைகள் மூன்று அந்தக் குழந்தைகளிடத்திலும் அந்தப்பெண்ணினிடத்திலும் அவன் தன் உயிரினும் அதிக அன்புவைத்திருந்தான். எல்லோரும் ஒருமிக்கமாண்டு போம்படியானகாலம் வரவே அவன் கொண்டிருந்த அவ்வளவு ஆசையும் அவ்வளவு துக்கமாய் முடிந்தது.

அவன் தன்னுடைய கஷ்டகாலத்தை நினைத்து மனவருத்தப்பட்டுக்கொண்டே கம்பீரமாய் மெதுவாகப் பெருகிவருகிற ஆற்றுவெள்ளத்தைப் பார்த்துக்கொண்டு தன் குடிசைவாயிலண்டை உட்கார்ந்திருந்தான். அப்போது அவன்மனதில் ஒரு தோற்றமு

ண்டாயிற்று. இவ்வுலகத்தில் யாவரும் விரும்பி மெச்சும்படியாக வாழ்கின்ற வாழ்க்கை யல்லவோ நல்லவாழ்க்கை! நல்லாரோடு கூடிவாழ்வதற்கு உதவாத பள்ளனுடைய கேடுகெட்டவாழ்வு என்னவாழ்வு? பரிசுத்தமான புருஷர்களண்டை ஒருபள்ளன்போனால் அவனைத் தடியெடுத்துப் புடையார்களா? இப்படி நல்லாரோடுகூடிவாழாத மனிதனுக்கு நற்கதிதானேது? பள்ளனுடைய துக்கப்பிழைப்பு என்னபிழைப்பு, இவ்வளவோடுகூட நமக்கு இப்போது பஞ்சத்தால் பெருந்துயரமும் நேரிட்டிருக்கிறதே! இப்போது இந்தக் குழந்தைகளுடைய பரிதாபத்தைத் தீர்க்கும்படியான பாக்கியமாவது பெற்றோமானால் நம்முடைய மனத்திற்காவது கொஞ்சம் சவுக்கியமுண்டாகும். அதுவுமில்லையே என்றிப்படிப் பலவிதமாக அவன் தன் குடிசைவாயிலில் உட்கார்ந்து அவ்வாற்றுவெள்ளத்தைப் பார்த்துக்கொண்டே சிந்தித்துத் துக்கப்பட்டுக் கொண்டிருந்தான்.

அவ்விடத்தில் அந்த ஆறு அதிக ஆழமும் அகலமும் உள்ளது. அந்நதி கரைபுரண்டு மேல்வெள்ளம் வந்துகொண்டிருந்த அத்தருணத்தில் அக்கரையிலிருந்து ஒருவன் அவ்வாற்றைநோக்கி வெகுவேகமாய் குதிரைமேலேறிச் சவாரி செய்துகொண்டுவந்தான். அவனைக்கண்டு அந்தப்பள்ளன் சற்றே மனச்சிந்தையை விட்டு அண்ணாந்துபார்த்தான். எதிரே ஆற்றுவெள்ளம் வெகுவேகமாய் ஓடுகிறதென்பதுகூடத் தெரியாமல் அந்தமனிதன் ஆவேசங்கொண்டவன்போல ஓடிவருகிறான். அவன் எந்தநிமிஷத்தில் நிற்பானோவென்று பள்ளன் எதிர்பார்த்துக்கொண்டேயிருந்தான். அவன் நிற்கவே யில்லை; பித்தம் பிடித்தவன்போல் வெகுவேகமாய்ச் சவாரிசெய்துகொண்டுவந்து சரேலென்று ஆற்றி லிறங்கிவிட்டான். அவ்வாற்றுவெள்ளம் அதிகபயங்கரமாய் இரைந்துகொண்டு வராவிட்டாலும் வேகமாத்திரம் மிகவும் அதிகமாயிருந்ததனால் அவன் இறங்கினவுடனே அந்தவெள்ளம் அவனையும்தன்வழியிலேயே கொண்டுபோக ஆரம்பித்தது குதிரைமேல் அந்தமனிதன்மாத்திரமேயன்றிப் பெருத்தமூட்டையொன்றும் ஏற்றியிருந்ததனால் அது அந்தச்சுமையைத் தாங்கமாட்டாமல் முழுகிமுழுகிக்கிளம்புவதாயிருந்தது குதிரைமேலிருந்தமனிதன் அந்த அபாயத்தைக்கண்டு தான் தனியே நீந்தி அக்கரைசேரலாமென்று குதிரையிலிருந்து இறங்கிவிட்டான். மேல் உடுப்புகளும் அதிக சுமையாயிருந்ததனால் அவைகளைத் தூக்கிக்கொண்டு அவ்வாற்றின் குறுக்கேஎதிர்த்

துச்செல்ல அவனால் ஆகவில்லை வெள்ளத்தின் வேகத்திற்கு அவ
ன் வேக மெவ்வளவு? வெள்ளம் தன்வழியே கொண்டுபோகப்
பார்த்தது.

தன்மேலிருந்த சுமைகழியவே குதிரை சுலபமாய்த் தண்ணீ
ர்க்குமேல் தலையைத் தூக்கிக்கொண்டு மெதுவாய்நீந்தி அக்கரை
போய்ச்சேர்ந்தது அந்தமனிதன்மட்டும் பெரிய அபாயத்தில் அ
கப்பட்டுக்கொண்டான் அவன் நீர்மட்டத்திற்குமேல் தலையெடுக்
கக்கூடவில்லை, அதைக்கடந்துபோக அவன் என்னமுயற்சிசெய்
தும் ஒன்றும் பயன்படவில்லை. பின்பு அந்தமுயற்சிகூடச்செய்யச்
சக்தியில்லாமல் அவனுடைய கைகால்களெல்லாம் ஓய்ந்துபோய்
விட்டன. அவன் வயிற்றில் தண்ணீர் நிரம்பிப்போயிற்று; கண்கள்
இருண்டுபோயின; மதிமயங்கிற்று. கடைசியாய்ப் பெருமூச்சுவா
ங்கிக் கண்களை மிரளமிரளவிழித்தான். ஆற்றுவெள்ளம் அவனைத்
தலைகீழாய்க்கவிழ்த்து அடித்துக்கொண்டுபோயிற்று.

இப்படி அந்தமனிதனுக்கு நேர்ந்த அபாயத்தைக்கண்டு தன்
குடிசைவாயிலில் உட்கார்ந்திருந்தபள்ளன் சரேலென்று எழுந்து
தன்தேஹத்திலிருந்த ஆயாசத்தைக்கூடப்பாராமல் வேகமாயோ
டி அந்தமனிதன் அல்லாடுகிறவிடத்திற்கு நேராய் ஆற்றிலிழிந்து
வெகு வருத்தப்பட்டு நீந்திப்போய் அவனைமெதுவாய்ப்பிடித்திழு
த்துக் கரைகொண்டுசேர்த்தான். கரையிலேகொண்டுபோட்டும் சி
றிதுநேரம்வரையில் அவனுக்குப் பிரக்ஞைவரவேயில்லை அதுகண்
டு பள்ளன் அவன் உடம்பை நன்றாய்த்துடைத்துத் தரையிலே புர
ட்டி அவன் வயிற்றிலிருந்த நீரையெல்லாம் வெளியேகொண்டு த
ள்ளிப் பல உபசாரஞ்செய்தபிறகு கொஞ்சம் நினைவுவந்தது உட
னே அவன் கண்ணைத் திறந்தான். அத்தருணத்தில் தன் அண்டை
யிலிருந்து தன்னைப்பிழைப்பித்துக் கொண்டிருந்த மகோபகாரி
யானபள்ளனைப்பார்த்து நீர்சுகமாகவாழ்கவென்றுவாழ்த்தினான்.

அதைப்பார்த்து அப்பள்ளன், இதென்ன இது? தன்னை அய
லார் தொடுவதே பெருந்தோஷமாக நினைக்கிற மகம்பதியார், யா
ரோ ஒருபேதையான; என்னை இப்படிக்குளிர்ந்து கடாக்ஷிப்பது
என்ன அதிசயம்! ஒருவரையும் தொடுவதற்கு யோக்கியனல்லா
த பள்ளன் உங்களைக்காப்பாற்றினவன்; எப்படியாவது நம்மால்
ஒருவன் பிழைத்தானே யென்பதுதான் எனக்குச்சந்தோஷம். நா
ம் அன்னிய ஜாதியானாலும் நம்மை அன்பாய்ப்பார்க்கத்தக்கவர்



உலகத்தில் யாராவது ஒருவர் இருப்பார் என்று ஒருவாறு மனத்
திருப்தி கொண்டிருக்கிறேன் என்றான்.

அதைக்கேட்டு அந்தப் புதுமனிதன் என் உயிரைக் காத்தவ
ர் நீரென்று எனக்குத்தெரியும். ஜாதியைப்பற்றின தாழ்வுஎவ்வள
விருந்தாலும் உம்மிடத்தில் மதிப்புண்டாவதற்கு எனக்குஇவ்வள
வே போதும். பூததயை பச்சாத்தாப முதலிய நற்குண மில்லாத
அந்தஸ்து இருந்தாவதென்ன? உமக்குச் சம்மதமாயிருந்தால்உம்
முடைய குடிசையில் வந்து சற்றே தங்கியிருக்கவேண்டுமென்பது
என்னுடைய கோரிக்கை என்றான்.

அதற்கு அந்தப்பள்ளன், ஐயா! வெகு நாளாய்ப் பட்டினி
கிடப்பவனுடைய குடிசைக்கு வருவதனால் உமக்கு என்ன சவுக்
கியம் கிடைக்கப்போகிறது? நான் நாலு நாளாய்ப்பட்டினி; என்
தலைவிதி எப்படியாகுமோ தெரியாது. அதோ தெரிகிறதே அந்தக்
குடிசையில் என்பெண்சாதிமூன்று குழந்தைகளோடுவயிற்றிற்குச்
சோறில்லாமல் சாகக்கிடக்கிறாள் இப்படிப்பட்ட வீட்டை விட
உமக்குத் தங்க நல்ல வீடாய் ஒன்று அகப்பட்டால் எனக்கு மிகவு
ம் சந்தோஷமென்று சொன்னான்.

அவனுடைய நிலையைக்கேட்டு அந்தப் பிரயாணி மிகவும் பரி
தாபப்பட்டு, என்னைக்காப்பாற்றின உமக்கு ஒருகுறையுமில்லை. நா
ன் கூடியவரையில் உங்களுக்கு உதவிசெய்யக்கருதுகிறேன். என்
குதிரை ஒருஅபாயமும் இல்லாமல் கரைவந்து சேர்ந்திருக்கிறது
அதன்மேல் மூட்டையில் வேண்டிய உணவு வைத்திருக்கிறேன்;
உங்கள் வீட்டுக்குப் போவோம் வாரும் என்றான்.

அதைக்கேட்கவே பள்ளன் முகத்தில் கொஞ்சம் ஒளி உண்
டாயிற்று. உடனே அவன் தன்விரலினால் தரையைத் தொட்டுத்
தலையில்வைத்து வந்தனஞ்செய்து மிணமிண வென்று அவனை வா
ழ்த்திக்கொண்டே தன்சிறு குடிசைக்கு அழைத்துக் கொண்டு
போனான்.

அந்தக்குடிசையில் நுழைந்தவுடனே செத்தவன்போலவே
இட்டகால் இட்டகைகளாய்த் தரையில்விழுந்து கிடந்தபள்ளனு
டையபெண்சாதியை முதல்முதல்கண்டு அந்தப்புதுமனிதன் திடு
க்கிட்டான். அவள் பக்கத்தில் இரண்டு மூன்று வயதுள்ள இரண்
டு குழந்தைகள் படுத்துக்கொண்டிருந்தன. கைக்குழந்தையொன்
று அவள் மேல் விழுந்து பாலற்று வறண்டுகிடக்கிற மார்பைவீணா
ய்ப் பிடுங்கிக்கொண் டிருந்தது. இப்படிப்பட்ட துக்க ஸ்திரீயைப்

பார்த்து அந்தப் புதுமனிதன் பட்ட சங்கடத்தைக் கண்டு அந்த வீட்டுக்காரனுக்கும் கண்ணீர் பெருகத்தலைப்பட்டது.

முன்னமே ஆற்றில் நீந்திவந்து கரைசேர்ந்த குதிரையானது தன் இயற்கை யறிவினால் அறிந்துக்கொண்டதுபோல அந்தப்பள்ளன் குடிசைவாயில்சேர்ந்து இவர்கள போனபோது அங்கேயே நின்றுக்கொண்டிருந்தது அதன் முதுகிலிருந்த ஒருபையை அவிழ்க்கையில் அதில் சில்லென்று ஈரமான கொஞ்சம் உணவும் தண்ணீரில் நனைந்துபோன அரிசியும் அதற்குவேண்டிய சிறிது சம்பாரமும் பர்ஷியாதேசத்துச் சில சாராயபுட்டிகளுமிருந்தன அரிசியையெல்லாமெடுத்து வெயிலிலே காயப்போட்டார்கள் இதற்குள் அந்தச் சாராயத்தில் கொஞ்சம் குழந்தைகளுக்கும் அந்தப் பெண்பிள்ளைக்குங்கொடுத்து அவர்களுக்குச் சற்றே சத்துவமுண்டாசச்செய்து பின்பு கொஞ்சம் உணவுங்கொடுத்து அவர்களை ஆதரித்துவிட்டு அந்த வீட்டுக்காரன் தானும் கொஞ்சம்புசித்து தன்பசியையும் தணித்துக்கொண்டான் இப்படி தருணத்தில் நல்லவுதவி கிடைக்கவே அவர்கள் இரண்டொருநாளில் முன்போலவே சுகமாய் எழுந்தார்கள்.

அந்தப் புதுமனிதன் ஆற்றுவெள்ளத்தில் தப்பிப்பிழைத்துவந்த சிறிதுநேரத்துக்கெல்லாம் அவ்வாற்றுக்கு அக்கரையி லநேக குதிரைவீரர்கள்வந்து சேர்ந்தார்கள் ஆயினும் அந்தநதி அங்கே வெகு விசாலமானதென்றும் இறங்கிப்போக ஒருவருக்கும் நிலைக்காதென்றும் கண்டு திரும்பிப்போய்விட்டார்கள் அன்றுராத்திரி அந்தப் புதுமனிதன் தன்தேகத்தில் ஏதோ வேதனைசெய்கிறதென்றுசொல்லி வருத்தப்பட்டான் அவனுக்குத் தூக்கமே வரவில்லை நாவரட்சியும் சீதளமும் அதிகரிக்கலாயிற்று அவன் தான் வழக்கமாய்க் கட்டிக்கொள்கிற சால்வையை மேலே போர்த்துக்கொண்டு அக்குடிசையில் ஒருமூலையிலே உலர்ந்தபுல்லை கீழேபோட்டுக்கொண்டு படுத்திருந்தான் பொழுதுவிடிவதற்குள் அவனுக்கு குளிருங்காய்ச்சலும் அதிகமாய்வந்துவிட்டது அப்புறமும் அது நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டேவந்து கடைசியில் ஜன்னிகூடக் காணும்படியாயிற்று அவன்தேகத்தில் காய்ச்சலதிகமாகஆக இத்தனை நாளாய் பட்டினிகிடந்துவருந்தின அவ்வீட்டுக்காரர்களுக்கு நல்லுணவினால் தேகசவுக்கியமுண்டாயிற்று.

அந்தப் பிராணியினுடையபையிலிருந்து பலபொருட்களோடுகூட ஆறுயிரம்ரூபாய் பொன்நாணயமாகயிருந்தது அவன் கொ

ண்டுவந்த சாமான்களெல்லாம் செலவழிந்துபோகவே அவ்வீட்டுக்காரன் தன்சமுசாரத்துக்கும் அந்த நோயாளிக்கும் சம்ரட்சணைக்குவேண்டிய திரவியம் சுத்தப்பையினின்றும் எடுத்துக்கொண்டு அடுத்தபட்டணத்திற்போய்வேண்டியபொருள்வாங்கிவந்தான் செலவுக்குவேண்டிய அளவுக்குமேல் ஒருகாசுகூட அவனப்பையினின்றெடுக்கவில்லை அவ்வீட்டுக்காரனுக்கு இயற்கையாலேஜீவகாருண்யமுண்டு அதோடுகூடத்தன்சமுசாரமெல்லாம் அனியாயமாய்ப் பட்டினியால் மாண்டுபோகாமல் தருணத்தில் காப்பாற்றின மகோபகாரியென்கிற நன்றியும் கூடியிருந்ததனால் அவன் தன்னால் வஞ்சனையில்லாமல் எப்போது மந்த நோயாளியண்டையேயிருந்து காத்து அவனுக்குப் பலவித உபசாரங்களுஞ்செய்தான் அதற்கெல்லாம் அவன்மனைவியுந் துணையாயிருந்தாள் அவன் உயிருக்கு எங்கே அபாயம் வருகிறதோவென்று பயந்து அவர்கள் இராப்பகலாய்க் கண்விழித்து அவனுக்குவேண்டிய வைதியஞ்செய்தார்கள் கடவுளுடையகடாட்சத்தால் அவனுக்கு தேகம் அனுகூலப்படுகிறகாலம்வந்து கொஞ்சங்கொஞ்சமாய்க் காய்ச்சல்வாங்கிச் சுகமாய் நாளளவிலே நோயெல்லாம்நீங்கிற்று தனக்காக அவர்கள்பட்ட வருத்தத்தைப்பார்த்து அவனவர்களுக்கு அனேக வந்தனஞ்செய்தான் பின்பு பள்ளன் அவனுடைய பணப்பையை அவனெதிரேகொண்டுவைத்து தான் செலவுசெய்த ஒவ்வொருகாசுக்கும் சரியாய் கணக்கு ஒப்புவித்தான் அந்த விருத்தினனும் தன் தேகத்தில் நன்றாய் வலிமைவருமளவும் அவ்வெளியர்களோடுகூடவே அங்கே வசித்துக்கொண்டிருந்தான்.

தன்தேகம் அனுகூலப்பட்டுக்கொண்டுவருகிறகாலத்தி லவன் அவர்களுடைய குணங்களையெல்லாம் நன்றாய் கண்டுகொண்டான் சிலநாளையில் யாவர்க்குந் தேகம் சுவஸ்தப்பட்டு இயற்கையான வலிமையுண்டாயிற்று அவ்வீட்டுக்காரன் மனைவி நல்லவடிவழகும் நற்குணநற்செய்கையுமுள்ள ஒருசிறுபெண் அவள் முகக்களையைப்பார்க்கும்போதே யாவரும் களிப்படையும்படி அவளவ்வளவுஅழகாயிருந்தாள் அவள்கணவனும் நல்ல சுறுசுறுப்புமுற்சாகமும் தேகவலிமையுமுள்ள ஒரு வாலிபனாயிருந்தான் அவர்களுடைய பெரியகுழந்தை ஒருபெண்பிள்ளை அப்பெண்ணுக்கப்போது மூன்றுவயதுகூட ஆகவில்லை அப்பெண் ஒரு தேவகன்னிகையைப்போ லதிரூபவதியாயிருந்தாள் அந்தப்பெண்ணினுடைய ஒவ்வொருஅவயவமும் அததற்கேற்றபடி வெகுஅற்புதமாயமைக்கப்

பட்டிருந்தனை நமக்கல்லவோ இப்படிப்பட்ட சுந்தரமான பெண் பிறந்தாளென்று அகமகிழ்ந்தவர்போல் அவ்வீட்டுக்காரர்கள் மிக மனவெழுச்சிகொண்டிருந்தார்கள்.

அப்படியிருக்க ஒருநாள் அந்த புதுமனிதன் அவ்வீட்டுப் பள்ளனும் தானுமாய்க் குடிசைவாயிலில் உட்கார்ந்திருந்தவேளையில் அவனைப்பார்த்து எனக்கு பேருதவிசெய்த புண்ணியவானே நான் உங்களைவிட்டுப் போகவேண்டியகாலம்வந்துவிட்டது உங்களுடைய சிறுகுடிசைதான் என்னைக் காப்பாற்றிற்று ஒரு எளிய பள்ளன் வீட்டில் ஒருவன்போய் தங்கியிருப்பதாய் ஒருவரும் நினைக்கமாட்டார்கள் அதனாலேதான் நான் ஒருவர்கையிலு மகப்படாமல் தப்பிப்பிழைத்தேன் நான் படுக்கையோடு படுக்கையாய் வீழ்ந்துகிடந்தகாலத்தில் நீங்க ளெனக்கு மனமொப்பிச்செய்த உதவிகட்கு அளவில்லை அதற்கு நான் பதிலுதவி என்னசெய்யமாட்டுவேன் என்ருன்,

அதைக்கேட்டு பள்ளன் ஐயா கூண்டோடு கைலாசம்போவதாயிருந்த என்சமுசாரத்தையெல்லாம் பிழைப்பூட்டுவித்த உமக்கு நான்செய்தவுதவி எவ்வளவு வீணாய் என்னை என் பெருமைப்படுத்துகிறீரென அவ னதிருக்கட்டும் உம்மால் ஆற்றுவெள்ளத்தினின்றுங் கரையேற்றுவிக்கப்பட்ட மனிதன் இன்னானென்று உமக்குத் தெரியுமாவென்று கேட்டான்.

அதற்குப் பள்ள னதை நா னறியவேண்டுவதில்லை ஒரு மன்னுயிரைப் பிழைப்பித்தேனென்பதே எனக்குப்போதும் நீர்யாராயிருந்தா லெனக்கென்ன கடைசியாய் நீரெனக்குப் பேருதவிசெய்தவர் என் னுயிரைமாத்திரமேயன்றி அதிலும் எனக்கு பதினாயிரம்பங்கு பிரியமாயிருக்கின்ற என்குழந்தைகளி னுயிரையெல்லாம் காத்தீர் இது என்மனதைவிட்டு என்றைக்காவது நீங்குமோ இந்தக் கடனை நானெப்படித்தீர்ப்பேனோ தெரியாதென அந்த மனிதன் சொன்னதாவது அதிருக்கட்டும் நாளைகாலையில் நானிவ்விடம் விட்டுப்போகவேண்டும் உமாயூனென்கிற பொசலாயசக்ரவர்த்தியினுயிரைக் காத்தோமென்று தெரிந்தால் உங்களுக்கு இன்னுமதிகதிருப்தி யுண்டாகுமல்லவா யாரோஒருவன் என்மேற்பகைகொண்டு என்னை ராஜ்யத்தினின்றுந் துரத்திவிட்டான் மறுபடி என் ராஜ்யம் எனக்குக்கிடைக்குமளவும் யாராவது பிறதேசத் தரசனண்டைதா னடைக்கலம்புகுந் திருக்கவேண்டுமென்ருன் அவன்

மொகலாயமகாராசாவென்றுதெரியவே அப்பள்ளனு மவன்மனை வியுஞ் சாஷ்டாங்கமா யவன்காலில்வீழ்ந்தார்கள்.

ராஜா அவர்களைப்பார்த்து நான்கொடுக்கிற பரிதானத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள் எழுந்திருங்களென் றுசொல்லி யவர்களை யெழுப்பி இனிமேலாவது நீங்கள் சவுக்கியமாய் வாழுங்களென்று தன்கையிலிருந்த விலைபிலாமாணிக்கமொன்றுபதித்த கணையாழி யையும் கழற்றி யவன்கையிற்போட்டு இரண்டாயிரம்ரூபா மொகராவுள்ள ஒருபையையு மவன்கையிற்கொடுத்தா னிதைவிட பாக்கிய மவர்களுக்கு வேறென்ன அவர்க ளதை ஆனந்தக்கண்ணீர்பெருகப்பெருகப் பெற்றுக்கொண்டார்கள் தன்தேகம் நன்றாய் சொஸ்தப்பட்டு தனக்கியற்கையான வலிமை வந்துவிடவே மறுநாட் காலையி லுமாயூன் இனி நமது தலைவிதி எப்படியாகுமோவென்று நினைத்துக்கொண்டே அவ்விடம்விட்டுப்போயினன்.

உமாயூன்சக்ரவர்த்தி பகைவரால் ராஜ்யத்தினின்றுந் துரத்தப்பட்டு ஓடிப்போய் வழியில் ஒரு பள்ளன்வீட்டில் தங்கியிருந்து அப்புறம் போய்விட்டானென்று சொன்னோமல்லவா அதுமுத லப்பள்ளனுடைய குடும்பம் செல்வமும் சாய்காலுமாய் விருத்தியடையத்தலைப்பட்டது உமாயூன் கொடுத்துவிட்டுப்போன பொருளைக்கொண்டு பள்ளன் வேண்டிய ஆடுமாடுகள்வாங்கிவிற்று சில நாளைக்குள்ளே யவன்கொடுத்த இரண்டாயிரம்ரூபாயை மேன்மேலும் விருத்திபண்ணி விசேஷதனவானாயினன்.

அவனுடைய மூத்தமகள் சிறுபிராயத்தில் காணப்பட்டது போலவே நல்லபருவத்தில் யாவருப்பார்த்து வியக்கத்தக்க சிறந்தவடிவழகோடு மிகப்பெருமைபெற்ற பெண்மணியானாள் ஆயினு மவளுக்கு உடனே கலியாணமாகவில்லை பள்ளன் பெண்ணை உயர்ந்தசாதியிற்பிறந்தவன் எவன் கலியாணஞ்செய்துக்கொள்வான் சுயசாதியிற் கலியாணஞ்செய்துக்கொள்ள அவளுக்கு சிறிதும்விருப்பமில்லை அவர்களுடைய எழ்மையையும் ஜாதித்தாழ்விறுலுண்டான யிகழ்ச்சியையுங்கண்டு அந்தஜாதியார் எல்லோரிடத்திலும் அவளுக்குவெறுப்புண்டாயிற்று அவர்களிடத்தி லாசைகொள்ளும்படி யவள் தன்மனதை வேண்டுமென்று எவ்வளவுதான் திருப்பினாலு மது திரும்பவில்லை அதுகண்டந்தப்பெண் கலியாணமில்லாமல் ஆயுளளவும் இப்படியே துக்கப்படவேண்டுவதுதான் நம்முடைய தலைவிதியென்றெண்ணி அதைப்பற்றி எப்போதும் மனதில் கவலைப்பட்டுக்கொண்டேயிருந்தாள்.

தன் பெண்ணினுடைய பரிதாபத்தைப்பார்த்து அப்பள்ள னுக்கு மிகுகவிசனமுண்டாயிற்று ஆயினு மதைத்தீர்க்க அவனால் ஆகவில்லை அந்தநிலையைப்பார்த்து அவ னிவ்வுலகவாழ்க்கை எப் போதும் எப்படிப்பட்டவனுக்கும் மேன்மேலும் துக்கங்களையே தருகிறதென்றும் தன்னினத்தாருக்குள்ளே தான் கொஞ்சம் பெ ருமைபெறும்படி அப்போது தனக்குண்டான கொஞ்சம் பாக்கிய மே யின்னுமெவ்வளவோ சங்கடங்களுக்கெல்லாம் இடமான இப் படிப்பட்ட துக்கத்தைத் தந்ததென்றும் கண்டுகொண்டான் ஒரு வன் எவ்வளவு ஏழ்மையானநிலையிலிருக்கிறனோ அவ்வளவுக்கவ் வளவுநலம் அந்தஸ்து உயரவுயர சங்கடங்களும் மனவருத்தங்க ளுமே அதிகமாகின்றனவென்றும் அவனுக்குத் தெளிவாய்த்தெரி ந்தது இப்போ தவன் தனிகனனது உண்மையேயாயினு மந்தச்செ ல்வம் இனத்தாரினின்று மவ னநதஸ்தை மிகவும் உயர்த்தி அவ னைத் தனியேவாழச்செய்தது அப்படியே யவன் மகளையும் தனியா க்கி அவள் இவ்வுலகவின்பம் ஒன்றையுமே அனுபவிக்கவொட்டா மற்செய்தது அவ னெவ்வளவுதான் சீதனங்கொடுத்துத் தன்மக ளைக் கட்டிக்கொடுக்கத்துணிந்தாலும் பள்ளன்மகளை உயர்ந்தகுல த்தார் ஒருவரும்வந்து கைபிடியார்கள் அப்பெண் தன்மனதிற் கொண்ட ஒருவிதமான அவமதிப்பை விட்டாலொழிய அவளுக் குச் சுயஜாதியிலும் விவாகமாவதற்கில்லை.

அனேகம்பள்ளர்கள் மோகனமென்னுமந்தப்பெண்ணைக் கலி யாணஞ்செய்துகொள்ள ஆசைகொண்டு அடிக்கடிவந்து மன்றாடி னர்கள் ஆயினு மவ ளவர்களுடைய நிலையைப்பார்த்து பரிதாபப் பட்டாளேயொழிய ஒருவரிடத்திலாவது மனமிரங்கவில்லை இப்ப டியாக அவள் தனித்தே காலங்கழிக்கும்படியாயிற்று நீஒருவரும வேண்டாமென்று விலக்கிவிடுகிறயே ஆனல் நீ கலியாணமேயில லாமல் கன்னிகையாகவேதான் காலங்கழிக்கப்போகிறயோவென் று யாராவதுவந்துகேட்டால் அதற்கவள் அப்படியில்லை நானென் னசெய்வேன் ஒருவரிடத்திலாவது என்மனம் பதியவில்லையே யா ரிடத்தி லென்மனம் பற்றுகிறதோ அவருக்கு மணமாலைசூட்ட ஆ வலுடன் காத்திருக்கிறேனென்று பதிலுரைப்பாள் ஆயினும் ஒரு வரிடத்திலாயினும் அவள்மனம் பற்றவுமில்லை அவளுக்கு கலியா ணம் ஆகவுமில்லை.

இப்படியே மோகனத்திற்கு பதினைந்துவயதாய்விட்டது தம் முடையபெண்ணுக்கு சீக்கிரம் கலியாணஞ்செய்துபார்க்கவேண்டு

மென்று ஆசைகொண்டிருந்த அவளுடைய தாய்தந்தையர்கட்கு அவ்வளவுதுக்கமாயிராது அவர்களெப்போது மகேசிந்தையாய் தங்களாலானமட்டும் அப்பெண்ணுக்கு புத்திசொல்லி தங்கள்ஜாதியிலேயே ஒருவனைக் கலியாணஞ்செய்துகொள்ள வேண்டினார்கள் ஒன்றுமவள்மனதிலேறவில்லை தான்பிடித்ததே பிடிவாதமாயிருந்தாள்.

இப்படியிருக்க ஒருநாள்ராத்திரி மோகனம் பாயிலேபடுத்து தூங்குகையில் நல்லபாம்பொன்றுவந்து அவள் தலையின்கீழ் தலயணையாகச் சுருட்டிக்கொண்டிருந்தது அதினுடம்பு சில்லென்று மேலேபடவே அவள் இதென்னவென்று திடுக்கிட்டெழுந்தாள் உடனே யந்தப்பாம்பு எழுந்து படத்தைவிரித்து ஆடிக்கொண்டு அவள்கழுத்தைச் சுற்றிக்கொண்டு அவளை யசையவிடாமல் நகரவொட்டாமற்செய்தது பாம்பு தன்னைப் பிடித்துக்கொண்டிருக்கிறதென்று அவளுக்குத்தெரியவே கைகால்களெல்லாம் குடைவது போலவும் மரமரப்பதுபோலவும் விஷச்செய்கை என்னென்னவுண்டோ அவையெல்லாமவள்புத்தியில்தோன்றின கைகால்களை அசைக்கக்கூடவில்லை இப்படி சற்றே தவித்தாள் இரண்டொருநிமிஷத்தில் அந்தப்பாம்பு அவள்கழுத்தினின்றும் இறங்கி மெதுவாய் ஒருவர்கண்ணுக்குந்தெரியாமல் ஓடிப்போயிற்று அவளுடம்பில் சிறிதுகாயமும் படவில்லை சிலநேரத்தில் அவள்கொண்டிருந்தபயமும் தணிந்தது பாம்புவந்தசெய்தி அவ்வீட்டுக்காரரெல்லாருக்குந்தெரிந்து அதைத் தேடிப்பார்த்தார்கள் அது அவ்வீட்டிலெங்குமகப்படவில்லை அது என்னபுதுமையோ?

மோகனம் அப்படியே படுத்துக்கொண்டிருந்தாள் பாம்புவந்து நம்மைப்பிடித்ததே இது என்னவென்கிற சிந்தைமட்டு மவள்மனதில் புகுந்துகொண்டது ஆயினு மவள் பாம்பின்வாயிலகப்பட்டுத் தப்பினதால் இது ஏதோ ஒரு நல்லகாலத்திற்குத்தான் குறிப்பென்று அனைவரு மெண்ணினார்கள் இதற்குமுன்னே அவள் இப்படியே இரண்டுதரம் பெருத்த அபாயத்தினின்றுந் தப்பிப்பிழைத்தவள் அக்கிராமதேவதை யவர்கள்செய்த பூசையினாலவள் சமிடத்தில் பரிபூரணமாய்க் கருணைகூர்ந்திருப்பதினாலேதா னப்படியெல்லாமாயின ஆயினும் பாம்பைக்கண்டதினாலுண்டான திகிலொன்று மவள்மனதைமட்டும் பதைத்துக்கொண்டேயிருந்தது பிறகு ராத்திரி அவளுக்கு நித்திரையேவரவில்லை அப்படியவள் நித்திரை

யில்வாமலிருந்தும் கனவுபோ லென்னென்னவோ தோற்றங்கள்
அவள்மனதில் தோன்றிக்கொண்டேயிருந்தன அப்படியிருந்து வி
டியநேரத்தி லற்புதமானகினவொன்றுகண்டா ளப்போது தான்
ஒருபள்ளச்சியா யவள்மனதிற்குத் தோன்றவில்லை சிறந்த ஆடை
யாபரணங்களணிந்த ஒரு மகாராஜாவினுடைய மனையாட்டியாக
வும் ராஜபரிஜனங்களெல்லாஞ் சூழ்ந்துநிற்கத் தான் அவர்களினடு
வேயிருப்பதாகவும் தன்னினத்தாரெல்லாம் கீழேவீழ்ந்து தன்னை
வணங்கிக்கொண்டிருப்பதாகவும் இப்படி அதிசயமானகினவொன்
றுகண்டு உடனே கண்விழித்துப்பார்த்தாள் ஒன்றும் காணப்பட
வில்லை சூரியனுதயமாயிருக்கக்கண்டு அதைக் கையெடுத்துத்தொ
ழுது எழுந்தாள்.

அந்தப் பள்ளன்வீட்டுக்குக் கொஞ்சதூர மப்பால் வள்ளுவ
ச்சி ஒருத்தியிருந்தாள் பற்பல மாயைமந்திரம் தெரிந்தவளென்
றும் நடக்கப்போகிறசங்கதிகளையெல்லாம் முன்னாய்க் கண்டறிந்து
சொல்லுகிறவளென்றும் அப்பக்கமெங்கும் பிரசித்திபெற்றிருந்
தா ளவள் வல்லமையைப்பற்றி பலவிதமாய்ச் சொல்வார்கள்:

அவர்கள் மனிதர்களுடையகுடல்களைத் தின்பவர்களாம் அ
வர்கள் தங்கள்பார்வையினாலும் மந்திரத்தினாலும் பிறருடையகு
டல்களைத் திருடுவார்கள் பார்வையினாலேயே யாவரையும் மயங்
கச்செய்து அவர்களிடத்திலிருந்து மாதுளம்விதைபோன்றவேதோ
ஒருபொருளைத்திருடி தமது கால்தசையில் ஒளித்துவைத்துக்
கொள்வார்கள் அவர்கள் ஒருநெல்லை நெருப்பிற்போட்டா லது
பெரிய பூசினிக்காயளவு பொரிகின்றது அப்பொரியை யவர்களா
றுபேர் பகுந்துத்தின்பார்களானால் உடனே அவர்களுடைய மா
யையால் மயக்கப்பட்டவர்கள் யிறந்துபோவார்கள் யாராவதொரு
வன் அந்த மாயாவினுடைய கால்தசையையறுத்து அங்கிருக்குந்
தானியத்தையெடுத்து மயக்கப்பட்டவனுக்குக்கொடுத்து தின்ன
ச்சொன்னா லுடனே அவன் சாகாமற் பிழைப்பான் ஆயினு மப்ப
டி ஒருவரும் செய்யவொட்டாம லந்த மாயாவிகள் வெகு எச்ச
ரிக்கைசெய்துக்கொண்டிருப்பார்கள் இவைகளோடுகூட அந்த
மாயக்காரர்கள் தூரதேசத்துச்செய்திகளை ஒருநொடியி லறிந்துச்
சொல்வார்கள் எவ்விதமானநோயையும் தங்கள்மந்திரத்தினால் தீ
ர்ப்பார்களென்று இப்படி யவர்களுடைய மகிமையைப்பற்றி பல
விதமாய்ச் சொல்வதுண்டு.

இவ்விதமான பலவினோதச்செய்கைகளுள்ள ஒரு வள்ளுவச்
சியைப்பற்றி மேலேசொன்ன பள்ளன்மகளான மோகனம் வெகு
வாய்க் கேள்விப்பட்டிருந்தாள் அப்பெண் அவளை ஒருநாளாவது
கண்டதில்லை மனிதர்களுடைய விதிப்பயனை நன்றாய்க்கண்டறிந்து
நடக்கப்போகிறசெய்கைகளைச் செம்மையாய்ச்சொல்லும் திறமை
யுடையவளென்று பிரசித்திபெற்றிருந்ததோடுகூட அந்தத்தேச
த்தில் பஞ்சமுண்டானாலும் கொள்ளைநோயுண்டானாலும் மற்றெந்
தநிலைமையுண்டானாலும் எல்லாமவளாலேயே செய்யப்படுகின்றன
வென்றெண்ணி அனைவரும் பயப்படத்தக்கவளாயிருந்தாள்.

அவளை எப்படியாவது போய்ப் பார்க்கவேண்டுமென்று வெ
குநாளாய் ஆவல்கொண்டிருந்த மோசனம் ஒருநாளவளிடத்திற்
குப் போனாள் அந்த ஜோசியக்காரி ஒரு மலையடிவாரத்தில் வசித்
துக்கொண்டிருந்தாள் அவ்விடம் மனிதசஞ்சாரமே யில்லாமல்
தனிப்புறமாக வெகு ரமணியமாயிருந்தது மோசனம் அவ்விடத்தி
ற்குப்போக அஞ்சிக்கொண்டே மெதுவாயவளண்டைபோய்ச்சே
ர்ந்தாளத்தருணத்தி லந்த வள்ளுவச்சி ஒருபாறையின்மேல் உட்
கார்ந்திருந்தாள் சப்பைமூக்குப் கிளாவினைப்போல் மண்டையிலழு
ந்தியகண்ணும் குழக்கட்டைபோன்ற உதடும் முறம்போன்றகாது
மாய் அவள்வடிவம் மிகவும் பார்க்கவழுக்காயிருந்தது அவளுடை
யவடிவத்தைப்பார்த்தால் சுமார் நூறு நூற்றைம்பதுவயதானவ
ள்போல் தோன்றிற்று மோகனம் கொஞ்சதூரத்திலிருந்து அவ
ளைப்பார்த்தவுடனே தைரியமாய்ச் சமீபமென் றவளருகிற்போய்
அவள்கையில் காணிக்கையாக ஒருமோகராகொடுத்து தாயே என
க்கு ஒருஜோசியம் சொல்லவேண்டும் வருங்காலத்தையெல்லாம்
கண்டறிந்துசொல்லத் தங்களுக்கு நன்றாய்த்தெரியுமே இப்போது
இவ்வுலகத்தில் நான் வாழ்கிறவாழ்க்கை எப்படியிருக்கிறதென்
றால் மரம் செடியொன்றுமில்லாமல் எரிந்துபோன நடுக்காட்டில்
செங்குத்தான ஒருகுன்றின்மேலேறிக்கொண்டு தவிப்பவனுடை
யபிழைப்புபோ லிருக்கிறதென்றுசொன்னாள் அதைக்கேட்டவள்
குழந்தாய் அப்படியே கண்டறிந்து சொல்லுகிறேன் இப்படிப்ப
ட்ட சிறந்தவிஷயங்களையெல்லாம் சும்மா கண்டறிந்து சொல்லக்
கூடுமோ இதற்கெல்லாம் அதிகதொகைகொடுக்கவேண்டுமென
மோகனம் மற்றொருபொசுறுவை அவள்மடியிலே போட்டாள்.

அதைப்பார்த் தந்தக்கிழவி பெண்ணே உன்னைப்போலத் தா
ராளமானகை ஒருவருக்குமில்லை உன்னிஷ்டமெல்லாம் சீக்கிரமே

கைகூடும்; துரிதத்திலேயே உனக்கு நல்லமதிப்பும் க்ஷேமமும் உண்டாகப்போகிறது; என்னோடு கூடவே வா என்று சொல்லித் தான் முன்னே சென்றாள். மோகனமும் அவளைப்பின் தொடர்ந்து போனாள். அவள் வசிக்கிற குகையின் வாயில் ஒருவர்கூடத் தாராளமாய் நுழைந்து போகக்கூடாததாயிருந்தது. அதற்குள் நுழைந்தவுடனே ஒருவர் முகம் ஒருவர்க்குத்தெரியவில்லை. அந்தப் பேரிருளைப் பார்த்து மோகனம் மிகவும் பயந்து அப்புறம்உள்ளே ஒத்திப்போக அஞ்சி, என்ன சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டோமென்று அங்கேயே திகைத்து நின்றாள். சிறிதுநேரம்கழித்து அந்தக்கிழவி உள்ளே போய்வந்து மோகனத்தைப்பார்த்து, குழந்தாய்! எதைப்பற்றி நீ இப்போது கேட்கிறாயென, அந்தப் பெண், அம்மா நான் ஒருபள்ளச்சி; பள்ளன் பணக்காரனானதற்குக் காரணங்கூட நான் எடுத்துச் சொல்ல வேண்டுமோ? இவ்வுலகம் முழுமையும் பொதுவாய்ப் பார்க்கில் கடவுள் கண்ணுக்கு எல்லாம் ஒன்றுதானே. என் எண்ணமெல்லாம் தங்களுக்குத்தானே தெரியாதா? நான் வாயைவிட்டுச்சொல்லவேண்டுமோ என்றாள்.

அதைக்கேட்டுவள்ளுவச்சி, உன் இஷ்டப்படியே உனக்குக் கலியாணம் நடக்கும்; சுபஜாதிப்புருஷனைக் கலியாணஞ் செய்து கொள்ளலாம்; ஒருவேளை அப்படி நடவாமற்போனாலு போம் எப்படியாவது உனக்குக் கலியாணமாவதற்குச் சந்தேகம் இல்லையென், மோகனம், ஒருபள்ளனைக்கலியாணஞ் செய்து கொள்வதைவிட எனக்கு உயிரைவிடுவதே நல்லது என்று சொன்னதற்கு அவள் அப்படி ஒருபோதும் நடவாது; உனக்குகலியாணமாவதுநிச்சயம் நீ பெண்ணும் பிள்ளையுமாக வெகுசெல்வமாய் வாழ்வாய்; இன்னும் விசேஷமாய்த் தெரிந்து கொள்ளவேண்டு மென்றால், உன் முகக்குறிகளையும் நக்ஷத்திர பலன்களையும் நன்றாய்ப்பார்த்துத் தெரிந்துசொல்லவேண்டும்; நாளை இந்நேரத்திற்குவந்தால் நன்றாய்ப் பார்த்துச் சொல்லுகிறேன்; சகுனங்கள் நன்றாய் ஆகிறது; போய்வாயென்று சொல்லி, அவளை அந்தக் குகையைத்தாண்டி வெளியே கொண்டுபோய்விடுஎன்று தன்நாயைஏவினாள். உடனே அந்தநாய்வெளியேஓடிக்குகைவாயிலண்டைபோய்நின்று குரைத்தது அதைக்கேட்டு ஜோசியக்காரி அதோ நாய் அழைக்கிறது நாளையத்தினம் வந்தால் இன்னும் எவ்வளவோ நல்ல சங்கதிகளெல்லாம் கேட்கலாம். வருங்காலமுழுமையும் ஒரே நிமிஷத்தில் கண்டறிவது மிகவும் கடினமல்லவா? நாளையத்தினம் வரும்போது மோகராவைமட்டும் மறவாதே; கூலியில்லாமல் எந்தக்காரியந்தான் ஆகும் என்றாள்.

போராசைகொண்டு அவள் சொன்ன சொல்லைக்கேட்டு மோகனத்திற்குக் கொஞ்சம் அவளிடத்தில் வெறுப்புண்டாயிற்று. ஆயினும் தன்விதி எப்படிப்பட்டதோ தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆவல் அதிகமாயிருந்ததனால், எவ்வளவு செலவானாலும் சரி, அதை அவசியம் அறிந்துகொள்ளவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டே வீட்டுக்குப் போனாள். அவள் போய் வந்த செய்தியைக்கேட்டு வீட்டில் தாய் தந்தையர்களும் சந்தோஷப்பட்டார்கள்.

வீட்டிற்குப் போயும் மறுநாள் எப்போது அந்தவேளைவரப்போகிறதென்று மோகனம்அதே ஞாபகமாய்க் காத்துக்கொண்டிருந்தாள். அந்நேரமானதும் மறுபடிமோகனம் அவளிடம் போய்ச்சேர, ஜோசியக்கிழவி மோகனத்தைப்பார்த்தவுடனே கையை நீட்டினாள். மோகனம் ஒருமோகரா கொடுத்தாள். அதைக் கண்டு அந்தக்கிழவிமுகங்கறுத்து நீட்டினகையை நீட்டினபடியே இருக்கவே மோகனம் மற்றொருமோகராவும்கொடுத்தாள். உடனே அவள் தன்பேராசை அடங்கினவள்போலக் கையை மூடிக்கொண்டு எழுந்து உள்ளேவா குழந்தாய் என்றுசொல்லி அவளை அழைத்துக்கொண்டு உள்ளே போனாள். மோகனமும் முதனாள் போலவே அந்தப் பேரிருளான குகைக்குள்ளே போய் ஒன்றுந்தெரியாமல் நின்றாள். சிறிதுநேரம்கழித்துவந்து அந்தக்கிழவி, இன்றையதினமும் உன்பாக்கியத்தை நன்றாய்ச் சொல்லக்கூடவில்லை; நாளைவாவென்று சொல்ல, மோகனத்திற்கு மிகவும் விசனமுண்டாயிற்று; மோகராவை மறவாதே என்கிற வார்த்தையையும் கேட்கவே அவள் ஒன்றும் பதிலுரைக்க நாவெழாமல் சரேலென்று புறப்பட்டு வீட்டுக்குப் போய்விட்டாள். தன் அதிர்ஷ்டத்தை அறியவேண்டுமென்று அவள் கொண்டிருந்த பேராவலுக்கு இந்த வெறுப்பு எவ்வளவு! மறுநாளும் அப்படியே மோகனம் அவளிடத்திற்குச் சென்றாள்.

பலநாள்வரையில் இப்படியே நடந்துவந்தது, ஒவ்வொருதடவையிலும் கூலிமட்டும் குறையவில்லை இப்படி வெகுநாளாகவே, அந்தக்கிழவி மோகனத்தின் பொறுமையைப்பார்த்துப் பரிதாபப்பட்டாளோ, என்னவோ, ஒருநாள் நாளை யிரட்டிப்புக்கூலி கொண்டுவந்தால் உன் அதிர்ஷ்டத்தைத் தெரிந்துகொண்டுபோகலாம் என்று உறுதியாய்ச்சொன்னாள் பொறுத்ததெல்லாம் பொறுத்தோம் இன்றையதினம்மாத்திரம் பொறுப்போம் என்று அவள் அப்படியே மறுநாளும் போனாள். அவளைப் பார்த்தவுடனே ஜோசியக்கிழவியும் புன்னகையோடு கூலியை வாங்கிக்கொண்டு

யையிலிருந்து ஒருபாம்பை எடுத்துத் தட்டிப் படமெடுத்து ஆட்ச்செய்து மோகனத்தை உள்ளே அழைத்துக்கொண்டு போனாள். மோகனம் அந்தக் குகைக்குள்ளே போனவுடனே நாகம் சீறிற்று; அத்தருணத்தில் அந்தக் குகைக்குள்ளே பளபளவென்றுஒருஒளி உண்டாயிற்று. அந்த ஒளிக்குப்பின்னால் ஜோசியக்கிழவி கழுத்திலே நாகத்தைச் சுற்றிக்கொண்டு வெகுபயங்கரமாகநின்றாள். அவளைப்பார்த்து மோகனம் மனஞ்சலியாமலே தைரியமாயிருந்தாள். அந்தகிழவி, பெண்ணே, உன் அதிர்ஷ்டத்தைத் தெய்வவாக்கு வந்து சொல்லுகிறது கேள்: நீ கன்னிகையாகவே யிருக்கமாட்டாய்: சீக்கிரமே கலியாணமாகும், நீ மேலான கவுரவம் பெற்றுவாழ்வாய்; குழந்தாய், மொகலாயராஜன் அரண்மனைக்குப்போ; நல்ல பாக்கியம் உண்டாகும்; இல்லாவிட்டால் இங்கே பள்ளர்களோடு கூடவேதான் காலங்கழிக்கவேண்டும்; உன் அதிர்ஷ்டத்தைக் கண்டாயிற்று; புறப்பட்டுப்போ வென்றாள். உடனே அங்கிருந்த ஒளி மழுங்கிப்போயிற்று. மோகனமும் அந்தக் குகையைவிட்டு வீடு போய்ச்சேர்ந்தாள். அந்தஜோசியம் நேராய்க்கடவுளேவந்துசொன்னதாக எண்ணி உடம்பு பூரித்து அவள் அன்றுமுதல் அதையே சிந்தித்துக்கொண் டிருந்தாள்.

இப்படியிருக்க ஒரு நாள் மோகனம் தகப்பனைப் பார்த்து ஐயா, மொகலாயராஜதானியைப் பார்க்கவேண்டுமென்று எனக்கு மிக்க ஆவலாயிருக்கிறது. ஏனென்கிறீரோ ? மகம்மதியர்களுக்கு, உயர்ந்த ஜாதிபாரிடத்திலேயே பகை அதிகம். அவர்கள் பள்ளரை அவ்வளவாய்ப் பகைப்பதில்லை, நமது செல்வத்தினாலாவதுநமக்கு அங்கேகொஞ்சம்மரியாதைகிடைக்காதா? போய்வரலாமென்றாள்.

அதைக்கேட்டு அவன் அப்படியே ஆகட்டும் அதற்கு யாதொருதடையுமில்லை; மேலும் நான் முன்னொருகாலத்தில் மொகலாயராஜாவினுடைய உயிரைக்காப்பாற்றி யிருக்கிறேன்: அப்போது அவர்கொடுத்த பெருங்கொடையினாலேதான் நமக்கு இந்த ஐசுவரியமெல்லாம் உண்டானது. அந்தராஜா கொஞ்சகாலம் தேசாந்திரங்களிலே திரிந்து கொண்டிருந்து சிறிது காலமாய்ச் சிங்காசனம்பெற்று வெகுநீதியாய் ராஜ்ய பரிபாலனம்பண்ணி வருகிறார்; நாம் இப்போது அவரைப் போய்ப்பார்ப்பது நல்லதுதான்; ஒருவேளை முன்ஞாபகம் வந்து நம்மை விசேஷமாய் ஆதரித்தாலும் ஆதரிப்பார்; நன்மை உண்டானமட்டும்உண்டாகட்டும் போவோம் வா என்றான்.

அப்படியே அவர்களெல்லாரும் அவ்விடம் விட்டுப்புறப்பட்டு டில்லிப்பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடம் போய்ச்சேர்ந்த சிலநாளில் மோகனம் என்கிற பெண்ணினுடைய அழகும்சாமர்த்தியமும் கொஞ்சங் கொஞ்சமாய் அப்பட்டணத்தில் பிரசித்தியாகத்தலைப்பட்டது மகம்மதியர் போலப்பள்ளர் வீட்டுக்குள்ளேயே மூடிக்கொண்டிருக்கிறவர்களல்ல ராதலால், அந்தப் பெண்கடைகாட்சிமுதலிய இடங்களுக்குப் போவாள்; அங்கங்கே அவளைப்பலபேரும் பார்ப்பார்கள். அவளைப் பார்த்தவர்களுள் அவளுடைய சவுந்தரியத்தைக்கண்டு ஆச்சரியப்படாதவர் ஒருவருமில்லை.

அப்படியிருக்க ஒருநாள்காலையில் மோகனம் கடைத்தெருவுவழியாகப்போனாள். அப்போது அங்கேகூட்டம் அதிகமாய்க் கூடியிருந்ததனால் அந்தக்கும்பலின் நடுவேபோகிறபோது ஒருபல்லக்கின் கணைபட்டு அவள்கீழேவிழுந்தாள். அதைக்கண்டு அண்டையிலிருந்த ஜனங்கள் கூவின கூச்சலைக்கேட்டு அந்தபல்லக்குக்குள் இருந்தமனிதன் சரேலென்று பல்லக்கைவிட்டிறங்கி அந்தப்பெண்ணைப்பார்த்து, அவளையெடுத்துப்பல்லக்கில்விட்டுக்கொண்டு அவள் வீட்டுக்குப்பல்லக்கைக் கொண்டுபோகச்சொல்லித்தான் பல்லக்கைப்பிடித்துக்கொண்டு காலாலே நடந்துபோனான்.

தான் ஒருநாளும்பாராத ஆடம்பரங்களோடு கூடப்பல்லக்கு ஒன்று தன் வீட்டுவாயிலில் நுழையக்கண்டு மோகனத்தின் தந்தையான பள்ளன் இதென்னவென்று பிரமித்து, தனக்கு ஏதோ அபாயம் வந்துவிட்டதென்றெண்ணி வெளியே ஓடப்பார்த்தான். தன்பெண்ணை அந்தப்பல்லக்கில் அடைத்திருக்கப்பார்க்கவே துக்கம் அதிகரித்துக்கோவென்று கதற ஆரம்பித்தான். அதுகண்டு அந்தப்பெண் சீக்கிரம்பல்லக்கை விட்டிறங்கித் தகப்பனைசமாதானப்படுத்தி நடந்தவர்த்தமானத்தைச்சொல்லி அவனைக்களிக்கச் செய்தாள். அதைக்கேட்டபள்ளன் அந்தமனிதனை உபசரிக்க, அவனும் அவ்வேளை அவர்களோடு அவ்வீட்டிலேயே சுகமாயிருந்து அங்கேயே போஜனமும்பண்ணினான். அதுகண்டு, இதென்ன! பள்ளன் வீட்டில் இந்தப்பிரபு போஜம்பண்ணினதென்று யாவரும் ஆச்சரியப்பட்டார்கள் பின்பு இவன் நான் அடிக்கடி இங்கேவந்து உங்களைக்கண்டு கொள்ளுகிறேனென்று சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனான்.

இவ்வளவு காரியஞ்செய்த மனிதன் உபாயுனுடைய மந்திரியான பிராம்கான் என்பவனுடைய மகன்; அரண்மனையிலுள்ள அழகிய ராஜஸ்திரீகள் எத்தனையோபேர் தன்மேல் ஆசைகொண்

டிருக்க அவர்களெல்லாம் விட்டு மோகனத்தைப்பார்க்கும்போதே அவன் அவளிடத்தில் ஆசைகொண்டான். வேண்டாமென்று யாவரையும் கழித்தமோகனமும் அவனைப்பார்த்தபோதே இவன் தான் நம்முடைய நாயகனென்று எண்ணினாள்:

அவ்விருவருடைய மனநிலைமையும் பார்த்து அவளுடைய அபிப்பிராயத்தை நன்றாய் அறிந்துகொண்டு மோகனத்தின் தகப்பன் ஒரு நாள் பெண்ணைப் பார்த்து, குழந்தாய், உன்னுடைய மனப்போக்கைப் பார்த்து, எனக்கு வெகு சந்தோஷமாயிற்று; கடைசியாய் ஒருசிறந்த புருஷனிடத்தில் ஆசைகொண்டாயே என்றுசொல்ல, அவளும் அதைப் பெருமையாகவே அங்கீகரித்தாள். அந்த மந்திரிகுமாரன் அடிக்கடி அவர்கள் வீட்டுக்குப் போவதும் விநோதமாய் அவர்களோடு பேசுவதுமாக இருந்தான். அவர்களோடு பழக்கம் அதிகமாக ஆக அந்தப்பெண்ணிடத்தில் அவனுக்கு ஆசையும் அதிகமாகிக்கொண்டேவந்தது. அந்தப் பெண் தாழ்ந்த ஜாதியிற் பிறந்தவளானது பற்றிப் பிரசித்தமான பாடசாலைகளில் போய்ப்படிக்கக் கூடாம லிருந்தாலும், தன்குடியிருப்பு வீட்டுக்குச் சமீபத்திலிருந்த ஒரு உபாத்தியாடரிடத்தில் அவருடைய உதவியாலும் தன்னுடைய யுக்திபுத்திகளாலும் சீக்கிரத்திலேயே போதுமான கல்வி கற்றாள்.

அவர்களிருவரும் ஒருவர்மேலொருவர் ஆசைகொண்டது முதல் அந்தமந்திரிகுமாரனும் மோகனமும் நாள்தோறும் எங்கேயாவது ஓரிடத்தில் ஒன்றாய்க்கூடி விநோதமாய்ப்பேசுவது வழக்கம். அப்படி ஒருநாள்பேசிக்கொண்டிருக்கையில் மந்திரிமகனுக்கும் பள்ளன் மகளுக்கும் அடியில்வருமாறு ஒருசம்பாஷணைநடந்தது.

மந்திரி உன்தாய்தந்தையர்களைவிட்டிருப்பதென்றாலும் உனக்குச் சந்தோஷமல்லவா?

மோக. அதுஎனக்குச்சந்தோஷமுமன்று அப்படி அவர்களை விட்டிருக்கும்படியான காலமும்வராது நான் ஏன் அவர்களைவிட்டுப் போகவேண்டும்?

மந்திரி. உனக்குக்கலியாணமானாலோ?

மோக. அப்போது அவர்களும்என்னோடுகூடவேவாழட்டும்.

மந்திரி. உன்கணவனுக்கு அவர்களிடத்தில் விருப்பமில்லாமற்போனாலோ?

மோக. அப்படிப்பட்டவனுக்கு என்னிடத்திலும் விருப்பமிராது தான். ஒருவனுக்கு ஒன்றின்மேல் உண்மையாய் ஆசையிருக்குமானல், அதற்காக அதைப்பற்றின எல்லாவற்றின் மேலும் ஆசையுண்டாகாதா?

மந்திரி. உன் தாய்தந்தையர்கள உன்னோடுகூட வந்திருக்கக்கூடாததாய் நீ ஒருவனோடுசம்பந்தப்பட்டிருந்தாலோ?

மோக. அதென்ன சம்பந்தமோ எனக்குத்தெரியவில்லையே.

மந்திரி ஆசைப்பெருக்கு அதிகரித்துக் கலியாணமில்லாமலே ஒருவரோடு சேர்வதாக நினைத்துக்கொள்; அப்போது என்னசெய்வாய்?

மோக. அப்படிப்பட்டகாரியம் நான் ஒருபோதும் செய்யத் துணியமாட்டேன்; ஏன் வீணன பேச்சு பேசுகிருய்.

மந்திரி. ஆனல் நீ அப்படி ஒருவனையும் நேசிப்பதில்லையோ?

மோக. உலகநீதிப்படி என்னைத் தொட்டுத்தாலிகட்ட விரும்பாதவனை நான் நேசித்தாலென்ன? நேசியாவிட்டாலென்ன?

மந்திரி. உன்னிடத்தில் எனக்கு மனப்பற்று இவ்வளவென்பதைக்கூட நான் உன்னுடன் வாய்விட்டுச்சொல்ல வேண்டுமோ? ஆயினும் ஜாதிக் கட்டுப்பாடுகளுக்கும் சற்றே உட்படவேண்டியிருக்கிறது எப்படியானலும் உன்னிடத்தில் எனக்கு இருக்கிற ஆசையும்பெருமையும் நான் சாமளவும் அழியாது. நமக்குள்மறைவடயேன்? தெளிவாய்ச் சொல்லுகிறேன்கேள்; நீ சொல்வதெல்லாம் நியாயமே. நீ ஜாதியில் பள்ளச்சியென்பதொன்று மாத்திரமே நான் உன்னைக் கலியாணஞ்செய்து கொள்ளத்தடையாயிருக்கிறதென்பதை நான் உனக்கு எடுத்துக்காட்டவேண்டுமோ? நான் அப்படிக்கலியாணஞ் செய்துகொண்டால் இத்தேசத்தாரெல்லாம் என்னைத்தாழ்வாக நினைப்பார்கள்; உனக்கும் அவமதிப்பு உண்டாகும். உலகத்தார் ஏற்படுத்தியகலியாணமென்கிறசட்டமொன்று மாத்திரமில்லாமல் நாம் இருவரும் தனியே சேர்ந்திருப்பதற்கோ யாதொரு தடையுமில்லை; அப்படிச் செய்வதனல் நம்முடைய நேசம் முதலியவற்றிற்கு ஏதாவது குறைவு உண்டாகுமென்று நினைக்கிருயோ? அப்படி ஒருபோதும் இராது என்றன்.

அதைக்கேட்டு அவள்மிகவும் விசனமடைந்தவளாய் என்னுடன் இத்தனைநாளாய்ப்பழகியும் உனக்குத்தெரிந்தது இதுதானு? ஒருவனுடைய நேசத்திற்காகப் பெண்களின் பெருமையை அநியாயமாய் அழிக்க எனக்குவிருப்பமில்லையென்பது உனக்குத்தெரி

யாதா? நீமகாபிரபுவானாலென்மட்டும். என்சுகவாழ்வுக்கு வேண்டியபொருள்என் வீட்டிலிருக்கிறது; இதுமுதல் நீவேறு நான்வேறுதானென்று சொல்லிச் சரேலென்று எழுந்துபோய்விட்டாள்.

அந்தப்பெண்ணின் தீர்மானத்தைக் கண்டுதாய்தந்தையர்களும் சந்தோஷித்தார்கள். அன்றுமுதல் அவர்கள் அந்தமந்திரிமகனைத்தங்கள் வீட்டுக்குள் வரவொட்டுகிறதில்லை; மறுபடியும் அங்கே வரவேண்டுமென்று அவன்பலவிதமாய் முயன்றான்; ஒன்றும் நிறைவேறவில்லை அவர்கள்மறக்கமறக்க. அவனுக்கு அந்தப்பெண்ணினிடத்தில் ஆசை அதிகரிக்கத்தலைப்பட்டது, அதனால் அவன் அவளைக்காணவழிதேடுவதே வேலையாயிருந்தான்.

அந்தமோகனமென்கிறபெண் தோழியொருத்தியோடு காலைமாலைகளில் அப்பட்டணத்து வெளியில் வினோதமாய் உலாவுவது வழக்கம். நடுவழியில் அவள் மந்திரிகுமாரனை எங்கேயாவது கண்டாலும் காணாததுபோலவே முகத்தைத் திருப்பிக்கொண்டுபோய் விடுவாள். இப்படியிருக்க ஒருநாள் வெளியே போனவள் வழக்கமாய் வருகிறவேளைக்கு வீட்டுக்குவரவில்லை. அதுகண்டுஅவளுடைய தாய்தந்தைகள் கொஞ்சம் அச்சங்கொண்டார்கள். அப்படியே இரண்டொருநாளாயிற்று. அவளும் வரவில்லை; அவளோடு கூடப்போனதோழியும் வரவில்லை. அதனால்அவர்களையாரோஒருவன் இழுத்துக்கொண்டே போய் விட்டானென்று தீர்மானித்தார்கள்.

இனிஅவர்கள் அந்தப்பெண்ணைக் கண்டுபிடிக்கிற வழியெப்படி? தங்கள் மகளைக்காணாமல் விசனப்படுகையில் பள்ளன்தன்பெண்சாதியைப்பார்த்து, நமது குழந்தையைக் கண்டுபிடிக்கத்தக்க உபாயமொன்று எனமனதில் தோன்றுகிறது; இந்தராஜாமிகவும்நியாயஸ்தரென்றெனக்குக்கேள்வி, நாமும் முன் இவர்க்குக் கொஞ்சம் உதவிசெய்திருக்கிறோமல்லவா? அதைப்பேசிபரிசாகக்கொண்டு, மறுதரம் அவர் கொலுமண்டபத்தில் சபைகூடியிருக்கும்போதுபோய், அவர்பாதங்களில் வீழ்ந்து நம்மகளைவரவழைத்துத் தரும்படி வேண்டுகிறேனென்று சொல்லி அந்தநாள்வருமளவும் காத்திருந்தான்.

அப்படியே மறுதரம் ராஜா மகாசபைகூடினபோது அந்தப்பள்ளன் அரசனுடைய கொலுமண்டபத்திற்குச் சென்றான். அம்மண்டபத்தின் அழகைக்கண்டபோது அவனுக்கு உண்டான திகைப்பைஎன்னென்றுசொல்லலாம்! அந்தச் சக்கரவர்த்திவீற்றிருந்த

மயிலாசனத்தைப்போல விசித்திரமானபொருள் உலகத்தில் வேறொன்றுமில்லை அம்மயில் சிறகுவிரித்து ஆடுகிற வண்ணமாய் வச்சிரம் வைடூரியம் முதலிய நவரத்தினங்களால் வெகு அற்புதமாகச் செய்யப்பட்டிருந்தது அதை ஏழுகோடி ரூபாய் விலைமதித்தார்கள். அந்தமண்டபம் முழுதும சிறந்த சலவைக் கற்களாற் செய்து வெகுநேர்த்தியான சித்திரவேலைகள் அமைக்கப்பெற்றிருந்தது.பலவாறுசொல்லியென்ன? பூலோகசுவர்க்கம் ஒன்றுஉண்டென்றால் அது இதுவேஎன்னும்படியாயிருந்தது. அந்த மயிலாசனத்துக்கருகே ஒரேபளிங்கினால் விசித்திரமான ஆசனமொன்று சாதாரணமாய் நாற்காலியளவு விசாலமாய் அமைக்கப்பட்டிருந்தது. தனியாய் மந்திரிகளோடுமட்டும் கூடுகிறகாலங்களில் சக்கரவர்த்தி அதிலே வீற்றிருப்பது வழக்கம். பொன் வேலைப்பாடுகள்செய்த பெரியகும்மட்டங்களில் அம்மண்டபம் நிரம்ப விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன.

இந்தப் பள்ளன் அவ்விடத்திற்குச் சென்றபோது அந்தமண்டபத்தில் யாவரும்வந்து நிறைந்திருந்தார்கள். இவன் உள்ளே நுழையப் பார்க்கையில் அங்கிருந்த காவற்காரன் ஒருவன் அவனைத் தடுக்க. அடியில்வருமாறு அவ்விருவர்க்கும்வாக்குவாதம்நடந்தது

சேவகன்: நீ இங்கேயாரைத் தேடிக் கொண்டுபோகிறாய்?

பள்ளன்; உங்களுடைய சக்கரவர்த்தியைத்தான்.

சேவ. அவர் சாதாரணமான மனிதர்களோடு பேசமாட்டார் மேலும் இப்படி மகா சபை சேர்ந்திருக்கையில் அவர் உன்னைக்கண்ணெடுத்துக் கூடப் பாராரே.

பள். இந்தச் சக்கரவர்த்தி நல்லவிவேகியென்றும்நியாயஸ்தரென்றும் எங்கும் பிரசித்தியாயிருக்கிறதே; நான் இப்போதுஒரு நியாயம் கேட்க வந்திருக்கிறேன். நீ இப்போது என்னைத்தடுத்து, நன்றாய் நியாயந் தீர்ப்பதனால் அரசர்க்குப் பெரும்புகழ் உண்டாவதையும்; எனக்குப்பெருத்த லாபம்கிடைப்பதையும் நீ மறுக்கப்பார்க்கிறாய்; இது உனக்கு நியாயமா?

சேவ. நீ பள்ளனல்லவா?

பள். ஆனாலென்ன? நியாயந்துக்குப்பள்ளனென்றும் பார்ப்பானென்றும் ஏதாவது பேதமுண்டோ? மகம்மதியர்கள்பள்ளரைத்தாழ்வாகநினைப்பதில்லை. அதிலும் இந்தச் சக்கரவர்த்தி ஒருவர்க்கும் அவமரியாதை செய்வதில்லையே.

சேவ. என்னவானாலும் நீ இப்போது இந்தச் சபைக்குப் போகக் கூடாது.

பள். ஏன் கூடாது?

சேவ, ராஜாங்கத்துக் காரியங்களைப்பற்றிப் பேசுவதற்காகவே இந்தச் சபை கூட்டப்பட்டது. வேண்டுமானால் நீ ஒரு விண்ணப்பம் எழுதிக்கொள்.

பள். அப்படிக்கூடாது, இப்போது ராஜாவை நானே நேராகப் போய்ப் பார்க்கவேண்டும்.

சேவ. நீ மாத்திரம் அடியெடுத்துவை, அப்படியே உன்னைத் தள்ளி மிதித்துப்போடுகிறேன் என்றான்.

அவன் அப்படிச்சொல்லுவதற்கு முன்னமே பள்ளன் சரேலென்றுநடந்தான். சேவகனும் பின்னேயே ஓடி அவனைப்பிடித்திழுக்க பள்ளன் ஓ மொகலாயசக்கரவர்த்தியே ஒரு நியாயக்கேட்கிறேன் மொகலாயசக்கரவர்த்தியே ஒரு நியாயமென்று உரத்துக் கூவினான்.

அந்தக் கூச்சலைக்கேட்டு ராஜா பொறுமையுடன், யாரங்கே நியாயங்கேட்கிறது? அவன் எதிரேவரட்டும்என்றுசொல்ல, பள்ளன்உடனேபோய் அவனெதிரில்கீழேவிழுந்தான். அவனைப்பார்த்துச் சக்கரவர்த்தி, யாரப்பாநீ ? எழுந்திருந்து உன் வியவகாரத்தைச் சொல்லென, அவனெழுந்தான்.

அவனுடைய முகத்தைப் பார்த்தவுடனேராஜாஅவனின்னானென்று தெரிந்துகொண்டு, ஓகோ தோழனே, நீயா ! உனக்கு நான்எவ்வளவோ கடன்பட்டிருக்கிறேனே; என்ராஜ்யம்எல்லாங்கொடுத்தாலும் அதற்குப் போதுமாவென்று சொல்லி அந்தச்சபையிலுள்ளோரனைவரும்பார்த்துப் பிரமித்துநிற்கத்தன் ஆசனத்தினின்றும் எழுந்துபோய் அவனைக்கட்டியணைத்துக்கொண்டான்.

பின்பு சக்கரவர்த்தி சபையாரைப்பார்த்து, ஓ பிரபுக்களே, இந்தமனிதனாலேதான் நான் இப்போது பிழைத்திருப்பது. பகைவனால்ராஜ்யத்தினின்றும் துரத்தப்பட்டபோது வழியில் ஒரு ஆற்றிலேவிழுந்து நான் தத்தளிக்கையில், அப்போதுதனக்கிருந்தபெருந்துன்பத்தையும் பாராமல் திடீரென்று தண்ணீரிலிறங்கிஎன்னைக் கைப்பிடித்துக் கரையிலிழுத்துப்போட்டு, பின்பு எனக்கு நினைவுதெரியாமல் குளிரும் காய்ச்சலும் பயங்கரமாய்வந்து வருத்தின

மறுநாள் ராஜா அந்தப்பள்ளனை அரண்மனைக்கு வரவழை
த்து, அப்பா தோழனே! உன் ராஜியாபாரத்தோடு இருக்க உன
க்கு விருப்பமில்லையென்று நன்றாய்த் தெரிகிறது. தொன்றுதொ
ட்டுவந்த மதக்கோட்பாட்டை விடக்கூடாதென்கிற நிர்ப்பந்த
மும் உங்களில் விசேஷமாய் இல்லையென்று தெரிகிறது. இப்
போது உன் அந்தஸ்தை உயர்த்தவேண்டுமென்பது என்கோரிக்
கை உனக்குச் சம்மதமானால் அப்படியே செய்கிறேனென, பள்
ளன் சற்று யோசித்துப் பின்பு அப்படியே அங்கீகரித்தான். மறு
நாள் மந்திரி குமாரனுடைய அந்தஸ்தும் அதற்கு வேண்டிய ஐஸ்
வரியமும் பள்ளனுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்களிப்படி மக
ம்மதியராக மாற்றப்படவே அப்பட்டணத்தார்க்கெல்லாம் மிக
வும் சந்தோஷமாயிற்று. மோகனனும் மிகப் பெருமையடைந்
தான். மந்திரிகுமாரனிடத்தில் அவனுக்கிருந்த கோபமும் கொஞ்
சம் கொஞ்சமாய்த் தணிய ஆரம்பித்தது. அவன் அவள் விஷ
யத்தில் துரோகித்தனமான காரியமொன்றும் செய்யவி
ல்லை. அவளைத் தனியாய் ஒருவீட்டுக்கு அழைத்துக்கொ
ண்டுபோய்த் தன்வசமாகும்படி வேண்டிக்கொண்டதே யொழிய
வேறில்லை. அப்படிப்பட்ட காலத்திலும் தன்னிடத்தில் அவன்
மிக்க கௌரவமும் பிரியமுமாயிருந்ததை நினைக்க நினைக்க அவனுக்கு
அவனிடத்திலிருந்த கோபந்தணிந்து, அவனைக்காவலிலிருந்து
விடுவிக்கும்படித் தந்தையை வேண்டிக்கொள்ளும்படியாயிற்று.

அதுகேட்டுப் பள்ளன், குழந்தாய், நீ சொல்வதை நான் ஒரு
போதும் தடுப்பதில்லை, ஆனால் இந்த விஷயத்தில் கொஞ்சம் ஆலோ
சிக்கவேண்டியிருக்கிறது; ஒருவரையும் கேளாமல் ஒரு பெண்ணைப்
பலவந்தமாய் இழுத்துக்கொண்டு போனவன் இன்னும் என்ன
பொல்லாங்கு செய்வானோவென்று பயமாயிருக்கிறது என்றுசொ
ல்ல, அவள் புன்னகையுடன் நீர் அப்படிச் சிந்திக்கவேண்டாம்;
நான் அவனுடைய வீட்டில் இருந்தபோதுகூட அவன் என்னைச் சிறி
தும் கொடுமையாக நடத்தினவனல்லன். அதனாலேயே நான்
அவனை இப்போது மன்னிக்கும்படிக் கேட்கிறது: அவனுக்கு என்
னிடத்தில் நேசமிருந்ததினாலே நான் பள்ளச்சியாயிருக்கையில் என்னை
வேறுவிதமாய் நடக்கப்பற்ற அவன் என்னைக்கொண்டிருந்தாலும்
அந்தஸ்து உயர்ந்திருக்கிற இப்போது என்னைக் கலியாணஞ்செய்
துகொள்ளச் சிறிதும் சங்கேதப்படமாட்டானென்று தோன்றுகி
ன்றது: நமக்காக ஒருவன் சிறைப்படுவது நியாயமன்று; அவனை
விடுவிக்கவேண்டுமென்றாள்.

இந்தவிஷயத்தை அரசனுக்குத் தெரிவிக்கிறேனென்றுசொல்லி அவன் மறுநாள் அரண்மனைக்குச் சென்றான். அரசன் அவனைப்பார்த்து, என்னவிசேஷமென்றுகேட்க, மந்திரிகுமாரனை விடுவிக்கும்படி என் மகள் அநேகமாய் வேண்டிக்கேட்டுக்கொண்டதனால், அதைத்தங்களிடத்தில் தெரிவிக்கவந்தேன் என்றான். அதைக்கேட்டு அரசன் சட்டத்தைமீறி இப்படிப்பட்ட பொல்லாங்குசெய்தவனை நாம் ஒருபோதும் விடக்கூடாது. இவனை விட்டுவிட்டால் மற்றக் குற்றவாளிகளைமட்டும் நாம் எப்படித்தண்டிக்கலாம்; அவன்செய்த காரியத்திற்குச் சிக்ஷையனுபவிக்கவேண்டுவதுதானென, பள்ளன், அப்படி இல்லை; அவன் என் மகளை வீட்டினின்று பலவந்தமா யிழுத்துக்கொண்டு போனதுதவிர மற்றெந்தக்கொடுமையும் செய்ததில்லையாம். அந்தப் பெண்ணே அவனை விட்டுவிடச்சொல்லி வேண்டுகிறாளென உபாயூன் எப்படியானாலும் அவன் செய்தது குற்றம்குற்றமே; அவனை விடுவிக்க வேண்டுமென்றால் ஒரு உடன்படிக்கையின் பேரிலேதான் விடவேண்டுமென்றுசொல்லி அந்தக் குற்றவாளியைக் கொண்டுவரக் கட்டளையிட்டான்.

மந்திரிமகன் எதிரேவந்து நிற்கக்கண்டு அவனைப்பார்த்து ராஜா அவன்செய்த தீச்செயலுக்காக அவனைச் சிறிது தூஷித்துப் பின்பு நீ அந்தப் பெண்விஷயத்தில் செய்த அபராதத்தைத் தீர்த்துக்கொள்ள உனக்கு இஷ்டந்தானாவென்று கேட்க, அவளை கலியாணஞ் செய்துகொள்வதே அதற்குத்தக்க பரிகாரமா யிருக்குமாயின் அப்படியே நடத்த நான் சித்தமாயிருக்கிறேன் என்றான்.

மோகனத்தை அவன் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்கிற உடன்படிக்கையின்மேல் அரசன் அவனை விட்டுவிட்டான். பின்பு பள்ளன் அந்த மந்திரிகுமாரனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய்த் தன் மகளண்டைநிறுத்த அவள் முதலில் அவனைக் கொஞ்சம் கோபித்தவள்போலப் பார்த்தாள். அதுகண்டு அவன் பலவிதமாய் நல்லவார்த்தைசொல்லி என் கண்ணே! நான் செய்தது குற்றமே இப்போது அந்தப்பழியைத் தீர்த்துக்கொள்வதற்காகவே வந்திருக்கிறேன். நீ முன் கேட்டபடியே நாம் இருவரும் ஒத்திருக்க உனக்குச் சம்மதந்தானோவென அவள் நான் உன் பேச்சை எப்படி நம்புகிறதென்றாள். அதற்கு அவன் என்பேச்சில் உனக்கு நம்பிக்கை யில்லையா? முன் நான் உன்னை வேண்டினதெல்லாம் உன்னிடத்தில் [illegible] விருப்பினாலோ? வெறுப்பினாலோ, என் உட்கருத்தை நன்றாய் அறிந்த



நீயே இப்படிப்பேசினால்? மற்றவர்கள் என்ன நினையார்கள்? உன்
மனதில் உருக்கமிருக்குமானால் நீஎன் பிழையைப் பொறுப்பாயெ
ன்பதற்குச் சந்தேகமில்லையென்றான்.

அதைக்கேட்டு அவள் கொஞ்சம் புன்னகைசெய்ய அவன்
உடனே அவளை மார்போடணைத்துக் கொண்டு இன்றுமுதல் நாம
இருவரும் இப்படியே ஆயுள்ளளவும் மனமொத்து வாழவேண்டு
மென்றான். அதற்கு அவளும் இணங்கிச் சந்தோஷமாயிருந்தாள்.
அன்றையதினமே அவ்விருவர்க்கும் விசேஷவைபவமாய்க் கலி
யாணமும் நடந்தேறிற்று. மொகலாயச் சக்கரவர்த்தியே நேராய்வந
்து அதை நடப்பித்து அவர்கள் எந்நாளும் ஒரு குறையுமின்றி மி
கப் பெருமையாக வாழும்படி வாழ்த்தினானென்றால் பின்பு அவர்
களுக்குக் குறையென்ன? இப்படியாகக் கடைசியில் அந்த ஜோசி
யக்காரிசொன்னது சரியாய்ப் பலித்தது. இந்த மந்திரிகுமாரனும்
மன்னச்சியும் உள்ளூற ஆசைகொண்டு நெடுநாளாய்வேண்டுமென
்று விரும்பிச் செய்துகொண்ட கலியாணம்போலக்கலியாணஞ்செய்
து கொள்ளுகிறவர்களுடைய பாக்கியமல்லவோ பாக்கியம்! இப்ப
டி ஒருவர்க்கு நேருமானால் இவ்வுலகவாழ்க்கையில் அவர் பெறும்
பேறு அதைவிட வேறென்ன?

---

## ஜகஜ்ஜோதி அல்லது நூர்ஜிஹான்.

---

ஏறக்குறைய முந்நூறு வருஷங்களுக்குமுன் வட இந்துஸ்
தானத்தில் ஒருபெருங்காட்டில் இரண்டுபேர் அல்லாடித் திரிந்து
கொண்டிருந்தார்கள். அந்தக் காடு முழுதும் வெட்டவெளியாயவ
வ்வளவுதூரஞ்சென்றாலும் ஒருபசும்புல்கூடக் காணகிடையாமல்
எங்கும் பாழாய்வழிதப்பி யாராவது அங்கே அகப்பட்டுக்கொண
்டால் அப்படிப்பட்டவர்கள் மறுபடி பிழைக்கிற ஆசையேயில்லா
மல் அப்படியேமாண்டு போம்படி அவ்வளவு கொடியதாயிருந்தது
அந்தப் பெரிய மணல்வெளியிலே நடுப்பகலில் தெரியாமல் அகப்ப
ட்டுக் கொண்டு மேலேமுகத்தைச் சூரியன் எரிக்கவும், கீழேகாலை
நன்றாய்ச் சிவக்க வறுத்த அரிப்பொரிகள் போன்ற சிறுமணல்கள்
கொளுத்தவும், உயிரை விடமாட்டாமல் குற்றுயிராய்க்குகித்துத
தத்தளிக்கின்ற வழிப்போக்கர்கள் சற்றே சுகமாய் உட்காரும்படிஎ
வ்வளவு தூரஞ்சென்றாலும் நிழல் பரந்தான் ஒன்றுகூடக் கிடை
க்காதென்றாலும் மேலுதடும் கீழுதடும் ஒன்றாய் ஒட்டிக்கொண்டுபி

ரிக்கப்போகாமல் நாவறண்டு தாகத்தால் தவிக்கின்ற வாயைக்கழு வ வாவது கையளவு தண்ணீர்எங்கேயாவது கிடைக்குமோ? கிடையாது ! இவ்விதமான பெரும் பாலைநிலத்திலே அந்தப்பிரயாணிகள் இருவரும் ஒருநாள் எங்கேயோ திரிந்து தள்ளாடிப்பொழுது போனதும் ஓரிடத்தில் முடங்கினார்கள். இராப்பொழுது சென்று காலையில் சிறிதளவும் மாசு மறுவில்லாமல் சூரியன் உதயமாகி வெளி முழுதும் தட்டுத்தடையில்லாமல் ஒரேயளவாய்த் தன் கிரணங்களைச்சொரிந்தான். அக்காட்டுக்கு ஆகாயந்தவிர வேறொரு முடிவுங்காணப்படவில்லை ஒவ்வோரிடத்தில் அருமையாய் ஒவ்வொரு உலர்ந்து செத்துப் போனகட்டை மரந்தவிரமற்றொன்றுந் தென்படாமல் எந்தத்திசையிலும் வழி துறையொன்று மில்லாத அந்தப்பெருப்பாலை நிலத்திலே அவர்கள் மறுபடியும் எழுந்துதிரிய ஆரம்பித்தார்கள்.

அந்தப்பிரயாணிகள் இருவரும் யாரெனில், ஒருதார்த்தாரி தேசத்தானும் அவனுடையமனையாட்டியும். அவ்விருவரும் தாமே வேண்டுமென்று விரும்பிச்செய்து கொண்ட கலியாணம் அவர்களுடைய சுற்றத்தாரொருவர்க்கும் சம்மதமில்லாமலிருப்பதைக் கண்டு, வேறெந்ததேசத்திற்காவதுபோய் நம் இஷ்டப்படிவாழலாமென்றுஆலோசித்துச்சுதேசத்தைவிட்டோடிப்போனார்கள் அம்மனிதன் நல்லசுந்தரமானவடிவமும் கம்பீரமானதன்மையு மன்னுயிர்க்குரியதைரியம்சுறுசுறுப்பு விடாமுயற்சி சாந்தப்பொறுமைமுதலிய பலவித சாதாரண நற்குணங்களும் நற்செய்கைகளு முடையவன். அவன் மனைவியோ இளமை மென்மை முதலிய வடிவழகுடையவளாய்ப்பார்ப்போர் அனைவரும் பிரமிக்கும்படி இருந்ததுமன்றி, தன்கணவனுடைய துக்கத்தையும் தன்னுடைய வருத்தத்தையும் இன்னும் மலையளவாய்ப்பெருக்க கர்ப்பத்திலே கருவொன்றையுந் தரித்திருந்தான், அவர்கள் கைபோடு கொண்டுவந்த சோற்றின்மீகுதிஅன்றைக்குத்தான் போதும்போதாமலிருந்தது. ஒருதோற்குடுவையில் கொண்டுவந்த தண்ணீரோ, அன்று காலையில்அவர்களுக்குக்கைகழுவக் கூடப்போதாதுதான். அந்தச்சோற்றையுந் தண்ணீரையும் அவன் மூர்ச்சையடைந்தவள்போல விழுந்து கிடந்த தன் மனையாளுக்குக்கொடுத்து அவளுக்குக் கொஞ்சம் உயிர்ப்பு உண்டாகி அப்புறம் போகப்புறப்பட்டான். ஐயோ ! அவர்களுக்கு என்ன கஷ்டகாலம்வந்து விட்டது ! அவ்விடத்திலே சற்றுத்தாமதித்து நிற்பார்களானால் அவர்களுக்குச் சீக்கிரத்திலேயோ மரணமுண்டாவது நிச்சயம். இல்லாமல் எழுந்து எங்கேயாவது போனால்

அப்போது எவ்விதமாகுமோ நிச்சயமில்லை. அவர்கள் மீள்வதற்கு
வழியுண்டாவதாய்த் தோன்றவில்லை. சோறுதண்ணீர் ஒன்றுமில்
லாமலும் எவ்விதத்திலே அவர்கள் வெகுநாள் யாத்திரை செய்ய
வேண்டியதாயிருந்தது. வழிதுறை கேட்பதற்காவது யாராகிலும்
அவ்வழி வருவார்களோ? கிடையாது.

அந்தப்பெண் வற்றி உலர்ந்து உடலொடுங்கிக்கிடந்த ஒருசிறு
குதிரையின்மேல் ஏறிக்கொண்டாள். அந்தக்குதிரை வெகுநாளா
ய்க் கால்வயிற்றுக்குக் கூடத்தீனியில்லாமையால் மிகவும் பலயீன
ப்பட்டு அங்கேயே விழுந்து செத்துப்போவது போலிருந்தது.
ஒரு அடிகூட எடுத்துவைக்க மாட்டவில்லை. இப்படியெல்லாமிரு
ந்தும் தனக்கு நேர்ந்திருக்கும் ஆபத்து இப்படிப் பட்டதென்று
அந்தப்பெண்ணுக்குத் தெரியாது. ஓரே செலவழிந்து போயிற்றெ
ன்பதும் அவளுக்குத் தெரியாது. அதுவும் அவன் தன் அருமைப
பெண்டாட்டி ஒன்றுமில்லாமல் தவிக்கப்போகிறாளே என்று அவ
ளுக்காகத் தன் வயிற்றுக்குத்தின்னாமல் காப்பாற்றி வைத்தது. பூர்
ணகர்ப்பிணியாய்ச் சுபாவத்திலேயே மிக்கவருத்தப்பட்டுக்கொ
ண்டிருக்கிற இந்தப்பேதைப்பெண், தமது கையில் ஒருபொருளுமி
ல்லாமல் தமக்கு நேர்ந்திருக்கும் ஆபத்தையுங் கேட்டால், ஒருவே
ளை திடீரென்று மனங்குழம்பிவிழுந்து மூர்ச்சைப்போவாளோவெ
ன்று திகிற்பட்டு அவன் அந்தச்சங்கடம் ஒன்றையும் அவளுக்குத்
தெரிவிக்கவில்லை. இவ்வளவு ஆபத்தான நிலையிலிருக்கையிலும்,
இன்னும் ஒருவேளை மீட்சியுண்டானாலும் உண்டாகலா மென்றும்
அணுவளவு ஆசைகொண்டு, செழிப்பான ஒருநாட்டில் நடத்துவ
துபோலவே இந்தக்கொடும்பாலை நிலத்திலும் நடத்திக்கொண்டு
போகிற கடவுள் நம்மை நடுக்காட்டிலே கைவிடுவாராவென்று கட
வுளுடைய கிருபையையே முக்கியமாக நம்பிக் குதிரையை நடத்
திக்கொண்டு போனான். வெயில் ஏற ஏற அதின்கொடுமையுமவ்
வதிகமாகி கொளுத்தத் தலைப்பட்டது. எப்பொழுதேனும் தங்
குவதற்குத்தான் நிழலென்கிற பெயரே கிடையாதே. அப்போது
அந்தமனிதன், வெயில்பொறுக்கமாட்டாமல் தன்பெண்சாதி படுகி
ற வருத்தத்தைப்பார்த்து மனமுருகி, தன்கையிலிருந்த குடை
யொன்றை மலர்த்தி அவள் முகத்திற்கு நேராய் மறைத்துக்கொ
ண்டு அந்தப்பேதைக் குதிரையின் பக்கத்திலேயே நடந்துபோ
னான். சிறிது நேரத்தில் அந்தக்குடையைக்கூட தாங்கமாட்டாமல்
அவன்கை அதிகமாய் வலித்தது. சாதாரணமான மனிதர்களுக்கே
ஒருபொருளை உயரத் தூக்கிப்பிடிப்ப தென்றால் வருத்தமுண்டா

குமோ? இப்படிப்பட்ட கஷ்டதசையிலிருப்பவனுக்குக் கேட்கவே
ண்டுமென்ன? ஆயினும் தன் உயிரினும் அருமையாய்ப் பக்கத்
திலிருக்கின்ற பொருளினிடத்தில் ஆசைப்பெருக்கு அளவு கடந்
திருக்கவே, அவன் தன் வருத்தமொன்றையும் பாராமல் கொடை
பிடித்து அவளுக்கு நிழல் காத்துக்கொண்டேபோனான். போகப்
போக அவர்களுக்கு வழியும் மாளவில்லை. பொழுதும்போகவில்லை.
அவன் கையில் அருமையாய் மிகுத்தி வைத்துக்கொண்டிருந்த சிறு
அப்பமும் பொழுதுபோக வெகுநாழிகைக்கு முன்னமே புசித்
தாய்விட்டது.

இப்படி இருக்க, சிறிது நேரத்தில் சூரியனும் மறைந்துபோ
னான். இராவில் தங்க யாதொரு மறைவிடமும் காணப் படவில்லை
அதனால் அம்மானிதன் வேறுவிதியில்லாமல், கையில் இருந்த
குடைக்காம்பைக் கீழே நட்டு அதன்மேல் ஒருமெல்லிய துணியை
ப்போர்த்து ஒருசிறு கூடாரம்போல் ஏற்படுத்தி, வெட்ட வெளி
யிலே நன்றாய்த் திறந்தபடி அவ்விடத்துக் கொடியவிஷக்காற்றில்
விழுந்து கிடப்பதைவிட இது கொஞ்சம் ஆதரவாயிராதாவென்று
அதிலே தன் பெண்சாதியைப் படுக்கச்செய்தான். அந்தப் பெண்
மெய்வருத்தத்தாலும் மனவருத்தத்தாலும் மிகவும் வேர்த்துக்கொ
ண்டு அவளுக்குச் சீக்கிரத்திலே பெருங்காய்ச்சல் உண்டாவது
போல் இருந்தது. அப்போது அவள் கணவனுக்கு உண்டான மன
வருத்தத்தை என்னென்று சொல்லலாம்! இதுவாசத்திற்கு ஏற்ற
இடமல்லவென்று காட்டு மிருகங்கள் கூட விட்டோடிப்போன
அந்தப் பெரும்பாலை நிலத்திலே வயிறும் பிள்ளையுமாய்ச் சோறு
தண்ணீர் ஒன்றுமில்லாமல் எழுந்திருக்கமாட்டாது, தன் பெண்
சாதிபோரண்டை தத்தளித்துநிற்க, அத்துடன் தான் வழிநடந்து
வந்த வருத்தமும், இரண்டொருநாளாய்ச் சிறிதளவும் தண்ணீர்
குடியாமலிருந்த இளைப்பும் ஒன்றுசேர, அவன் மனம் எவ்வாறு த
வித்ததோ அந்தக் கஷ்டம் எவ்விதத்திலாவது நீங்குமோவென்று
சிந்திக்கக்கூட அந்தக் காட்டில் யாதொருவழியுமில்லை. அதுகண்டு
அவன் இனி நாம் இப்படியே விழுந்து இறந்துபோகவேண்டியது
தான் கதி என்று நினைந்தான். ஐயோ! அந்தப் பேதைப் பெண்ணி
னுடையநோய் மென்மேலும் அதிகரித்துக்கொண்டே வந்தது. ஆ
யினும் அவள் ஒன்றும் பேசாமல் மிகப் பொறுமையாய் அதைச் ச
கித்துக் கொண்டிருந்தாள். பிரசவவேதனை அவளுக்கு அதிகமாக
ஆக, வெகு நாழிகையாய்த் தண்ணீருக்க நாவறட்சியும் அதனுடன்
மிகவும் அதிகமாகத்தலைப்பட்டது. அவள் தாகத்தோடுதவிக்கிறதவி

பொறுக்கமாட்டாமல் எது எப்படிப்போனாலும்போகட்டுமென்று மித்துணிவுகொண்டு அம்மனிதன் தன்னிடத்திலிருந்த குத்துவாளைக் கையிலெடுத்துக்கொண்டு தன் குதிரையண்டை போய், எவ்விதத்திலாவது தன் அருமைப்பெண்சாதிபிழைக்கத்தோது (?) மென்கிறபேராவலால் உடம்புதெரியாமல் அந்தக் குத்துவாளைக் குதிரையின்தொண்டையில் குத்தி அங்கிருந்து வழிந்து பெருகின ரத்தத்தை ஒருகுடுவையில் ஏந்திக்கொண்டு தன் கூடாரத்திற்குச் சென்றான்.

இப்படி அவன் சிறிது நேரம் வெளியே போயிருந்த தருணத்தில் அவன் மனையாள் பிள்ளைபெற்றாள் குதிரை ரத்தத்தை பிடித்துக்கொண்டு திரும்பி வருகையில் குழந்தையின் அழுகைக்குரல் கேட்டு தனக்குப் பிள்ளை பிறந்ததென்கிற சந்தோஷமும் சிறிதளவேனும் ஆதரவில்லாத இந்தப் பெரும்பாலை நிலத்திலே பிறந்ததே! சோறுதண்ணீரில்லாமல் தவிக்கிற தாயையும் குழந்தையையும் எப்படிக்காப்பாற்றுகிறதென்கிற பெருந் திகிலுமடைந்து மனந்தத்தளித்துக் கொண்டே பிள்ளை பெற்ற வருத்தத்தால் இட்ட சால ஒட்ட (?) கைகளாய் விழுந்துகிடக்கும் மனையாட்டி யண்டை போய்த் தன் கையிலிருந்த ரத்தக்குடுவையை அவள் வாயில் கொடுக்க அவள் அதில் கொஞ்சம் குடித்துச் சிறிதளவு மூர்ச்சை தெளிந்தாள் உடனே அவன் செத்து விழுந்து கிடந்த தன் குதிரையின் இறைச்சியை எடுத்து ஒருவாறு சமைத்துத் தன் பெண்சாதிக்குங் கொஞ்சம் கொடுத்துத் தானும் தின்றான் அதனால் அப்போதிருந்த அவர்களுடைய பெரும் பசியும் தாகமும் ஒருவாறு தணிந்தன.

மறுநாள் பொழுது விடிந்ததும் அவர்கள் அப்புறம்போக அவ்விடம்விட்டெழுந்தார்கள் அப்போது தன் மனையாளுடைய சரீரஸ்திதியைக்கண்டு அம்மனிதன் மனங்கலங்கி நின்றான் தரையில் செம்மையாய்க் கால் பரவி நிற்கக்கூட அவளுக்குச் சக்தியில்லை அப்படியிருக்க அவள் அந்தக்குழந்தையையும் கையிலெடுத்துக்கொண்டு எப்படிநடந்து போவாள்? இத்தனை நாளாய் அவர்களுடைய மூட்டைகளையெல்லாம் சுமந்துகொண்டு வந்தகுதிரை கொல்லப் பட்டுப் போனபடியால், அந்தமூட்டைகளையெல்லாம் அவனே சுமந்து கொண்டு போம்படியாயிற்று. இப்படிப் பலவிதசங்கடங்களோடு அவர்கள் அவ்விடத்தை விட்டுப் புறப்பட எழுந்திருக்கையில் இரண்டு மைலில் தூரத்திற்குள் நிரம்ப நீருள்ள ஒரு தடாகமும் அதைச்சுற்றி எப்படிப்பட்ட தாபத்தையும் கொடிப்பொ

முதிலே நீக்கவல்ல பலவகை நிழல் மரங்களும் பூந்தோட்டங்களு
மாய் அழகியதோப்பொன்று காணப்பட்டது. அந்தத் தோப்பைச்
சுற்றி அநேகம் ஆடுமாடுகள் உல்லாசமாய் ஓடித்திரிந்து மேய்ந்து
கொண்டிருக்கக் காணப்பட்டன. அதற்குச்சமீபத்திலே மிகப்பெ
ரிதாய்ப் பட்டணமொன்றும் காணப்பட்டது அப்பட்டணத்துப்
பிரஜைகள் அநேகர் வெளிப்புலங்களுக்கு வந்து வேலைசெய்வதும்
அநேகர் புலங்களிலிருந்து பட்டணத்திற்குப் போவதுமாயிருக்
கக் காணப்பட்டார்கள்; அவ்விட மெங்கும் வெய்யலின்கொடுமை
சிறிதும் தெரியாமல் மிகக்குளிர்ச்சி பொருந்தி நெடுந்தூரம் வழி
நடந்து பெருங்கானலில் அடிபட்டு மிகவும்வேர்த்து விடாய்த்துவ
ந்து விழும்வழிப்போக்கர்களுடைய ஆயாசத்தையெல்லாம் உட
னே ஆற்றுவிப்பவை போலத்தோன்றின.

அது ஒரு பொய்க்காட்சியானாலும் அதைக் காணும்போதே
அவர்கள் தங்கள் நோவெல்லாம் அந்தக்ஷணமே நீங்கிப்போனதா
க நினைத்துப் பேரானந்தமடைந்தார்கள். தங்க நிழலும் தாகத்திற்
குத் தண்ணீரும் கிடைக்கப்போகிறதென்கிற சந்தோஷத்தால்,
மெய்வருத்தங்கூடத் தோன்றாமல், அப்போது தான் பிள்ளைபெ
ற்று உடம்பு நொந்துகிடந்த பேதைப்பெண்கூடத் தன் கணவன்
கையைப் பிடித்துக்கொண்டு தைரியமாய் எழுந்து அதை நோக்கிச்
சென்றாள்.

அவ்விடம்விட்டுப் புறப்பட்டுக் கொஞ்சநடந்துபார்க்
கையில், அப்போதும் அந்தத் தடாகமும் பட்டணமும் அப்படியே
தென்பட்டுக்கொண்டிருந்தது. ஆனால் சிறிதும் சமீபத்தில்வராமல்
முதல் முதல பார்த்தபோது எவ்வளவுதூரம் இருந்ததோ அவ்வ
ளவுதூரத்திலேயே தெரிந்து கொண்டிருந்தன. அவர்கள் தங்கள்
கைகால்களைமட்டும் அசைப்பதாய்த் தோன்றிற்றேயொழிய ஒரு
அடியாவது எடுத்துவைத்து நடந்துபோவதாய்த் தோன்றவில்லை:
அப்படியிருந்தும்? அந்தத் தடாகத்தண்டை போய்ச் சேருவோ
மென்கிற ஆசைமட்டும் அடங்காமல் வருந்தி அப்புறமும்சென்றா
ர்கள். அப்படிப்போகப்போக அந்தத் தடாகமும் தோப்பும் நிம
ரென்றுமறைந்துபோயிற்று பட்டணமும்வெகுதூரத்தில்பனியா
ல் மூடப்பட்டிருப்பது போலக் காணப்பட்டுக்கொஞ்சங் கொஞ்ச
மாய்க் கண்ணுக்குத்தெரியாமற் போய்விட்டது.

பின்பு அந்தப் பெருங்காடு முழுதும் எப்போதும்போலவெறுவெ
ளியாய்க்காணப்பட்டதேயொழிய வேறொன்றுமில்லை. இதுவரையிற்
தோன்றித் தன்மனதைத்தேற்றிக்கொண்டிருந்தமாயக்காட்சியி

றென்று மறைந்துபோகவே,மெய்வருத்தமும் மனவருத்தமும் முன்னிலும் பதின்மடங்கு அதிகமாகி உடனே அந்தப்பெண்சோர்ந்து தரையில்விழுந்தாள். அதுகண்டு அந்தத் துர்ப்பாக்கியமணிதன் இனி இவர்களைக் காப்பாற்ற யாதொரு வழியுமில்லையென்று நிராசைகொண்டு, தன் அருமைமனையாட்டி மாண்டுபோகப்போகிறாளேயென்று திகிலடைந்தான். தன் குழந்தையைக் கையிலெடுக்கக்கூட அவனுக்குத்திராணியில்லை. இப்படி இருக்க அதை எடுத்துக்கொண்டு அவள் எப்படி வழிநடந்துபோவாள்! அங்கேயே நின்றால் இரண்டொருநிமிஷத்தில் அனைவருக்கும் மரணம் நிச்சயமே. அதனால் அந்தக்குழந்தைபோனாலும்போகிறது? எப்படியாவது பெண்சாதிபிழைத்தாற்போது மென்று ஒரு யெண்ணமுடையவனாய் அம்மனிதன், அந்தப் பச்சைப் பாலகனை அங்கேயேபோட்டுவிட்டு அவளைமட்டும் மெல்ல வழிநடத்தி அழைத்துக்கொண்டுபோகிறதென்று தீர்மானித்து அந்தக்கருத்தை மனையாட்டியுடன்சொல்ல, அவளும் வேறுவிதியில்லாமல்அவனுடைய ஆலோசனைக்கு யிசைந்தாள். அவர்கள் அந்தக் கொடுஞ்செயல் செய்யத் துணிந்தது அநியாயமென்பதற்கு அறிகுறியாய் அவர்களுடைய மனம் சிறிதுநேரம் திட்டுத்திட்டென்று அதிகவேகமாய் அடித்து அதுவும் அடங்கிப்போயிற்று.

அருமையாய்ப்பிறந்த அந்தக்குழந்தையை அக்காட்டிலேயேபோட்டுவிட்டுப்போகிறதென்று தாய்கூடத்துணிந்து அதைக் கடைசியில் ஒருமுத்தமிட்டுக் கண்ணுங்கண்ணீருமாய்க் கணவன் கையில் கொடுத்துவிட்டாள். அவன் அதைவாங்கி அருகாமையிலிருந்த ஒருகட்டைமரத்தின் சிறு நிழலின்கீழே மணல் சுடாமலும் மேலே வெயிலெரிக்காமலும்? கொஞ்சம் காட்டுத்தழையை வுருவிப்போட்டு அதன்மேல் அக்குழந்தையைவிட்டு மேலே இரண்டு தழையால் மூடி? நடுக்காட்டிலே திக்கற்றுப்பிறக்கும்பேதைகளையும் அகண்ட பூமண்டலாதிபதியான மகாராஜாவையும் ஓரளவாய்க்காக்கின்ற கடவுளே கருணைகூர்ந்து இக்குழந்தையைக் காத்துக்கொள்ள வேண்டுமென்று விட்டுத்தன்மனையாளண்டைபோய்ச் சேர்ந்தான். எழுந்து ஓடிவைக்க அவளுக்குச் சக்தியில்லை? அவளுக்குச் சுமையென்றெண்ணிக் குழந்தையைப்போட்டுவிட்டதொன்று மாத்திரம் மிகுந்ததேயொழிய மற்றொரு பயனுமில்லை. இயற்கையாய்ச் சரீரத்தில் வலிமையிருந்தாலல்லவோ அவள் எழுந்து நடக்கப்போகிறாள்! நாவறட்சியோ இன்னும் அப்படியேயென்மேலும் வருத்திக்கொண்டிருக்கின்றது. இப்படியெல்லாமிரு

ந்தும் இன்னும் சிறிது தூரம்போனால் ஏதாவது கொஞ்சம் தேறு
தல்கிடைக்குமோவென்கிற வீணாசைமட்டும் அடங்கவில்லை, அத
னால் அவள் கணவன் தோளை ஊன்றுகோலாகக்கொண்டு வெகு
வருத்தத்துடன் எழுந்து சிறிதுதூரம் நடந்துபோனாள்.

பத்து மாதகாலம் வருந்திச் சுமந்து பெற்றபாலகனை உயி
ரோடு எறிந்து விடுவதென்றால் பெற்றவளுடைய மனந்தாளுமா!
அவ்விளங்குழந்தையை எறிந்துவிட்டவுடனே அந்தப்பெண், ஓ
ரடி எடுத்துவைக்கக்கூடாமல் உடம்பில் ஆயாசம் ஓண்டையிலி
ருக்க, புத்திரசோகத்தால் மனம் மிகவும் வெதும்பிச் சித்தப்பிர
மை பிடித்தவள்போலக் கண்ணுந் தெரியாமல் காதுங்கேளாமல்
கோவென்று கதறலானாள். தாம்பெற்ற குழந்தையைத் தாமே
கொல்லத் துணிந்ததை நினைக்க நினைக்க அவள் துக்கம் சிறிதும்
தணியவே யில்லை. மூர்ச்சைபோய்க் கிழே விழுந்தாள் அப்போது
சரியாய் நடுப்பகல்; கீழும் மேலும் வெந்துபோகின்றது. அப்படி
ப்பட்ட விடத்திலேஅவள் புத்திரசோகத்தால் விழுந்து அழுவது
கண்டு அந்த வருத்தத்தைப் பார்க்க மாட்டாமல், திரும்பிப்போய்
அந்தக்குழந்தையை எடுத்துக்கொண்டு வந்து அவள் கையிற்
கொடுத்து விடுகிறதென்று நிச்சயித்து அவளுடைய கணவன்,
முன்போலவே தன்குடையைக் கிழே நட்டு அதன்மேல் ஒருதுணி
யைப்போட்டு அவள் மேல் வெயில்படாமல் ஒருவாறு நிழலுண்
டாக்கி விட்டுத் தன்குழந்தையை எறிந்த விடத்திற்கு ஓடினான்,
அங்கே போய்ச் சிறிது தூரத்திலிருந்தே அக்குழந்தையின்நிலை
யைக்கண்டு மனநடுங்கி அப்படியே மரம்போல நின்றான். அவன்
அக்குழந்தையின் மேலே மூடிவைத்த தழைகள் விலகிப் பெரிய
கருநாகமொன்று அதைச்சூழ்ந்துகொண்டு தன்படத்தால் அதற்
கு நிழல் காத்துக்கொண்டிருந்தது. அம்மனிதன் ஓடிவந்த சத்தங்
கேட்கவே அந்தப்பாம்பு மெல்ல அவ்விடம் விட்டு நழுவி அண்
டையிலிருந்த கட்டைமரத்தின் பொந்திலே புகுந்துகொண்டது
அப்பாம்பு அந்தக் குழந்தையை நெடுநேரம் சூழ்ந்துகொண்டிரு
ந்ததென்றாலும் அதற்குச் சிறிதும்கொடுமைமட்டும் செய்யவில்
லை. அந்தக்குழந்தை உயிரோடு நன்றாய் அழுதுகொண்டிருந்த
சந்தோஷத்துடன் அவன் அதை எடுத்துக்கொண்டு தன் மனையா
ட்டி கையிற் கொண்டுவந்து கொடுக்க, தேகஸ்மரணை யில்லாமல்
உயிர்க்குமன்றாடிக்கொண்டிருந்த அப்பெண், குழந்தையென்கிற
சத்தம் கேட்கவே வருத்தத்தோடு வருத்தமாய்க் கொஞ்சம் கண்
திறந்து பார்த்துக் குழந்தையைக்கையில் வாங்கிக்கொண்டு முத்த

மிடப்போனாள்; அதற்குகூட அவளுக்குச்சக்தியில்லை. மறுபடியு ம் உடனே மயக்கம் வந்து விட்டது சிறிது நேரத்தில் மறுபடியும் அம்மயக்கந்தெளிந்ததென்றாலும் அது போக்குத் தெளிவேயொ ழிய வேறன்று.

அவள் படுகிறவேதனையை யெல்லாம் அவன் கண்ணுங்கண் ணீருமாய்ப் பார்த்துக் கொண்டே நின்றான். அப்போது அவள் அவனைப் பார்த்து என் அருமைக் கணவனே! காக்கை கழுகுமுத லியவை வந்து பிடுங்கும்படி என் உடலை இப்படியே எறிந்து விட் டுப் போகாதே; ஒரு குழிவெட்டிப் புதைத்து விடு; நம்முடைய நேசம்இன்றோடு போய்விடவில்லை. நாம் இருவரும் மறுபடியும் கூடுமிடம் வேறொன்று உண்டு இன்னும் சில காலத்தில் அங்கே ஒன்றாய்க்கூடி நாம் சுகமே வாழ்வோமென்று நா தழுதழுத்துச் சொன்னாள்.

அவன், அதற்கு ஒன்றும் பதில் உரைக்க நாவெழாமல் கண் ணீர் மாலை மாலையாய்ப் பெருக அவள் மார்மேல் விழுந்து புலம் பினான். அவளுக்குப் பேச்சு அடங்கிப் போயிற்று. புறட்டலும் அடங்கிற்று. அவன் கடைசியாய் முத்தமிட அவள் முகத்தைத் தூக்கினான். முகத்தின் ஒளியும் மழுங்கிப் போயிற்று. கண்களும் இருண்டுபோயின. உதடு ஆடுவதும் நின்றது. மூச்சுமசுருங்கிற்று ஐயோ! அந்தக்ஷணமே அவள் இறந்து போனாள்.

முதனாள் தான் பிறந்தபாலகனையும் தன்னையும் நடுக்காட்டிலே அல்லாடவிட்டுத் தன் மனையாள் இறந்துபோனதைக்கண்டு அவன் ஒன்றுந்தோன்றாமல் திகில்பிடித்து ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து, தனக்கு அப்படிப்பட்ட விதிப்பயனை விளைவித்த கடவு ளைப் பலவாறு வெறுத்துக்கொண்டு, தன் மனையாள் மரணகாலத் தில் தன்னை வேண்டிக்கொண்டதை நினைத்து, அண்டையில் கல்லு றையொன்று ஏற்படுத்தி அதில் அந்தப் பிணத்தையெடுத்து விட் டான். தன்னை ஆயுளளவும் அருமையாய் வளர்த்தெடுக்கத்தக்க தாயைப் பறிகொடுத்தது தெரியாமல் அவள் குழந்தை அண்டை யில் விழுந்துகிடந்தது. ஐயோ! தாயிறந்தது தெரியாவிடினும் இப்பூமியிற் பிறக்கும்போது உடனே உண்டான பசி தெரியாமற் போகாதே! பசி பொறுக்கமாட்டாமல் அக்குழந்தைவீறிட்டது: அவன் எதைக்கொடுத்து அதன்பசியைத்தணிப்பான்? அவன் கையில் ஒன்றுமில்லையே! கடைசியாய் அவன் அக்குழந்தையின்



அழுகையைக்கேட்டு மனந்தாளமாட்டாமல், தன் தேசத்தின் வேர்வையால் முற்றும் நனைந்துகிடந்த ஒருகம்பளத்தை யெடுத்து அதன் வாயில்வைத்தான். அந்த வேர்வைநீரை உறிஞ்சிக்கொண்டு அது கொஞ்சநேரம் கூவாமலிருந்தது. அந்த மனிதனோ, பசியின் கொடுமையாலும், நெடுநேரம் புலம்பின இளைப்பினாலும், வெயிலின் வெப்பத்தாலும், மெய்சோர்ந்து நாவறண்டு உதடு உலர்ந்துவாயைக்கூடத் திறக்கப்போகாமல் தவித்தான்.

இப்படியிருக்கப் பகற்பொழுதும் கழியலாயிற்று. அந்தக் கொடியராத்திரியை அவன் அந்தப் பயங்கரமான காட்டிலே எப்படிக்கழிக்க மாட்டுவான்? அந்த ஓரிரவுமட்டும் அவனுக்குஒருயுகமாயிருந்தது சிறிதுநேரம் பும்புவதும், சிறிதுநேரம் பிரஞ்ஞையற்றுப் பிணத்தோடு பிணமாய்க்கிடப்பதும், சிறிதுநேரம் புலம்புவதும், சிறிதுநேரம் தன் விதியை வெறுப்பதும், இப்படியாக அந்த இராப்பொழுதைக் கழித்தான். பொழுதுவிடிகிறதருணத்தில் அவனுக்குச் சிறிதும் தேகஸ்மரணையேயில்லை. மூர்ச்சைபோய்ப் பிணத்தோடு பிணமாய்க்கிடந்தான். அத்தருணத்தில் ஏதோ ஒரு அதிர்ச்சியுண்டாகித் திடீரென்று கண்ணை விழித்துப்பார்த்தான். பார்த்தபொழுது பற்றியெரிகிறகாட்டிற் பெருமழை பொழிந்தது போலாயிற்று. யாரோ சில வழிப்போக்கர்கள் வந்து தன்னைச்சூழ்ந்துக்கொண்டிருக்கக்கண்டான். அவர்கள் ஒருநாள்முன்னதாய்வந்திருப்பார்களானால் அந்தப் பெண்ணை இப்படி நடுக்காட்டிற் பறிகொடுக்கும்படி நேருமா? விதியை யார் வெல்லக்கூடும்? அவர்களெல்லோரும் லாகோர்பட்டணத்துக்குப் போகிறவர்கள். அவர்கள் அம்மனிதன்படுகிற பரிதாபத்தைப்பார்த்து மிகவும்மனம்நொந்து அவனுக்குக் கொஞ்சம் உணவுகொடுத்து குழந்தைக்கும் கொஞ்சம் ஆட்டுப்பால் புகட்டினார்கள். அவர்கள்கொடுத்த போஜனத்தைப் புசித்தபிறகு சரீரத்தில் சிறிது வலிமைவரவே, அவன் கண்களில் நீர் தளும்பத்தளும்பத் தன் அருமைமனையாட்டியை அவ்விடத்திலேயே புதைத்துவிட்டுக் குழந்தையைக் கையிலெடுத்துக் கொண்டு அவர்களோடுகூடச் சேர்ந்து மெல்லமெல்ல அவர்கள் போகிற விடத்திற்கேபோவதாய்ப் புறப்பட்டான்.

தார்த்தாரிதேசத்தானான அம்மனிதன் அந்தப் பிரயாணிகளோடு சிலநாளில் லாகோர்பட்டணம் போய்ச்சேர்ந்தான். அப்பட்டணத்தில் அவனுடைய புத்தியும் சாமர்த்தியமும் வெகுசீக்கிரத்திலநன்றாய் வெளிப்பட்டன: அவன் சாதாரணமான மனிதனன்று, மனி

தர்களுடைய தராதரங்களை எளிதில் அறிந்துகொள்ளும் நுட்பபுத்தியுள்ள ஆக்பர்சக்ரவர்த்தி கூடவேண்டி விரும்பத்தக்கதன்மையுடையவனாய், அவனால் மிகவும் நேசிக்கப் பட்டு அதுமுதல் மேன்மேலும் பெருமை பெற்றுவந்தான். அம்மனிதனுடைய யோக்கியத்தை இவ்வளவென்பதை ஆக்பர் நன்றாய்த்தெரிந்து கொண்டு அவனுடைய சாமர்த்தியமெல்லாம் தன் ராஜ்யத்தின் க்ஷேமத்தின் பொருட்டு உபயோகமாகும்படிச் செய்தான் அந்தமனிதனும் வெகுசீக்கிரத்திலே படிப்படியாய் உயர்ந்த பதவிக்குவந்து கடைசியில் அந்த ராஜாங்கத்தில் ஒருபெருத்த தனபாலகனானான். தேச சரித்திரங்களுள் மிகவும் பெருமையாய்ப் புகழப்பட்டிருக்கும் சக்ரவர்த்திகளுள் ஒருவனுக்கு ராஜகாரியங்களை நடத்த வலதுகை போலிருந்தவனென்று அவ்வளவு சிறப்புற்று அனைவராலும் மிகவும் கவுரவப்படுத்தப்பட்டவனாகவாழ்ந்தவனிவன் ஆக்பர் சக்ரவர்த்தியும் அவனிடத்தில் பரிபூரண நம்பிக்கைவைத்து ஆயுளளவும் அவனைப் பெருமையாகவே நடத்தினான்.

அவர்களுடைய மகளோ, பிறந்த நாள்முதல் கடவுளுடைய கருணையாலேயே காப்பாற்றப்பட்டு, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வெகு சீக்கிரத்திலேயே நல்ல பருவம் வந்து அனைவரும் பார்த்து மயங்கத்தக்க வடிவழகுள்ளவளாய் ஸ்திரீரத்தினமென்று பிரசித்திபெற்றிருந்தாள். பெண்களுக்கு வேண்டிய நன்னெறிபயக்கும் பலவகைக்கல்விகளும், நற்குண நற்செய்கைகளும் அவளுக்குவெகுகருத்தாய்க் கற்பிக்கப்பட்டன. சீக்கிரமே அந்தப்பெண் எல்லாவிஷயங்களிலுந் தேர்ந்தவளாய் உலகுக்கு ஒப்பு உயர்வு ஒன்று மில்லாத ஒரு ஆபரணமாயிருந்தாள் அவளுக்கு இருந்த புத்தி விவேகம் முதலியவை உயர்ந்த புருஷர்களுக்குக் கூட இவ்வளவு இல்லையென்று சொல்லும்படியாயிருந்தன. அவளுடைய அழகையும் சாமர்த்தியத்தையுங்கண்டு அநேகர் அவளைக் கலியாணஞ் செய்துகொள்ள முயன்றார்கள்; ஆயினும் அப்படிப்பட்ட பெண்மணி மனையாளாக வாய்க்கும்படியான பாக்கியம் ஒருவரும் பெறவில்லை. கடைசியில் அவள் ஷியர்ஆப்கன் என்னும் தார்த்தாரிய னொருவனுக்கு மணமாலை சூட்டினாள். அந்த ஷியர் ஆப்கன் சிறந்த கனவான் என்றும், நல்லோர்களிடத்தில் ஒருபோதும் நேசம் மாறாதவனான ஆக்பர் சக்கரவர்த்தியும் அந்தமனிதனை மிகவும் கவுரவமாக நடாத்தினானென்றும் சரித்திரக்காரர்கள் புகழ்ந்து பேசுகிறார்கள். அவன் மனதில் மிகவும் அருமையான குணங்களெல்லாம் அமைந்தது போலவே மேல் தோற்றத்திலும் க

ம்பீரமான வடிவமும் பளபளப்பான மேனியும் இன்னும் பல உயர்ந்த லக்ஷணங்களும் வெகு நன்றாய் அமைந்திருந்தன. இப்படிப்பட்ட உயர்ந்த புருஷனுக்கு அந்த ஸ்திரீரத்தினத்தை மனையாட்டியாகும்படிக் கடவுள் ஏற்படுத்தியது எவ்வளவு பெருமையாயிருக்கிறதென்று சொல்லி யாவரும் அதை மிகவும் மேன்மையாகக் கொண்டாடினார்கள்.

பிற்காலத்தில் ஜிஹாங்கிர் என்னும் சக்கரவர்த்தியாகப் போகிற ஸெலிம் என்னும் இளவரசன் அப்பெண்ணரசியினிடத்தில் நெடுநாளாய் ஆசைகொண்டிருந்தான். அவளை ஷியர் ஆப்கனுக்குக் கொடுக்கும்படி நிச்சயமானசெய்திகேட்டவுடனே அவ்விளவரசன் தன்தகப்பனான அக்பர் சக்கரவர்த்தியண்டைபோய்த் தம்பெரிய தனாத்தியக்ஷனுடைய மகளைத் தனக்கு விவாகஞ் செய்விக்கவேண்டுமென்று வேண்டினான்.

அதைக்கேட்டு அக்பர் சக்கரவர்த்தி, நமக்குச்சமானமானநிலையுள்ள ராஜகுமாரத்திகளைக் கலியாணஞ்செய்து கொள்ளாது, ஈனமான நம் வேலைக்காரன் மகளையா நாம்மணம்புரிகிறதென்று சொல்லி, அவன் அப்படி இழிவான எண்ணங்கொண்டதற்காக அவனை மிகவும் இகழ்ந்து, அப்படிப்பட்ட காரியம் ஒருபோதும் செய்யக்கூடாதென்றான். சீக்கிரத்திலேயே ஷியர் ஆப்கனுக்கும் அந்தப்பெண் மணிக்கும் கலியாணம் நடந்தேறிற்று. முன்னமே மனம் புண்பட்டிருந்த இளவரசனுக்கு இச்செய்தியைக் கேட்கவே எரிகிற தீயில் எண்ணெயை ஊற்றினதுபோலாயிற்று. அதுமுதல் இளவரசன் ஷியர் ஆப்கனிடத்தில் விரோதம் மேன்மேலும் அதிகரிக்கவே, தந்திரமாகவே அவனைக் கொல்லவேண்டிய வழிகளைத் தேட ஆரம்பித்தான். ஆயினும் அந்தச்சூதுகளொன்றும் சக்கரவர்த்தி சமுகத்துக்குச்சிறிதும் தெரியவொட்டாமல் மறைவடமாகவே செய்து அவர்களுக்கெல்லாம் அந்தத் தனாதிபதியினிடத்தில் மிகப்பொறாமை உண்டாகச் செய்தான். ஒருவனுக்கு நன்மைவிளைவிப்பதல்லவோ வருத்தம்; தீமை விளைவிப்பது எளிதுதானே? சாதாரணமாகக் கொஞ்சம் செழித்திருப்பவனைக் கண்டால் பொறாமைப்படுவது உலக வியற்கை. பிறர்க்கு ஒன்றுமாகாது; தாமே மேலதிகாரங்களைப் பெறவேண்டுமென்று பொறாமையும் பேராசையுமே அதிகமாகக்கொண்டிருக்கும் ராஜாங்கத்துஉத்தியோகஸ்தர்களுக்கு ஒரு அதிகாரியினிடத்தில பகை உண்டாக்குவதென்றால், அதைவிடச் சுலபமான காரியம் வேறென்ன? ஸெலிம் என்

னும் இளவரசன் எதிரிலேயே அனைவர்க்கும் ஷியர் ஆப்கனி டத்தில் பெரும்பகையை உண்டுபண்ணி அவனுக்குக் கெடுதி செய்யத் தொடங்கினன். அச்செய்தி தெரிந்தவுடனே இனிநாம் இங்கிருப்பது தகுதியல்லவென்று ஷியர் ஆப்கன் ஒருவருக்கும் தெரியாமல் ரகசியமாய் ஆக்ராவைவிட்டு வங்காளம்போய்ச்சேர்ந் து, அங்கேகவர்னருடைய தயவினால் பரத்வான் அல்லது பரத வனமென்னும் ஒருபெரிய மாகாணத்துக்குக்கொஞ்சகாலம் அதி காரியாயிருந்தான்.

அக்பர் சக்கரவர்த்தி இறக்குமளவும் அவனுக்கு யாதொரு தீங்கு முண்டாக வில்லை; அது வரையில் அங்கேயே வசித்துக் கொண்டிருந்தான். அக்பர் இறந்துபோய் ஷெலிமதானே சக்கர வர்த்தியானபோது, அத்தனை காலமாய் அவன் மனதிற்குள்ளே யே அடங்கிப் புதைந்து கொண்டிருந்த ஆசை யாகிய தீ நன்றாய் மேலோங்கிப் பற்றியெரிய ஆரம்பித்தது. பின்பு தன்னைக்கேட்பா ஒருவருமில்லாமற் போகவே தன் கோரிக்கையை நிறைவேற்ற இதுதான் தருணமென்று ஸெலிம் நல்ல தனத்திலாகிற காரியம் மற்றெதனாலு மாகாதென்று எண்ணி, ஷியர் ஆப்கனோடுகூட்டுறவு பாராட்டத் தொடங்கினன். ஷியர் ஆப்கன் அவ்வரசன் கருத்தை நன்றாய் உணர்ந்தவனாதலால், நாம் நம்மனையாட்டியை விட்டுப் பிரிந்தால் அந்தக்ஷணமே நமது பெருமை அழிந்து போகு மென் று கண்டு சிறிது காலம் அவ்வரச னுடைய சேர்விகள் ஒன்றுக்கு ம் இடங்கொடாமலிருந்தான். ஷியர் ஆப்கனைப்போலத் தேகவலி மையும் தைரியமுமுடைய புருஷன் வேறொருவருமில்லை. ஒப்பு யர் வில்லாத நற்குண நற்செய்கைகள் அவனிடத்தில் குடிகொண் டிருந்தான். அவனுடைய புகழே நாடெங்கும் பரந்தது. இப்படி அவன் பலவித உயர்ந்த குணங்கள் உடையவனா யிருந்ததைப்பற் றி யாவரும் அவனிடத்தில் பய பக்தியு மரியாதையுமாக நடந்து வந்தார்கள், எப்படிப்பட்ட அபாயமானாலும் அதைக்கண்டுஅவன் சிறிதும் மனஞ்சலிப்பதில்லை. அவனுடைய பெருமையைப்பாக்க ளாகச்செய்து அநேகர் பாடிக்கொண்டிருந்தார்கள். எவ்விதமான துணையுமில்லாமல் தனியே ஒரு சிங்கத்தைக்கொன்றவ னென்றா ல் அவன்தேகவலிமையை என்னென்று புகழலாம்! அது காரண மாகவே சிங்கத்தைக் கொன்றவ னெனப் பொருள்படும் ஷியர் ஆப்கனென்னும் சிறப்புப்பெயர் அவனுக்கு உண்டாயிற்று. அஸ் தாஜில்லோ என்பது அவனுடைய இயற்கைப்பெயர். அப்படிப் பட்ட மகா புருஷன் தனக்குக் கணவனாக வாய்த்தானென்று அந் தப்பெண்மணியும் மட்டுமிதமில்லாத பெருமைகொண்டிருந்தாள்.

சக்கரவர்த்தி செய்து வந்த சூதுகளும் அவளுக்குத் தெரியாமலிருக்க வில்லை; ராஜர் தன்னைப்பகைப்பதெல்லாம் முக்கியமாய் அவளுக்காகவே என்பது ஷியர் ஆப்கனுக்குந்தெரியும். அவள் அந்தக் கணவனுடைய கருத்துக்கிசைந்து சக்கரவர்த்தியின் சூதுகளுக்குச் சிறிதும் இடங்கொடாமலிருந்தாள். ஷியர் ஆப்கனும் அரசனிடம் சென்றால் வீண்வருத்த முண்டாகுமென்று அவ்விடத்துக்குப் போகாமலே வங்காளத்தி லிருந்தான்.

ஜிஹாங்கீர்பட்டம் பெற்ற சிலநாளைக்கெல்லாம்ராஜதானிக்கு வர வேண்டுமென்று வேண்டிய பலதடவை கடிதங்கள் வரவே அவன்; தன் தைரிய சவுரியபராக்கிரமங்களே தனக்குத் துணைசெய்யுமென்று நம்பி, தன் மனையாட்டியைமட்டும் அரசன்கண்ணெதிரே கொண்டு நிறுத்துவது தகுதியல்லவென்று அவளை அந்தப் பரதவனத்திலேயே விட்டுவிட்டு, தான்மட்டும் ராஜதானிக்குச்சென்றான். அவன் வந்தவுடனே அரசனும் அவனுக்குத் தன்னிடத்தில் யாதொரு சந்தேகமும் உண்டாகாதபடி அவனுக்கு உயிர்த்தோழனாகநடித்துவந்தான்.

அவ்வளவுகாலத்தில் அந்தச் சக்கரவர்த்தி தந்திரமாய் அவனைக் கொல்வதற்காகச்செய்த முயற்சிகளுக்கு அளவில்லை. ஜிஹாங்கீருக்கு வேட்டையாடுவதில் விருப்ப மதிகமாயிருந்ததால் அதற்காக ஒருநாள் நியமிக்கப்பட்டது அந்தராஜாங்கத்திலுள்ளபோர் வீரர்களெல்லாம் அரசனெதிரே தங்கள் தங்கள் பராக்கிரமங்களைக் காட்ட இதுதான் தருணமென்று ஆவல்கொண் டோடிவந்தார்கள்; யானை குதிரைகளும் நூற்றுக்கணக்காய்ப் புறப்பட்டன; போர்வீரர்க ளெல்லாம் அநேகமாய் யானைகளின்மேலேயே ஏறிப்போனார்கள்; ஈட்டியுங்கையுமாய் நடந்து வந்த காலாள்களுக்குக் கணக்கில்லை; வெகு அழகாய்ச் சித்திரவேலை செய்த வெள்ளிப் படம்போர்த்த பட்டத்து யானையில் நவரத்தினங்களிழைத்த அற்புதமான அம்பாரியில் அரசனும் ஏறிச்சென்றான். இப்படிப்போர்க்குப் பெருஞ்சேனைசாய்வதுபோல் அவர்கள் லாகோர்பட்டணத்தைவிட்டு வேட்டைக்குப்புறப்பட்டது பிரளயகாலத்தில் கடல் புறண்டுவருவதுபோ லிருந்ததேயொழிய வேறில்லை.

ஷியர் ஆப்கனும் முன்தான் ஒரு பெருஞ்சிங்கத்தைக்கொன்ற கத்தி யொன்றைமாத்திரம் கையிலேந்தி ஒரு போர்க்குதிரைமேல் ஏறிப்போனான். ஆதிதொடங்கியே அப்போர் வீரர்களுக்கெல்லாம் அவன்மேல் விர்த்தியாகிக்கொண்டிருந்த பொறாமை நன்றாய்த் தலைக்கேறும்படியாக ஜிஹாங்கீர் ஷியர் ஆப்கனை மென்

மேலும்கவுரவப்படுத்துவதுபோலவே நடத்திக்கொண்டுபோனான் ஷியர் ஆப்கனும், முன்சக்கரவர்த்தி தன்னிடத்தில் காட்டிய கொடுமைகளெல்லாம் மறவாமலிருந்தாலும், இனி தனக்கு யாதொரு தீங்கும்செய்யத் துணியானென்று பூரணமாய் நம்பியே அவனைப் பின்தொடர்ந்துபோனான்.

கடைசியாய் அந்தச்சேனை புலியும் சிங்கமும் அடர்ந்த ஒரு பெருங்காட்டில்போய்ச்சேர்ந்தன. உடனே பல வீரர்கள் ஒரு புலியை வளைத்துக்கொண்டார்கள். அந்தப் புலி ஒருவர்க்கும் பிடிபடாத பெரு வலியுடையதென்று கண்டு ஜிஹாங்கிர், தான் அத்தனைகாலமாய் எதிர்பார்த்திருந்தசமயம் நெருங்கிவிட்டதென்று மிகச் சந்தோஷமடைந்து இங்கே இந்தக்கொடியமிருகத்தைத் தீர்க்கத் துணிவுடையவனெவனென்றான். அனைவரும் ஒன்றுந் தோன்றாமல் மவுனமாய் நின்றார்கள்.

ஒருவரும் வாயைத்திறவாமலிருப்பதுகண்டு ஜிஹாங்கீர் சிறிது முகம் சுளித்துப்பார்த்தான். ஷியர் ஆப்கன், அந்த வீரச்செயல் தானே செய்யும்படி நேருமென்று எதிர்பார்த்திருந்தான் அப்படியிருக்க அவனுக்கு மிக்க மானபங்கமாகும்படி மூன்று வீரர்கள் முன்வந்துநின்று, அந்தப் புலியை எதிர்க்கத் தங்களுக்கு அனுமதி கொடுக்கவேண்டுமென்றார்கள்.

அப்போது ஜிஹாங்கீர் மிகச்சுறுசுறுப்பும் உற்சாகமும் உண்டாகும்படி ஷியர்ஆப்கனை முகமலர்ந்து விழித்துப்பார்த்தான். அந்தப்பெரும்புலியைக்கொல்வது தனக்குஒருவிளையாட்டேயொழிய வருத்தமன்றென்றுசொல்ல அவனும் ஆவலாயிருந்தான். ஆயினும் அம்மூன்று வீரர்கள் முன்னிட்டுவந்து விண்ணப்பஞ்செய்துகொண்டதனால் அவர்களைத் தடுத்துரைக்கக்கூடவில்லை.

அம்மூன்று வீரர்களும் யானையை விட்டிறங்கிக் கத்திகேடயம் குத்துவாள் முதலிய ஆயுதங்கள் அணிந்து புலியை எதிர்க்கச் சித்தமாய்வந்து நின்றார்கள். ஷியர் ஆப்கன், இவர்கள் தனக்குப் போட்டியாய் வந்தார்களென்றும், திறமையில்லாமையால் வாயைத்திறவாமல் நின்றானென்று தன்புகழ் அழிந்துபோகுமென்றும் கண்டு, சரேலென்று சக்ரவர்த்தியின் எதிரே போய் நின்றுஒருவிதமான ஆயுதமில்லாத ஒரு அற்பஜந்துவைப்பல ஆயுதங்களோடு எதிர்ப்பது ஆண்மைத்தனமுமன்றி, நீதியுமன்று, இது சூரர்கள் செய்கின்ற செய்கையா? சமபலமாய் எதிர்ப்பதே ஆண்மைத்தனம். கைகால்கள் முதலிய உறுப்புகள் நமக்குமுண்டு மிருகங்களுக்

குழுண்டு, அவைகளுக்கு விசேஷமாய்த் தேகவலிமை யளிக்கப் பட்டிருப்பதற்குப் பதிலாக நமக்கு யுக்தாயுக்தங்களைப் பகுத்தறியுந் திறமை அளிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால், சக்ரவர்த்தியின் வீரர்கள் ஆயுதங்களைஎறிந்துவிட்டுத் தமக்குக்கடவுள்கொடுத்த கருவிகளைமாத்திரமேகொண்டு புலியையெதிர்க்கட்டும்; அதற்கு அவர்கள் பின்னிட்டால், இதோ நான்போகக்காத்திருக்கின்றேனென்றான்.

ஜிஹாங்கீர் புன்னகையுடன் முகமலர்ந்து அவனைவிழித்துப் பார்க்க, அதுதான் அரசற்கு அநுமதமென்று அனைவரும் அறிந்துகொண்டார்கள். அம்மூன்று வீரர்களும் அவ்விதமாக மனப்பூர்வமாய் உயிரை இழக்கத் துணியாமல் அப்படியே நின்று விட்டார்கள் உடனே மகா சூரனை ஷியர் ஆப்கன் அரசன் முதலிய பலரும் மலர்ந்தகண் மூடாமலே பிரமித்துப்பார்த்துக்கொண்டிருக்க, கையிலிருந்த ஆயுதங்களை யெல்லாம் கீழே போட்டு விட்டு அந்தக்கொடும் புலியை எதிர்த்துப் போகச் சித்தனான். அந்தப் புலியை ஈட்டியுங் கத்தியுமாய் வளைத்து நின்ற வீரர்களெல்லாம் அவருக்கு வழி விட்டார்கள். அந்தப் பெரும் புலி ஒருமரத்தடியிலே படுத்து அவர்களைப்பார்த்து பயங்கரமாய் உறுமிக்கொண்டிருந்தது ஷியர் ஆப்கன் அதைக்கண்டு சிறிதும் அஞ்சாமலே எதிர்த்துச் சென்று படுத்திருந்த புலியருகிற் போய் அதன்விலாப்புறத்தில் ஓங்கி ஓர் உதையுதைத்தான். அனைவரும் அவனுக்குமரண காலம் சமீபித்ததென்று மனம் பதைக்கப் பதைக்கப்பார்த்திருந்த காரியம் கைகூடிற்றென்று களிப்புற்றிருந்தான்.

தன்னை ஒரு அற்பமனிதன் வந்துதைக்கவே புலிகண்ணில்நெருப்புப் பொறிபறக்க மிகக் கோபங்கொண்டு பின்னடைந்தது. மறுபடியும் அவன் அதை எதிர்த்துச்செல்ல, திடீரென்று அது அவன்மேற் பாய்ந்து அது கண்டு அண்டையிலிருந்த வீரர்களெல்லாம் தங்கள் ஈட்டிகளால் அதைத் தகைத்தார்கள். ஷியர் ஆப்கனும் சிறிதுதூரம் ஒதுங்கி ஓர் மரத்தடியிலே நின்று, அதுவே தன்னை எதிர்த்துவரட்டுமென்றிருந்தான் உடனே மிகப் பயங்கரமாய் ஒரு கர்ச்சனைசெய்து வெகு வேகமாகப் புலி அவன் மேற் பாய்ந்து அது தன் அருகேவந்தும் ஷியர் ஆப்கன் அதன்கையில் அகப்படாமல் ஒருபுறமாய் ஒதுங்கி அதன் வாலைப் பிடித்துக்கொண்டு சரசரவென்று பலதரம் இழுத்துச்சுற்றி அதன் தலைதானே

அண்டையிலிருந்த மரத்தில் வெகு வேகமாய் அறைந்து கொள்ளும்படிச் செய்தான். அவ்வறைபட்ட அதிர்ச்சியால் புலி இரண்டொருநிமிஷம் ஒன்றும் தோன்றாமல் பிரமைபிடித்துநின்றது. அதுகண்டு ஷியர் ஆப்கன் அதைப் பலதரம் உதைத்து அதற்குக் கோபமூட்டி, மறுபடியும் அது எதிர்க்கப்போகிறதருணம் பார்த்துத் திரும்பவும் முன்போலவே அதன் வாலைப்பிடித்துச் சுற்றினன். முன்னிலும் கொடுமையாய் அதற்கு இந்தத்தடவை அறைபட்டதென்றாலும், அவ்வளவுபயக்கமுண்டாகவில்லை. இச்செய்கையினால் ரோஷ மதிகரித்துப் புலி அவன்மேல் ஒரேபாய்ச்சலாய்ப்பாய்ந்து அவன்தொடையைக் கவ்விக்கொண்டது. அவன் காலுடை தளர்த்தியா யிராவிட்டால் அது கவ்வின கவ்வலில் காலே முறிந்துபோயிருக்கும். உடனே அவன் பிடியினின்றும் நிமிறிக்கொண்டு திரும்பவும் அவன்மேல் பாய்ந்து மார்பைக்கிழித்தது. அதனால் அவன்சோர்ந்து கீழேவீழ்ந்தானென்றாலும் கோப மதிகரித்து உடனே எழுந்து அனைவரும் இதென்னவென்று அதிசயித்து நிற்க, அந்தப் பெரும்புலியின் வாயைப்பிடித்துக் கிழித்துவிட்டு அரசனைப்பார்த்து வந்தனம் செய்தான். புலி செத்துக் கீழேவிழுந்தது: உடம்பெல்லாம் ரத்தம் தாரைதாரையாய்ப் பெருக ஷியர் ஆப்கனும் அந்த ரணக்களத்தைவிட்டு ஒருபுறமாய்ச சென்றான்.

அந்தச் செய்கையைக்கண்டுசக்கரவர்த்தி மிகவும் ஆச்சரியம் அடைந்தான். பின்பு ஷியர் ஆப்கனை ஒரு பல்லக்கிலேற்றி வீட்டுக்குக் கொண்டுபோனார்கள். சிலநாள்வரையில் அவன் பிழைக்க மாட்டானென்றே தோன்றியிருந்தது. ஆயினும் அந்தக்காயங்கள் ஆறிச் சீக்கிறமே அவன் பிழைத்தெழுந்தான். மார்பிலே புலிபீறின வடுமட்டும் அவன் சாகுமளவும் மறையவேயில்லை. இவ்வளவு பராக்கிரமசாலியென்று அவனிடத்தில் அச்சம் அதிகமாயிருந்தாலும் இன்னும் அவனைக் கொல்வதற்கு வேண்டிய வழிகள்தேடுவதைமட்டும் அரசன் ஒழிக்கவில்லை. அந்தச் சூரன்எங்கேபோனலும் தனித்துப்போகிறதே யொழியக் கூட ஒருவரையும் கூட்டிக்கொண்டுபோவதில்லை; தன் பிராணனைப்போக்க இப்படி ஒருதந்திரம் நடந்துவருகிறதென்பது அவனுக்குச் சிறிதும் தெரியாது தான் ஒருவர்க்கும் கெடுதிநினைத்ததில்லையே; ஆதலால் தன்னைக் கொல்லக்கருதுபவனும் உலகில் ஒருவனுமிரானென்று உறுதியாய் நம்பி யிருந்தான். எப்போதாவது அவன் ராஜசபைக்குப்போனால் அங்கே அவனுக்கு நடக்கிறமரியாதை மற்றெவனுக்கும் நடப்ப

தில்லை. அரசன் அவ்வளவு தந்திரமாய்த் தன்கள்ளக்கருத்தை ம றைத்துவந்தான். அரசனுடைய சூது, அவனோடு கூடவேசேர்ந்து ஷியர் ஆப்கனிடத்தில் மிகப் பொறாமைகொண்டு, அவனைக்கொல் லக் காத்திருக்கும் சிலர்க்கு மாத்திரந் தெரியுமேயொழிய மற் றெவர்க்குந் தெரியாது.

ஷியர் ஆப்கனைத் தெருவிலே போம்போது பிடித்து அவன் மேல் யானையை ஓட்டிக்கொன்றுவிடும்படி ஒரு யானைக்காரனுக்கு ரகசியமாய்க் கட்டளையிடப்பட்டிருந்தது. அப்படியே அந்த யா னைக்காரன்எப்பொழுது தருணம் அகப்படுமோவென்று காத்து க்கொண்டிருந்தான். அந்த வீரன் இந்தக்காலத்தில் வெளிப்படுகிற தென்கிற நியமமில்லை. ஆதலால் அவனைக் கண்டுபிடிப்பது மிகக் கடினமாயிருந்தது. அப்படியிருக்க ஒருநாள் ஷியர் ஆப்கன் தடா கத்துக்குப்போய் ஒரு சந்துவழியாய் வரும்போது எதிரே ஒரு யானை வருவதைக்கண்டு ஓரமாய் ஒதுங்கி அதற்கு வழிவிடும்படித் தன் பல்லக்குக்காரர்களுக்குக் கட்டளையிட்டான். அப்படியே அ வர்கள் ஓரமாய் ஒதுங்கிநிற்க, யானை சமீபத்தில் வந்துவிட்டது. பின்பு யானை பல்லக்கை மிதித்துக்கொண்டுபோகவேண்டுமேயொ ழிய வேறுவழியில்லை. அதுகண்டு ஷியர் ஆப்கன் யானையை நிறுத் தும்படி யானைக்காரனுக்குப் பலதரம் கட்டளையிட; அவன் அதை க்கேட்கவேயில்லை. பல்லக்கைப் பின்னே கொண்டுபோகும்படிப் பல்லக்குக்காரர்களுக்குக் கட்டளையிட, அது அசாத்தியமென் றெண்ணி அவர்களும் பல்லக்கைக் கீழேபோட்டுவிட்டு ஓடிப் போனார்கள். இனி ஒருக்ஷணம் தாமதித்தாலும் உயிர் போய்விடு மென்று கண்டு ஷியர் ஆப்கன் தன் கத்தியைக்கையிலெடுத்துக் கொண்டு பல்லக்கினின்றும் கீழே குதித்து, தன் தலைக்குமேல் மலைபோல் வந்துநின்ற பெரிய யானையைக்கண்டு சிறிதும் அஞ்சா மல் மரம்போல அதன் துதிக்கையை வேரோடுவெட்டிக் கீழேத ள்ளினான். அந்த யானை கீழேவீழ்வதற்குமுன்னமேயானைக்காரன் அதினின்றும் குதித்தோடிப்போயினான். யானையும் உடனே வீழ் ந்து இறந்துபோயிற்று.

ஷியர் ஆப்கனுடைய நற்குணத்தின் பெருமையை நானஎன் னென்று புகழலாம்! அந்த யானைக்காரனையும் அவன் அந்தக்ஷண மே கொன்றிருக்கலாம். நமக்குக் கெடுதிசெய்தவனுக்கு நாமும் கெடுதிசெய்ய நினைப்பது நமக்கொரு சிறுமையேயொழியப் பெரு மையன்றென நினைத்து, அது அவன் மதியீனத்தாற்செய்த செய் கையென்று அவனிடத்தில் பரிதாபப்பட்டு அவனை ஒன்றும் வருத்தாமலே துரத்திவிட்டான்.

உப்பரிகைமேலிருந்து இவையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஜிஹாங்கீர் அவனுடைய வீரச்செயலைக்கண்டு மிகவும் அதிசயித்தானென்றாலும், தன் உபாயமெல்லாம் இப்படி வீண்போகிறதேயென்று மிகவும் மனமழிந்தான். ஷியர் ஆப்கன் ராஜசபைக்குப்போய் நடந்தவரலாற்றைச் சொன்னபோது; ஜிஹாங்கீர் அவனுடைய பராக்கிரமத்தைக் கண்டு தான் மிக்க மகிழ்ச்சி கொண்டவன்போல் நடித்து, அவனுக்குத் தன்னிடத்தில் யாதொரு சந்தேகமும் உண்டாகாமலிருக்கும்படிச் செய்துகொண்டான்.

இன்னும் பலதடவை அவனைக் கொல்ல முயன்றும் பயன்படாமற்போகவே, அரசனுக்குவெட்கமும் ரோஷமும் அதிகமாயிற்று; அதனால் அதிக ஆக்கிரகங்கொண்டு எவ்விதத்திலாயினும் அவனைக்கொல்வதே காரியமென்று ஒரேபிடிவாதங்கொண்டான்.

அரசன் கருத்து இப்படிப்பட்டதென்று அறிந்துகொண்டு வங்காளத்துக் கவர்னராயிருந்த ஒருவன் ஒருநாள் மிகக் கொடியவர்களான நாற்பதுவீரர்களை அழைத்துத் தக்க தருணம்பார்த்து ஷியர் ஆப்கனைக் கொன்றுவிட்டு வரும்படி அனுப்பினான். அப்போது ஷியர் ஆப்கன் தன் தைரியமும் பராக்கிரமுமே தனக்குப் போதுமானதுணை யென்று தனிப்புறமான ஓரிடத்தில் வசித்துக்கொண்டிருந்தான். அண்டையில் ஒருவருமில்லாமல் இரவில் அவன் படுத்துத் தூங்குகிற தருணம் பார்த்து, தங்களுக்கு விசேஷ வெகுமதி கிடைக்கப்போகிறதென்கிற சந்தோஷத்தால் அவ்வீரர்கள் சிறிதும் அஞ்சாமல் ஒரேகூட்டமாய் அவன் படுத்திருந்த அறைக்குட்சென்று அவனைக்குத்தப்போனார்கள். அப்போது அவர்களுள் ஒருவன், அவர்கள் செய்யத் துணிந்த கொடுஞ்செயலைக் கண்டு மனம்பொறாமல், அவசரப்படவேண்டாம்; நாம்மனிதர்களல்லவா ! நாற்பது பேராய்க்கூடி ஒருவனைக் கொல்வது நியாயமா என்றான்! அந்த அரவத்தைக் கேட்டுத் திடீரென்று ஷியர் ஆப்கன் விழித்துக்கொண்டுபார்த்து, அத்தனைபேரும்ஒரேமுகமாய்த் தன்னைக்கொல்லவந்து நிற்கிறார்களென்பதுகண்டு, சரேலென்றெழுந்து தன்மேல் சிறிதும் காயம்படாமல் அத்தனை பேரையும் தான் ஒருவனாகவே அடித்துத்துரத்தினான்.

இப்படி அவன் தன்னந்தனியே சிறிதும் அஞ்சாமல் அத்தனை பேரையும் அடித்துத் துரத்தினதைக்கேட்டு அசகாயசூரனென்று அவனுடைய பேரும்புகழும் உலகமெங்கும் பரந்தது. அவன் எங்கே போனாலும் அங்கங்குள்ளவர்களெல்லாம்பெரு ஆச்சரியமாய்

அவனைப்பார்க்க ஓடிவருவார்கள். அவனுடைய பெருமைகளைப் பற்றிப் பலசரித்திரங்களும் பாட்டுகளுங்கூட உண்டாக்கப்பட்டன். பின்பு இப்படிப்பட்ட அபாயமான இடத்திலிருப்பது தகுதியல்லவென்று ஷியர் ஆப்கன் பரதவனம்போய்ச் சேர்ந்தான்.

இந்தத்தடவை ஷியர் ஆப்கன் காட்டின வீரச்செயலையும் கேட்கவே அவனிடத்தில் ஆக்கிரகம் உள்ளடங்காமல்ஜிஹாங்கிர் முன்னிலும் சிறந்ததாய் மற்றொரு தருணந்தேடி எவ்விதத்திலாயினும் அந்தப் பகைவனை வெல்லவேண்டுமென்று, வங்காளத்திலிருந்த அதிகாரிக்குக் கட்டளையிட்டான்.

நாம் ராஜாங்கத்துக்கு வெகு தூரத்திலிருக்கிறோம்; இங்கே அரசனுடைய கொடுமைகளொன்றுக்கும் இடமில்லையென்று ஷியர் ஆப்கன் பரதவனத்தில் சுயேச்சையாய் வசித்துக்கொண்டிருக்கையில், வங்காளத்து அதிகாரி தன் விசாரணைக்குட்பட்ட தேசங்களைப் பார்க்கப்போகிறதாய்ச் சாக்கிட்டு அளவற்ற சேனைகளுடனே பரதவனத்துக்குப் பயணப்பட்டான்; தன் உட்கருத்து இன்னதென்பதைத் தன்னுடன் வருகிற வீரர்களுக்குமட்டும் ரகசியமாய்க்குறிப்பித்திருந்தான். ஏறக்குறைய சமமான நிலையிலிருப்பவர்களுக்குள் ஒருவனுக்கு விசேஷமாய்ப் பிரசித்தியுண்டாகக் கேட்டால் அவனிடத்தில் மற்றவர்கள் பொறாமைப்படுவது உலகவியற்கையல்லவா? ஷியர் ஆப்கனிடத்தில் எவர்க்கும் பொறாமை அதிகம். அதனால் அவ்வீரர்களெல்லாம் அந்தச் சூதுக்கு உட்பட்டுச் சந்தோஷமாய்ப் போனார்கள்.

அவர்கள் வருவதுகண்டு ஷியர் ஆப்கன், மனதில் யாதொரு விகற்பமும் தோன்றாமல் சந்தோஷமாய்எதிர்கொண்டுவந்து, அவ்வதிகாரியோடு விநோதமாய்ப் பேசிக்கொண்டே அவர்களைத் தன் வீட்டுக்கு விருந்துண்ண அழைத்துக்கொண்டு போனான். பாதிவழிபோகையில் ஒருவீரன் ஷியர் ஆப்கனுடைய குதிரையை ஈட்டியால் குத்தினான். உடனே சந்தேகமடைந்து அவன் மிகக் கோபத்தோடு கண்களில் நெருப்புப்பொறி பறக்கச் சுற்றி விழித்துப் பார்த்து, குதிரையைவிட்டுக் கீழேகுதித்துத் தனக்குக் கோபமூட்டினவனைத் தரையோடு தரையாய நசுக்கிவிட்டு, அதிகாரியின் உத்தரவில்லாமல் இப்படி ஒருபோதும் நடந்திராதென்று யானைமேலிருந்த அம்பாரியைக் கீழேதள்ளி அவ்வதிகாரியையுங் கொன்றுதனக்குச் சமீபத்திலிருந்த மற்றவர்களையும் ஒருவர் தப்பாமல் அடித்துவிட்டுச் சிங்கம்போல மிகவும் பயங்கரமாய் அங்கேயே நின்றான். அதுகண்டு மிகுந்தவர்களெல்லாம் அண்டையில் நிற்க

மாட்டாமல் ஓடி மூலைக்கொருவராய்ப் போய்நின்று அம்புகளா லும் துப்பாக்கிகளாலும் அவனை அடிக்க ஆரம்பித்தார்கள். அப் போதும் எதிர்த்து வருகிறவர்களை அடித்துக்கொண்டே யிருந் தான். ஆயினும் அத்தனைபேரும் தூரத்தில்நின்று ஒருசேர அடி க்க ஆரம்பித்தால், கையில் ஓராயுதமுமில்லாமல் அவன்தனியே என்ன செய்யமாட்டுவான்? கடைசியில் தனக்கு மரணகாலம் சமீ பித்தமென்று கண்டு ஷியர் ஆப்கன் சுவாமியை மனதில் தியானம் பண்ணிக்கொண்டே நின்றான், ஒரேதடவையில் ஆறு குண்டுகள் மேலே வந்துவிழவே அதைப் பொறுக்கமாட்டாமல் கீழேவீழ்ந் தான், உலகத்தில் அசகாய சூரனைப் பெரும்புகழ்பெற்றிருந்த கனவானுடைய வாழ்நாள் இப்படியாக முடிவுபெற்றது.

ஷியர் ஆப்கன் இறந்துபோனபிறகு பெண்ணரசியான நூர்ஜி ஹானை அரசன் கட்டளையால் டில்லிநகரத்துக்குப்பிடித்து வந் தார்கள், ஆயினும் எந்தக்காரணத்தாலோ ஜிஹாங்கீர் அவள்முக த்தில் விழிக்கச் சம்மதிக்காமல் அங்கேயே அந்தப்புரத்தில் சிறி தும் வாசயோக்கியமல்லாத ஓரிடத்தில் அவளைச் சிறையாக்கிவை த்தான்.

நூர்ஜிஹான் மிகவும் அகங்காரங்கொண்டவள். தனக்கு மா னபங்கம் நேர்ந்தால்சிறிதும்பொறுக்கமாட்டாள். அப்படிப்பட்ட வளுக்கு மகாசூரனான கணவனும்போய்ச் சிறையிலும்அடைபட்டு இருக்கும்படி நேர்ந்தால் எப்படிப் பொறுப்பாள்? அதனால் அவ ள் சிறந்தயுக்தியும்சாமர்த்தியமுமுடையவள், பட்டுநூல்களாலும் பலவிதமாய்ப்பூபோட்டுப் பட்டாடைகளுக்கு அழகு செய்வதில் ஒப்பற்ற திறமையுடையவளாதலால் அந்த வேலைகள்செய்ய ஆர ம்பித்தாள். அவள் தான் சாதாரணமான ஓராடை அணிந்துகொ ண்டிருந்தாளாயினும், தான் சித்திரவேலை செய்த பட்டாடைகளை யெல்லாம் தன் வேலைக்காரிகளுக்கு உடுப்பித்துத் தன்திறமை தே சமெங்கும் பரவச்செய்தாள், டில்லி ஆக்ராமுதலிய பட்டணங்க ளிலுள்ள சீமாட்டிகளெல்லாம் அவ்வாடைகளின் அழகைப் பார் த்து அவற்றையே வாங்கித் தரிக்க ஆரம்பித்தார்கள். அதனால் அவளுடைய பெயர் எங்கும் பரவினது மாத்திரமே யல்லாமல், அவளுக்குப் பொருளும் விசேஷமாய்ச்சேர்ந்தது.

இப்படிஎங்கும்பிரசித்திபெற்றுமிக்கசெல்வமாய்வாழ்ந்துகொ ண்டிருந்தாலும், காவலில் வைக்கப்பட்டிருப்பதால் அவள்மிகவும்

மனவருத்தமுற்றுத் தனக்கு எப்பொழுது நல்லகாலம் வரப்போகிறதென்று எதிர்பார்த்திருந்தாள். அவளுடைய வடிவழகையும் சாமர்த்தியத்தையுங் கேட்டு அநேகர் அவள்மேல் ஆசைகொண்டார்கள். அப்போது உயர்ந்த உத்தியோகஸ்தனான ஒருகனவானுக்கு அந்தப் பெண்மணி மனையாட்டியாகப் போகிறாளென்று எங்கும் பெருங்கூச்சலாயிற்று. அவனுடைய வேண்டுகோளுக்கு அவள் சிறிதும் சம்மதப்படவில்லை யென்றாலும், இதைச் சாக்கிட்டாகிலும் நாம் வெளிப்படும்படி நேரிடாதாவென்று அதற்குச் சம்மதித்தவள்போலவே பாவனைசெய்தாள்.

அவள் நாள்தோறும் வெவ்வேறுவிதமாய்ச் சாக்குப்போக்குகள் சொல்லி மறுத்துக்கொண்டிருக்கவே, அவன் அந்தத் தாமதம் பொறாமல் ஒருநாள், உன்கருத்து இப்படிப்பட்டதென்று நிச்சயமாய்ச்சொல், நான் சீக்கிரமே கலியாணஞ்செய்து கொள்ள வேண்டுமென்று வற்புறுத்திக்கேட்க, அவள் எனக்குச் சம்மதமில்லையென்று உறுதியாய்ச்சொன்னாள். அதைக்கேட்டு அவன்மிகக் கோபங்கொண்டு அவளைப் பலவந்தமாய்ப் பிடிக்கப்போக. அவள் உடனே ஒரு ஈட்டியையெடுத்துக்குத்தினாள். அவள்மேல் ஆசைகொண்டமற்றவர்களுக்கும் அதேகதிதான் நேர்ந்தது

அந்தப் பெண்மணியின் வல்லமையும் வீரச்செயல்களும் சீக்கிரமே அரசன் காதுக்கு எட்டின அரசனுக்கு அவனிடத்திலிருந்த கோபமெல்லாம் இவ்வளவுகாலத்தில் அநேகமாய் ஆறிப்போயிருக்கலாம். அவளுடைய பெருமைகளைக்கேட்டவுடனே, இந்தவதந்திவாஸ்தவமா, அல்லது அதிவாதமா என்று அறியும்பொருட்டு அரசன் அவளைப் பார்க்கும்படி ஒருநாள் மாலைவேளையில் அவளிருந்த இடத்திற்குச் சென்றான். அவளுடைய ஒப்பற்ற வடிவழகைப் பார்த்தவுடனே அவனுக்கு மிக்க மதிப்பிரமை உண்டாயிற்று; அவளுடைய சவுந்தரியத்தைப்பார்த்துச் சிறிதுநேரம் மதிமயங்கிநின்று, பின்பு அவள் பக்கத்திற்சென்று அவள் கையைப் பிடித்துக்கொண்டு, ஓ பெண்கள்நாயகமே! இவ்வுலகத்துக்கெல்லாம் ஏகசக்ராதிபதியாயிருந்து ஆள்கின்றமகாராஜா உன்னைக்கையைப் பிடித்து வேண்டுகிறான்; ஜிஹாங்கீர் சக்கரவர்த்திக்குப் பட்டமகிஷியாக உனக்குவிருப்பந்தானாவென்று கேட்க, அவள் அரசன் கட்டளைக்குமேல்யார் என்ன சொல்லலாமென்றாள்.

அதைக்கேட்டுச் சக்ரவர்த்தி மிகவும் சந்தோஷமாய் அச்செய்தியை எங்கும்பிரசித்தப்படுத்தினான். சீக்கிரமே அவர்களுக்குக்கலியா

ணம் நடத்தப்பட்டது. அதுவரையில் உலகமெல்லாம் ஆச்சரியப்
படும்படி அப்பெண்மணி பட்டாடைகளில் அற்புதமாய்ச்செய்து
வந்த சித்திரவேலைகளெல்லாம் நின்றுபோயின; அதுவரையில்
அவளுக்கு வழங்கிவந்த மெருல் நிஸ்ஸா அல்லது பெண்கள் நா
யகம் என்ற பெயர் மாறி நூர்மகல், அல்லது அந்தப்புர ஜோதி
யென்று பெயராயிற்று. அதுமாத்திரமேயல்ல; அவளுடைய பெ
ருமைக்கு இதுவும் போதாதென்று சீக்கிரமே அந்தப்பெயரையும்
மாற்றி நூர்ஜிஹான் அல்லது ஜகஜ்ஜோதி யென்று பெயரிடப்ப
ட்டது. மேலும் சக்கரவர்த்திக்கு அவளிடத்திலிருந்த அன்புக்கு
அறிகுறியாய்ச் சக்கரவர்த்தினியென்று பட்டப்பெயரும் கொடு
க்கப்பட்டன. அவளுடைய வமிசத்தார்க்கெல்லாம் வமிசத்துக்கு
இரண்டாவதான அந்தஸ்து கொடுக்கப்பட்டதோடுகூட, உயர்ந்த
அதிகாரங்களும் கொடுக்கப்பட்டன. ராஜாங்கத்து நாணயங்களி
லெல்லாம் அவளுடைய பெயர் அரசனுடைய பெயர் ஆக இரண்டு
மாய்ச் சேர்த்துமுத்திரிக்கப்பட்டன. அவளிருந்த அந்தப்புரம்ஒரு
பெரிய ராஜ சபையாயிற்று. ராஜ தந்திரங்களை ஆலோசனை செய்
வதெல்லாம் அவ்விடத்திலேதான். நியாய விசாரணைகளும் தீர்ப்பு
களும் அரசன்பெயராலேயே வெளிப்பட்டனவென்றாலும், அவை
கூட அவளாலேயே நடத்தப்பட்டன. ஜிஹாங்கிருடைய அரசா
ட்சிக்குப்பிரசித்தி உண்டானதெல்லாம் இதனாலேதான். அப்போ
து அந்த ராஜாங்கத்தில் அவளுக்கு இருந்த செல்வாக்கு சக்கர
வர்த்திக்குக்கூட இல்லையென்று சொல்லலாம். பலவாறு சொல்லி
யென்ன? மகம்மதிய ராஜாங்கத்தில் அவ்வளவு பெருமைபெற்றுச்
செங்கோல்செலுத்தினபெண்ணரசி வேறொருத்தியுங்கிடையாது.

இப்படி நூர்ஜிஹான் சிறப்புபெற்ற சிலநாளையில் ஜிஹாங்கி
ருடைய மூன்றாங்குமாரனான கூரம்என்பவன் ராஜாங்கத்தில் அ
நேகம்கலகங்கள் உண்டாக்கத்தொடங்கினான். அவன் சேனைகளை
நன்றாய்க் கையாளுந் திறமையுடையவனாலால், அதைக்கொண்டு
எல்லாவற்றையும் வெல்லலாமென்று நினைத்தான். தகப்பனுக்குப்
பிறகு தனக்கே பட்டங்கிடைக்கப்பெருந்தடை யென்று குசிரோ
வென்னும் தன்மூத்தசகோதரனை அநியாயமாய்க்கொன்று விட்
டான்.

ஆயினும் அவனுடையசூதுகள் வெளிப்படாமற் போகவில்லை.
நூர்ஜிஹான் சிறந்த புத்தியும்சாமர்த்தியமும் உடையவளாதலால்

வெகுநாட்குமுன்னமே அவனுடைய சூதுகளை எப்படியோ தெரிந்துகொண்டு அதை அரசனுக்கு அறிவித்தாள். அதனாலும், உடனே தன்மூத்தமகன் கொல்லப்பட்டதனாலும் அரசன் அவனிடத்தில் அதிககோபங்கொண்டான்! ஆயினும் அவன் தூரதேசங்களிலேயே சுற்றிக்கொண்டிருந்ததனால் அவனை ஒன்றும் செய்யக்கூடவில்லை; கடிதங்கள் எழுதினாலும் அதற்கு அவன் தகுந்தவிடைகொடுப்பதில்லை, இத்தனைக்கும் கூரம் நூர்ஜிஹானுடைய சகோதரனுக்கு மருமகன்; ஆயினும் நூர்ஜிஹானுக்கும் அவனுக்கும் சிறிதும் போதாது. அவனுக்குப் பட்டம் கிடைப்பது அவளுக்குச் சம்மதமேயில்லை; ஜிஹாங்கீருடைய நான்காம் குமாரனை ஷாரியர் என்பவன் தனக்கு ஷியர் ஆப்கனிடத்திற் பிறந்த மகளைக் கலியாணம் செய்துகொண்ட மருமகனாதலால், அவனுக்கே கிடைப்பிக்க வேண்டுமென்பது அவளுடைய கோரிக்கை.

நூர்ஜிஹானுடையபோதனையினால், அரசன் அம்மகனுடைய கொழுப்பை அடக்க முயன்று முக்கியமாய் மொஹபெத்கான் என்னும் சேனாபதியின் சகாயத்தால் முதலில் அவன் பலத்தை ஒருவாறு ஒடுக்கினான். அவ்வளவோடு கூரம் அடங்கியிராமல், திரும்பியும் அநேகம் சேனைகளைச் சேர்த்துக்கொண்டு பல பட்டணங்களைப் பிடித்துத் தானே சுதந்தரமாய் அவற்றை ஆளத்தொடங்கி, மென்மேலும் அயல் நாடுகளைப்பிடிக்கத் துவக்கினதுகண்டு, மொஹபெத்கான் படையெடுத்துச்சென்று அவன்பலத்தை அடியோடு அடக்கினான். பின்பு கூரம், தனக்குத் துணையாயிருந்தவர்களெல்லாம் பகையாகித் தன்னை எதிர்த்ததுகண்டு, அவன் தான் செய்த குற்றங்களை நினைத்து மனம் நொந்து மிகவும் அனுதாபத்துடன் தன் குற்றங்களை மன்னிக்கும்படித் தகப்பனுக்குக் கடிதமெழுதினான். அவன் படுகிற சங்கடத்தைப் பார்த்து ஜிஹாங்கீர் மிகவும் பரிதாபப்பட்டு, இனி அவன்பேரால் எங்கும் அரசு செலுத்தக்கூடாதென்றும், தாரா, ஆரங்கசீபு, மூராத் என்னும் அவனுடைய மூன்று குமாரர்களும் தன் ஆதீனத்திலேயே இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடுசெய்துக்கொண்டு அவன் குற்றத்தை மன்னித்தான். ஆயினும் கூரம் நூர்ஜிஹானிடத்திலிருந்த பயத்தினாலும் வெட்கத்தாலும் ராஜசபையில் தலைகாட்டாமல் ஊரூராய்த் திரிந்துகொண்டே காலங்கழித்தான். மிகவும்கொடியதாய்க் கிளம்பின அந்தப் பெருங்கலகம் இப்படியாக முடிவுபெற்றது நூர்ஜிஹானுடைய எச்சரிக்கையாலும் முன்ஜாக்கிரதையினாலுமே யொ

ழிய மற்றொன்றினுலுமல்ல பேருக்குமட்டும் ஜிஹாங்கீர் சக்கரவ
ர்த்தியாயிருந்தானேயொழிய, ஒருகோணலும் வாராமல் யுத்தி
புத்தி விவேகங்களோடு ஆளுகையைத் தக்கபடி நடத்தினவள் ஜக
ஜ்ஜோதியே.

நூர்ஜிஹானுடைய ஜீவகாலத்தில் அவள்செய்த அற்புதமா
ன செய்கைகளுள் மிகவும் சிறந்ததொன்றுண்டு. அவள் மகாசூர
னுன மொஹபெத்கானை ஆட்டுவித்த ஆட்டமொன்றே அவளு
டைய பெருமையை விளக்கப் போதுமானது. ராஜாங்கத்துக்கு
விரோதமாய்க் கிளம்பின பல கலகங்களையும் அடக்கி அமைதியு
ண்டாக்கினதுபற்றி முதலில் அவனிடத்தில் அரசனுக்கும் அதி
கமாய் விசுவாசமும் நம்பிக்கையும் உண்டாயின; ஆதலின், அவர்
கள்அவனை, மற்றப் பிரபுக்களெல்லாம் பார்த்துப் பொறாமைகொ
ள்ளும்படி, அவ்வளவு பெருமையாக நடத்திவந்தார்கள்.

ஆயினும் அந்த நன்றிநெடுநாள் நீடித்துவரவில்லை. ராஜாங்க
த்தில் மொஹபெத்கானுக்கு இருக்கிறசாய்காலைப்பார்த்து, இவனு
க்கு இவ்வளவு சுவாதீனங்கொடுத்தால் முதலுக்கே மோசம்வரு
மென்று கண்டு நூர்ஜிஹான் அவனுடைய செல்வாக்கைக் கொ
ஞ்சமாய்க் குறைத்துவிடவேண்டுமென்று தீர்மானித்தாள். அரச
னும் அவள் கருத்துக்கிணங்கி, அப்படியே செய்யக்கருதினுன்.
அரசனுடைய கருத்து தன்னிடத்தில் முன்போலிராமல் மாறுபட்
டிருக்கிறதென்று மொஹபெத்கானுக்கு நன்றாய்த் தெரிந்ததென்
றாலும், தன்னுடைய கவுரவமே தனக்குப் பெருந்துணையென்று
நம்பி அவன் தைரியமாகவே யிருந்தான். ஆயினும், அரசனுக்குத்
தன்னிடத்திம் மனக்கலக்க முண்டானதெல்லாம் நூர்ஜிஹானு
டைற துர்ப்போதனையாலென்று அவனுக்குத் தெரியவரவே, அந்
த ராஜ்யமே மொகலாயவமிசத்தாருடைய கையைவிட்டு நீங்கிப்
போம்படி அவ்வளவு மொடியதாய்க்கலகமொன்றுஉண்டாயிற்று.

நூர்ஜிஹானுக்கு உண்டான சந்தேகமாத்திரமேயன்றி, இன்
னும் பலபேர் பலவிதமாய்ப்பொறாமைகொண்டு மொஹபெத்கா
னிடத்தில் பழிகூறவே, அவன் செய்த நன்மைகளையெல்லாம் மற
ந்து அரசன் அதிக கோபங்கொண்டு முன்னிலும் மிகக்கொடிய
தாய் மேன்மேலும்கடிதமெழுதினுன். தான் ஒருவித அபகாரமும்
செய்யாமலிருக்க அரசனுக்குத் தன்னிடத்தில் இப்படிக் கோபமு
ண்டானதற்குக் காரணம் இன்னதென்று தெரியாமல் மொஹபெ

க்கான் ஆனது ஆகட்டும், போய்ப்பார்ப்போமென்று தகுந்த எச்சரிக்கையோடு அரசனிடம்போவதாய் முதலில் தீர்மானித்தான். ஆயினும் தான் செய்த ஒப்பற்ற உபகாரங்களுக்கெல்லாம் தகுந்த வெகுமதி செய்வதுபோல், இப்படி அநியாயமாய்க் கொடுமைசெய்யக் கருதினதை நினைத்து ஒருவிதகோபமும் வெறுப்பும் அடைந்தவனாய், முதலில் நினைத்தபடிச் செய்யாமல், முன்னமே தன்னை ஆளும்படி அரசன் ஏற்படுத்தியிருந்த ஒரு கோட்டைக்குப்போகக் கருதினான். அவ்விடத்துக்குப் போனவுடன் அவனுக்கு உண்டான அதிசயத்தை என்னென்று சொல்லலாம்! ராணி ஏற்படுத்திய ஒருவனுக்கு அந்தக் கோட்டையை உடனே ஒப்புவிக்கும்படி அரசன் கட்டளை அவனுக்கு முன்னமே அவ்விடத்திற்கு வந்திருந்தது.

அதைக்கண்டு மொஹபெக்கான் இப்படி ஒரு அநியாயம் உண்டாமென்று அரசனுக்குக் கடிதமெழுத, பின்பு ஒன்றின்மேலொன்றாய் இருவர்க்கும் வாக்குவாதம் நடந்தது. கடைசியில் அரசன், நீ உடனே என் முன்னிலைக்கு வருவாயா மாட்டாயாவென்று வெகு கோபமாய்க் கடிதமொன்றெழுத, மொஹபெத்கான் அதற்கு உடன்பட்டுப் போகும்போது, தக்க ஜாக்கிரதையோடு போகவேண்டுமென்று தான் சொன்னபடி செய்யத்தக்க ஐந்நூறு ராசபுத்திர வீரர்களோடு, அப்போது ஜிஹாங்கிர் அரசுசெலுத்திக்கொண்டிருந்த லாகோர்பட்டணத்திற்குச் சென்றான்.

மொஹபெத்கான் அளவற்ற சேனைகளைக் கூட்டிக்கொண்டு வருவது கேள்விப்பட்டு நூர்ஜிஹான், இதைக்கண்டு அரசனாவது பயந்து சமாதானமாய்ப்போவான்; இல்லாவிட்டால் அரசாட்சிக்கேதாவது அபாயமுண்டாகுமென்று மிகவும் திகில்கொண்டு அவன் அதீனத்தில் சேனையே இருக்ககூடாதென்றாள். அவன் அரசனிருக்கும் இடத்திற்குச் சமீபத்தில் வந்தவுடனே, வங்காளநாட்டுத் தீர்வைகளுக்கும் முன் காசிச்சண்டையில் கொள்ளையடித்த பொருள்களுக்கும் சரியாய்க் கணக்கு ஒப்புவித்தாலொழிய அரசன் சமுகத்துக்கு வரக்கூடாதென்று கடிதம் வந்தது. அதனால் மொஹபெத்கான் மிகச்சினங்கொண்டு, இப்படி மானபங்கபடுத்தலாமாவென்று நேராய் அரசனிடம்போய் எச்சரிக்கத் தன்மருமகனை அனுப்ப, அச்சிறுவன் அரசன் சமுகத்திற்கு வந்தவுடனே அவனை நிர்வாணமாக்கிச் செருப்பாலடித்துக் கந்தைத்துணிகளைச் சுற்றிக் கழுதைமேல் பின் முகமாய் உட்காரவைத்து மேள தாளங்

களோடு ஊர்வலம் வருவித்து அப்படியே அவன்மாமனிடம் அனு ப்பினார்கள். அந்த வெட்கக்கேட்டையும் ஒருவன் பார்த்துப்பொ றுப்பானா? இவ்விஷயத்தில் அரசனுடைய மதிக்குறைவைக்கண்டு மொஹபெத்கான் மிகவும் துக்கித்தான். இவையெல்லாம் நூர்ஜி ஹானுடைய துர்ப்போதனையால், அதைத்தடுக்கத் திறமையில்லாம ல் அரசன் செய்த காரியமென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும். இப்போது நாம் அரசனிடம் போவோமானால் உயிரேபோய்விடும்; அது தப்பினாலும்சிறை செய்து விடுவார்களென்றுதெரிந்து, மொ ஹபெத்கான் திடீரென்று போய் ஒருவர்க்குந்தெரியாமல் அரசனை ப் பிடித்துக்கொள்ளவேண்டுமென்று தீர்மானித்தான்.

மறுநாள் காலையில் காபூலுக்குப்பிரயாணமாய், ராஜசைனிய மெல்லாம் அங்கு ஓர் ஆற்றங்கரையில் இறங்கியிருந்தன. மொஹ பெத்கானுடைய முயற்சி ஒருவருக்குந் தெரியாதாகையால் அதை த்தடுப்பதற்குவேண்டிய முன்ஜாக்கிரதை சிறிதுமில்லை. பொழுது விடிந்ததும் சேனைகள் அவ்வாற்றைக் கடந்து போயின் அரசன்மா த்திரம் சாவகாசமாய்ப் போகலாமென்று அங்கேயேயிருந்தான். சேனைகளெல்லாம் அவ்வாற்றைக் கடந்ததும் மொஹபெத்கான், அரசன் சுலபமாய்ஓடிப்போகக்கூடாதபடி அவ்வாற்றுப்பாலத்தை க்கொளுத்திவிட்டு, பல ரசபுத்திரவீரர்கள் சூழ்ந்துவர, அரசனு டைய கூடாரத்திற்குச்சென்றான். அங்கிருந்த காவற்காரர்களொரு வரும் அவனைத் தடுக்கமாட்டவில்லை. அரசன் ஸ்நானத்திற்குப் போய் இருக்கிறானென்றுதெரிந்து மொஹபெத்கான் தானும் அவ் விடத்திற்குச் செல்ல, அங்கிருந்தவர்களெல்லாரும் அவனைப்பார் த்துப் பிரமித்து அப்படியேநின்றார்கள். முதல்நாள் அவர்கள்செ ய்த செய்கை யாவர்க்கும் நன்றாய் நினைவுவரும்படி அங்கிருந்தவ ர்களையெல்லாம் சுடச் சுடப் பார்த்துக்கொண்டே மொஹபெத் கான் ஒன்றும் பேசாமல் அரசன் நீராடுங் கூடாரத்திற்குச் செ ன்றான்.

அதற்குள் ஜிஹாங்கிர், அவன் வருகிற செய்திகேட்டுக் கத்தி யைஉருவிக் கையிலெடுத்துக்கொண்டு வெளியேவந்து, மொஹ பெத்கானுடைய புருவம் எப்புறமாய் அசைகிறதென்று அவன் கட்டளையை எதிர்பார்த்து உருவினகத்தி உருவினபடியே காத்தி ருக்கும் பல ரசபுத்திர வீரர்கள் சூழ மொஹபெத்கான் வந் திருப்பதையும், தன்னுடைய வீரர்களெல்லாம் அவனை ஒன்றும் செய்யமாட்டாமல் அப்படியே திகைத்து நிற்பதையுங் கண்டான். அப்பொழுது அவன் விஷயத்தில் தான்செய்த தீமைகள் பலவும்

அவன் மனதில் நன்றாய் உறைத்தன. உடனே அரசன் அவனண்டைபோய், மொஹபெத்கான்! இதென்ன இது! என்றான். அது கேட்டு மொஹபெக்கான் என்னைக் கொல்லவேண்டுமென்று பல விரோதிகள் முயற்சி செய்கின்றமையால், என்னைக் காப்பாற்றவேண்டுமென்று மகாராஜாவை வேண்டிக்கொள்ளவந்தேனென, அரசன் உனக்கு ஒருபயமுமில்லை; உன்பின்னே ஆயுதபாணிகளாய் இத்தனை வீரர்கள்வந்து நிற்பதேனென்றான். அதற்கு மொஹபெத்கான் என்னையும் என் இனத்தாரையும் பிராணபயமில்லாமல் காப்பதற்காகவே இவர்கள் வந்திருக்கிறார்கள்: அது உறுதியானால் இவர்கள்போய்விடுவார்களென, அரசன் அது அப்படியே உன் இஷ்டப்படியாகட்டும்? நீதான் ராஜாங்கத்துக்கு விரோதமாய்நடக்கின்றாய்: நான் உனக்கு ஒருதீங்கும் செய்யக்கருதவில்லை. நீசெய்த நன்மைகளை நான்மறந்துபோனேனோ? நீ துரைத்தனத்தாருடைய கட்டளையை எதிர்த்ததனால் உனக்குக் கொஞ்சம் கோபமூட்டினேனேயொழிய வேறில்லை. இனி நமக்கு மனஸ்தாபம்வேண்டாமென்றான்.

அதற்கு ஒன்றும் விடைகொடாமலேமொஹபெத்தான் அவனைஉடனே யானைமேலேற்றி எதிர்த்தவர்களைப் புடைத்துக்கொண்டு தன்கூடாரம்போய்ச் சேர்ந்தான்; ஆயினும் அரசன் உயிரையாவது ஆட்சியையாவது அபகரிக்கச் சிறிதும் அவன் கருதவில்லை. உன்னிடத்தில்அவனுக்குள்ள விரோதத்தைப் போக்கவேண்டுமென்றே இவ்வளவுதூரம் செய்தான்.

நூர்ஜிஹான்மாத்திரம் அவன்கையில்அகப்படவில்லை. மொஹபெத்தான் பல வீரர்களோடு கூடாரத்துக்குள் நுழைந்த செய்தி கேட்டவுடனே அவள் ஒரு யானைமேலேறி மெதுவாய் ஆற்றைக்கடந்து சேனைகளோடு சேர்ந்துகொண்டு அரசனுக்கு நேர்ந்திருக்கும் அபாயத்தை அவர்களுக்குத் தெரிவித்து, அவனை விடுவிப்பதற்குவேண்டியமுயற்சிசெய்யத் தொடங்கினாள்.

நூர்ஜிஹான் சுவாதீனமாயிருக்குமளவும் அவள் தனக்கு ஒருதலைமாட்டுப் பாம்புதானென்றுநினைத்து மொஹபெத்கான் அவளைப்பிடிக்கத்தீர்மானித்து உடனே பகிரங்கமாய்ப் படையெடுத்தான். ராணி அதிகமாய் அதிகாரம் செலுத்துகிறாளென்று அரசனைச்சேர்ந்தவர்கள்கூட அநேகர் அவளிடத்தில் வெறுப்புற்றிருந்தார்கள்.

மொஹபெத்கான் அவர்களை எதிர்ப்பதற்காக ஆற்றங்கரைக்கு வருகையில்வழியிலேயொருவீரன் அரசனைச்சிறையாய்ப் பிடித்திருக்

கிற செய்தி தெரிந்து அவர்களை உடனே எதிர்த்தான். அந்தக்ஷண மே ரசபுத்திரவீரர்கள் அவனையும் இன்னும் எதிர்த்து வந்த பல ரையும் கொன்று மிகுந்தவர்களை அடித்துத் துரத்திவிட்டார்கள். இந்தத்துக்கச் செய்தியையும் கேட்கவே நூர்ஜிஹான் மிகக் கோ பங்கொண்டு, மறுநாள் கிழக்கு வெளுப்பதற்குமுன்னமே அவ்வா ற்றைக் கடந்துவந்து உடனே அவர்களை எதிர்த்து அரசனை விடுவி க்கவேண்டுமென்று தீர்மானித்தாள். இவர்கள் இப்படி எதிர்க்கத் துணிந்த செய்திகேட்டு ஜிஹாங்கீர், அந்தச்செய்தி தெரிந்து மொஹபெத்தான் தன்னைஎங்கே கொன்றுபோடுகிறானோவென்று பயந்து, சண்டையை நிறுத்தும்படித் தன் மந்திரிக்குச் செய்தியனு ப்ப, அவன், சிறையாயிருக்கையில் அரசன் கட்டளையைக்கேட்க வேண்டுவதில்லையென்று, சண்டைக்கே சந்நாகஞ் செய்துகொண் டிருந்தான்.

ஆற்றைக்கடக்கப் பாலமுமில்லை; அது எரிந்துபோயிற்று. ஆறோ அதிக ஆழமானது; ஏறுவதற்கோ எதிர்கரை அதிக உயர மானது. ஆயினும் காலையில் எழுந்தவுடனே ராஜசைனியமெல்லா ம் அவ்வாற்றைக் கடந்துவந்தன. அநேகம் ஆற்றிலேயே மடிந்து போயின. அநேகம் கரையேற முயலும்போது அடிபட்டு மடிந்து போயின. இவ்வருத்தங்களுக்கெல்லாம் தப்பிமிகுந்து கரையேறி னவர்கள் ரசபுத்திரர்களோடு சண்டைசெய்யமாட்டாமல் தவித் தார்கள். அவ்வருத்தத்தைக்கண்டு, நூர்ஜிஹான் மனம்பொறாமல் அதிக ரோஷத்துடனே தன் மகளோடுகூட ஒரு யானைமேலேறி எதிர்த்தவர்களுக்கெல்லாம் ஈடுகொடுத்துக்கொண்டு ஆற்றைத் தா ண்டிவந்து ஒருவரும் கிட்டநாட வொட்டாமல் அம்புகளைச் சர மாரியாய்ப்பொழிந்து பல வீரர்களைக் கொன்றாள். அப்போது அவள் காட்டிய வீரச்செயலைக்கண்டு ரசபுத்திரர்களே அதிசயித் தார்கள். அவளைப் பிடித்துக்கொண்டபின்புகூட ஒருரச புத்திரன் அவளுடைய வீரச்செயலுக்காக அவளைச் சிறையாக்கத் துணியா மல் விட்டுவிட்டானென்றால், அவளுடைய வல்லமையை நாம்என் னென்று புகழலாம்! ஆயினும் கடைசியில் சேனையெல்லாம் அடி பட்டு ஓடியும் மடிந்துபோகவே, நூர்ஜிஹான் பகைவர்கையில் அகப்பட்டுக்கொள்ளாமல் மெதுவாய்த் தப்பித்துக்கொண்டு தனி யே லாகோருக்கு ஓடிப்போயினாள்.

அதுசெய்தி தெரிந்து ஜிஹாங்கீர் இன்சொல்லாய் நூர்ஜி ஹானுக்கு ஒருகடிதம் எழுதினான். அதாவது போனதுபோகட் டும்; இனி மேல் ஒருவர்க்கும் மனஸ்தாபம்வேண்டாம்; இப்படி

உள்நாட்டுச் சண்டை விருத்தியானால் நாட்டுக்கு நன்மை யுண்டாகுமா? மொஹபெத்கான் நம்மிடத்தில் மிகவும் விசுவாசமா யிருக்கிறான்; நீ இவ்விடத்திற்கு வருவாயானால் உன்னைப் பெருமையாகவே வரவழைக்கக் காத்திருக்கிறனென்று எழுத, நூர்ஜிஹான் வேறு விதியில்லாமல் சிறையாய்க் காபூலுக்குப் போய்க்கொண்டிருந்த கணவனிடத்திற்கு வந்தாள். மொஹபெத்கான் முதலில் அவளை மரியாதையாகவே வரவழைத்தானென்றாலும் உடனே அவளைக்கடுஞ் சிறையில்வைத்து, சக்கரவர்த்தியாய்த் தேசமெல்லாம் ஆள்கின்ற நீர் கடவுளைப்போல் பக்ஷபாதமேயொழிய ஒருவரை உயர்வாயும் ஒருவரைத் தாழ்வாயும் பார்க்கலாகாதென்று அரசனுக்கும் நற்போதனைசெய்தான்.

மொஹபெத்கானுடைய கோபம் அவ்வளவோடு அடங்கவில்லை; நூர்ஜிஹான் உயிரோடு இருக்குமளவும் தனக்கு நிம்மதி உண்டாவதில்லையென்றுகண்டு, அவன் ஒருநாள் அவ்வரசி நன்றாய்த்தூங்குகிறதருணத்தில் அவளைக்கொன்றுவிட்டுவரும்படி ஒரு வீரனை அனுப்பினான். அவன் போனதருணத்தில் அவள் அமைதியாய்த் தூங்கிக்கொண்டிருந்தாள். அப்போது அவளுடைய வடிவழகையும் பார்த்து அவள் முன்காட்டியவீரச்செயலையும் நினைக்கவே அவனுக்கு அவளைக் கொல்லத் துணிவுண்டாகவில்லை; கையிலிருந்த கத்தி தானே நழுவிக் கீழேவிழுந்தது. அந்தச் சத்தங் கேட்டு அவள் சரேலென்று எழுந்து அவனைப்பார்த்து, நீ வந்த காரியம் இன்னதென்றுநன்றாய்த்தெரிந்தது; கொல்வதானால் கொல்லலாம் என்று மார்பைநெறித்துக்காட்ட, அவன் நான் இக்கொடுஞ்செயல் செய்யத்துணிந்ததற்காக என்னை மன்னிக்க வேண்டும் என்று சொல்லிக் கீழே வீழ்ந்துபோன கத்தியைக்காட்ட, அவள், மரணமென்பது யாவர்க்குமுண்டு. திருட்டுத்தனமாய்க் கொல்லக் கருதுவதைவிடப் புத்தியீனம் வேறுண்டோவென்று உன்னை இத்தொழிலுக்கு ஏவினவனுடன் சொல்லென்று சொல்லி அவனை அனுப்பினாள்.

அதைக்கேட்டு மொஹபெத்கான் அதிக கோபமடைந்து, நூர்ஜிஹானைக் கொல்லக் கட்டளைச்சீட்டு கொடுக்கும்படி அரசனையே வற்புறுத்த, அவன் அதை மறுக்கமாட்டாமல் அந்தக் சீட்டில் கையெழுத்து செய்தான். அந்தக்கட்டளைச் சீட்டைக் கண்டவுடனே நூர்ஜிஹான், சரீரத்தின் உரிமைதப்பினவர்களுக்கு உயிரின் உரிமைகூடத்தப்பிப்போகிறது பார்த்தாயாவென்றுசொல்லி

ல்லி, இந்தக் கொலைசாசனத்தில் கையெழுத்துசெய்த சக்கரவர்த்தியைமட்டும் சற்றே பார்க்க உத்தரவு கொடுக்கவேண்டுமென்று தன்னைக்கொல்லவந்தவர்களை வேண்டினாள். அவர்கள் அதற்குச் சம்மதிக்க, நூர்ஜிஹான் மிகுந்ததுக்கத்துடன் சரேலென்று எழுந்து மொஹபெத்கானும் அரசனும் உட்கார்ந்திருந்த விடுதியிற் சென்று கண்ணும் கண்ணீருமாய் அரசனைக் கட்டிக்கொண்டாள். அவனைப் பார்த்துச் சில நாளாகவே அவளிடத்தில் இருந்த நேசம் அதுவரையில் அவனுக்குச் சிறிதளவு மாறியிருந்தது. எதிரேவந்து நின்று அவள் அப்படிப் புலம்புவதையும் பார்க்கவே அவன் மனம்பொறுமல் கண்ணீர் பெருகப்பெருக மொஹபெத்கானைப் பார்த்து இந்தஒரு பெண்ணைமாத்திரம்நீகொல்லாமல்விடமாட்டாயாவென்றும்கேட்டான். அவர்கள் படுகிறவருத்தத்தைப்பார்த்து அவன் மிகவும் மனமிரங்கி, மொஹலாய சக்கரவர்த்திகளுடையவேண்டுகோள் வீணாகுமாமென்றுசொல்லி அவளைக்காவலினின்றும் விட்டுவிட்டான்.

ஆயினும் மொஹபெத்கான் அவளிடத்திற் காட்டிய கொடுமைகள் அவளுடைய மனதினின்றும் நீங்கவில்லை. வெளிக்குமட்டும் அவள் அவனிடத்தில் அதிகநேசம்பாராட்டுகிறவள் போல நடித்துத்தன்னிடத்தில் அவனுக்குச் சிறிதும்சந்தேகமுண்டாகவொட்டாமல் நடந்துவந்தாள்; ஆயினும் ரகசியத்தில் அவனைக்கொல்வதற்கு வழிதேடிக்கொண்டே யிருந்தாள். தன்னுடைய பிரசித்தி எங்கும் பரந்திருக்கிறதென்பதனாலும், சேனைகளெல்லாம் தனக்குக் கைவசமாயிருக்கிறதென்பதனாலும், தன்னுடைய உதாரகுணத்தால் ராஜாவுக்கும் ராணிக்கும் தன்னிடத்தில் மிகுந்த நம்பிக்கை உண்டாயிருக்கிற தென்பதனாலும், மொஹபெத்கான் ஒருவரிடத்திலும் சிறிதும் சந்தேகங்கொள்ளாமல் சாதாரணமாகவே யிருந்தான்.

நூர்ஜிஹான் ஒருவர்க்கும் தெரியாமல் ஆறுமாதகாலம் நன்றாய்ஏற்பாடுசெய்துகொண்டு, ஒருநாள் மொஹபெத்கான் வழக்கப்படி ராஜசபைக்குவரும்போது, போர் வீரர்களைச் சித்தம்பண்ணிவைத்து ஒருநெருக்கமான தெருவில் அவனை இருபுறமும் மடக்கிக்கொண்டு அடிக்கக் கட்டளையிட்டாள். அப்போது அவனுடன்வந்த சேவகர்களெல்லாம் ஆயுதபாணிகளா யிருந்ததனால், அவர்களுடைய சகாயத்தால் அவன்மட்டும் மெல்லத் தப்பித்துக்கொண்டு ஓடிப்போயினான்; இல்லாவிட்டால் அவன் அப்போதே மாண்டு போயிருப்பான். பட்டணத்து ஜனங்களெல்லோரும் வீட்டில் இருந்தபடியே அவர்களைஅடிக்க ஆரம்பித்தார்கள். மொஹபெத்கானுடன் வந்தவர்களெல்லாம் அனேகமாய் மடிந்து போனா

ர்கள். இப்படி அநியாயமாய்த்தனக்குச் சதிசெய்ய நினைத்ததுக ண்டு மொஹபெத்கான் யாரிடத்திலும் மிகக்கோபங்கொண்டான் தான் செய்த முயற்சி வீணுய்ப் போனது மன்றி தன்சூதும்வெளி ப்பட்டுப்போகவே நூர்ஜிஹான் மிகவும்பயந்தாள். ஆகிலும்மொ ஹபெத்கான் மிக்க நல்லவனுதலால் இதுயாரோ சில அற்பஜனங் கள் தெரியாமற் செய்தகாரியமென்று பட்டணத்துப்பெரிய மனி தர்கள் சிலர் போய் வேண்டிக்கொள்ளவே, இது நூர்ஜிஹானு டைய துராலோசனையாய் நடந்த காரிய மென்று அவனுக்கு நன் ருய்த்தெரிந்திருந்தும் தன் கோபத்தை அவ்வளவோடு அடக்கி இ னிமேல் காபூலில் இருப்பதில்லை யென்று மறுநாள் காலையில் அர சனை மட்டும் கூடவே பிடித்துக்கொண்டு லாகோருக்குப் புறப்ப ட்டான்.

பாதிவழியில் போகையில் திடீரென்று ஏதோ ஒருயோசனை தோன்றி மொஹபெத்கான் எல்லாவற்றிலும் நிராசையாய்த் தன் னிட மிருந்த சேனைகளை யெல்லாமொழித்து விட்டு, அரசனையும் சுதந்தரமாய் அரசாட்சிசெய்யும்படிக் காவலினின்றும் விடுதலையா க்கினுன். இந்தநற்குணங்களைப் பார்த்தும் நூர்ஜிஹானுக்கு அவ னிடத்தில் இரக்கமுண்டாகவில்லை; நம்மைக் கொல்லும்படி அரச னைக்கூட மயக்கிக்கொலைசாசனம் பெற்றவனல்லவா என்கிற ஆக்கி ரகம்மாறுமல், அவன்தேசாந்தரம் ஓடிப்போயும் அவனுக்குப் பல விதமாய்ச் சதிசெய்து கொண்டேயிருந்தாள்.

அவள் அப்படிச்செய்வது ராஜா மந்திரி முதலியவர்களுக்கு க்கூட அவள் அப்படி நடப்பது சம்மதமில்லை. மொஹபெத்கானை ப்போலபூததயை பச்சாதாபமுதலிய நற்குணநிறைந்த சூரன் வே றெருவனுமில்லையென்று அவர்களுக்கெல்லாம் நன்ருய்த்தெரியும் பெரும்பகையா யிருந்தகாலத்திலும் அவன் இவர்களைப்பிடித்து அன்புடன் ஆதரித்தானென்ருல் அவனுடைய நன்மனதுக்கு அ தைவிட வேறுதிருஷ்டாந்தமேன் ? மேலும் இவளுடைய பேரா சை இன்னும் எவ்வளவுதூரம் விருத்தியாகுமோவென்று யாவரு ம் பயந்தார்கள்.

பின்பு சிலநாள்கழித்து மந்திரியினுடைய வேண்டுகோளின் மேல், தேசாந்தரத்தில் அல்லாடிக்கொண்டிருந்த மொஹபெத்கா ன் திரும்பிவந்தான். அப்போது அவன், தான்மிகவும் துர்ப்பாக்கி யஸ்திதியிலிருந்தாலும் ராஜ்யக்ஷேமத்தையே முக்கியமாய்க்கரு தி. ஷாஜிஹானுக்கே பட்டம் சூட்டுவிக்க வேண்டுமென்று நூர்ஜி ஹானுடைய சகோதரனை அகிப் என்பவனுக்கு அறிவித்தான். ஹாஜிஹான் தனக்குப்பயந்து வாயுமித்திரனுய மிருந்ததனுல் அ

சிப் வெகுசந்தோஷமாய் அதை அங்கீகரித்தான். ஜிஹாங்கீர் இறந்தவுடனே கூரம் என்னும் அவனுடைய மூன்றுங்குமாரன் ஷாஜிஹானென்னும் பட்டப்பெயர்பெற்றுச் சிங்காசனமேறினான். ஜிஹாங்கீரோடுகூடவே தனக்கிருந்த செல்வாக்கெல்லாம் அடங்கிப்போனதனால் நூர்ஜிஹான் பல்லைப்பிடுங்கினபாம்புபோல் தனது ஆட்டமெல்லாம் அடங்கி, பிற்காலத்தைப் புத்தகமும்கையுமாக வேகழித்து ஜிஹாங்கீர் இறந்துபோய்ப்பதினெட்டுவருஷத்திற்குப் பிறகு லாகோரில் இறந்துபோனாள். உலகமெல்லாம் ஆச்சரியப்படும்படி அரசனையும் உள்ளடக்கிச் சுதந்தரமாய் அரசாட்சிசெய்த சக்ரவர்த்தியின்காலம் இப்படியாகமுடிவுபெற்றது. ராஜாங்கத்தில் அவளுக்கு அவ்வளவுசாய்கால் உண்டானது அரசனுடைய அசாமர்த்தியத்தாலன்று; அவளுடைய நுட்பபுத்தியாலும்விவேகத்தாலும் விடாமுயற்சியாலும் ஆளுகைத்திடத்தாலுமே. இப்போது சிறந்த பரிமளதிரவியமாய் எங்கும் வழங்குகிற பன்னீர் அத்தமென்பது அந்த ஜகஜ்ஜோதிகண்டு பிடித்தது தான்.

## மதிவல்லபன் உத்தியோகசமர்த்து.

தற்காலத்தில் இந்தியாதேசத்திலே சுதேசிகளனேகர் மானிடதேகலக்ஷண சாஸ்திரம் ஸ்தாவரசங்கம் லக்ஷணசாஸ்திரம், மனோதத்துவலக்ஷணசாஸ்திரம், வானசாஸ்திரம், பூகோளசாஸ்திரம், கணிதசாஸ்திரம், பிரிதிவாதிபூதலக்ஷணசாஸ்திரம், ரஸாயனசாஸ்திர முதலிய சகல சாஸ்திரங்களிலும் மஹாபாண்டித்தியமடைந்தும் மிக்க விவேகம்விளங்கப்பெற்றும் தமக்கு உத்தியோகம் அகப்படவில்லையே யென்று நடுக்கடலிற் றிசைதப்பி மயங்கும் மாலுமிபோல் மனம்புழுங்கித்தளர்ச்சி யடைகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் பிழைக்க வகையறியாதவர்கள். ஒருவனுக்கு புத்தி ஒன்றுமாத்திரம் நன்றாய் அபிவிருத்தியா யிருக்குமாயின் அவன் உத்தியோகம் வேண்டுமென்று அலைவது வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கும், ஆற்றில்நின்றுகொண்டு ஜலத்துக்கும் ஏக்கம் அடைதலொக்கும். நமதுநாட்டில் நாற்புறமும் சிதறுண்டு கிடக்கும்பண்டை-துத்தி-சணல்-முதலிய நார், தென்னை-பனை-இவற்றின் மட்டைகள், வாழை முதலியவற்றின்சருகு, பிரம்பு-கருப்பஞ்சொத்தை-மூங்கில்-வைக்கோல்-புல்-பூண்டு முதலியவைகள் அதிக நாணயமான காகிதஞ்செய்வதற்கு உபயோகமாகத்தக்க வஸ்துக்கள் என்பதைமேற்கண்ட பற்பல சாஸ்திரங்களிலும் கல்வியயன்றவர்



அறியார்களோ? நாம் இந்நாட்டில் அணிந்து கொள்ளும் வஸ்திரங்கள் யாவும் இங்கிலாந்திலிருந்து நமக்கும் வருவதை அவர்கள் அறியார்களோ? இந்நாட்டில் பஞ்சு கைகண்ட சரக்காயிருந்தும் நம்முடைய உடைகளை அந்நியநாட்டாரை ஏனோசித்தஞ் செய்ய ஒட்டவேண்டும்? சாஸ்திர உணர்ச்சியும்விவேகவிளக்கமும் ஒருவன் அடையப்பெறுவானாயின், இலேசாய்க் கிடைக்கத்தக்கமேற்கண்டவைபோன்ற வஸ்துக்களைக்கொண்டு மிக்க லாபகரமான வர்த்தகங்களைச் செய்யக்கூடாதா? எழுத்தாணிமாத்திரம் அசைய அரசனிடத்துக் கட்டளைபெற்றுக்கொண்டஒருபுத்திமான் விவேகமொன்றினாலேயே அவ்வரசன் வியக்கும்படி நடந்து கொண்டு பிறகு அவனால் நன்குமதிக்கப்பட்டுப் பெருத்த தனவானான ஒரு சரித்திரத்தை அடியில் எழுதுகிறோம்:—

மாளவம் என்னும் தேசத்தில் மதிவல்லபன் என்னும் பெயருடைய ஒருவன் இருந்தான். அவன் அதி நுட்பபுத்தியும்யுக்தியும் உடையவனாயிருந்தும் காலானுகூலமில்லாமையால் நெடிதுநாள் உத்தியோக மின்றி வறுமையால் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருந்தான். ஒருநாளிரவில் அவன் மனையாள்- பிராணநாதா!

"நெருப்பினுட்டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது."

என்னும் வாக்கியத்தின்படி, இன்றுமுழுதும் ஆகார மில்லாமையால் நம்முடைய குழந்தைகள் நித்திரைசெய்யவில்லை. பசி நோயால் வருந்துகின்றன. இதற்கென்செய்வது என்று மனந்தளர்ந்து கூறினாள். மதிவல்லபன் மனையாளைநோக்கி, பெண்ணே! நான்செய்யாத முயற்சியில்லை, இவ்வூரிலுள்ள பெரிய மனிதர்களிடத்தெல்லாம் நான் பலகாலும்போய்த் திரிந்துவருகிறேன், என்னுடைய காலதுர்ப்பலத்தால் எங்கும் ஒரு உத்தியோகம் கிடைக்கவில்லை, என்னுடைய எழுத்தாணி சற்று அசையமாத்திரம் இடங்கிடைக்குமானால் நாம் தனிகராய் விடலாமே அவ்வளவுக்குக்கூட நல்லகாலம்வாய்க்கவில்லையே, நான்யாது செய்வேன்? என்று சொல்லிக்கொண்டிருக்கையில், அது அர்த்தராத்திரியாகையில் அவ்வூர் அரசன் நகர்சோதனைக்குவந்தான். வந்த அரசன் சுவரடியிலொதுங்கியிருந்து, உள்ளே அவ்விருவரும் பேசிய விஷயங்களை நன்றாய்க் கேட்டறிந்து தன்னரண்மனைக்குப் போய்விட்டான் மறுநாள் அரசன் தன் சேவகர்களால் அந்த மதிவல்லபனை அழைப்பித்து, நீ நேற்றிரவில் உன் எழுத்தாணிசற்றே அசையவும் இடங்கிடைக்கவில்லை யென்றல்லவா? உன் மனையாளுடன் சொல்லி வியசனப்

பட்டாய்? நான் உனக்கோருத்தியோகத்துக்குக்கட்டளை தருகி றேன். ஆனால் அவ்வுத்தியோகத்தினால் உன் எழுத்தாணிமாத்திர ம் அசையுமேயன்றி உனக்கொன்றும் சம்பளம் கிடைக்கமாட்டா து. அதற்குச்சம்மதமாயின் என் இராணுவத்திலுள்ள யானைகள் குதிரைகள்-ஒட்டகங்கள். ஆடுமாடுகளில் ஒவ்வொன்று நாடோ றும் எவ்வளவு இலத்தியும் சாணமும் புழுக்கைகளும்போடுமோ அவைகளுக்கு நீ தனித்தனிகணக்குவைப்பதினாலே உன் எழுத் தாணியை ஓயாமல் அசைத்துக்கொள்ளலாம் என்றுசொன்னான். மதிவல்லபன் அதற்கிணங்கி மஹாராஜனை வணங்கி கட்டளைப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு திரும்புங்காலையில் அவ்வூரிலுள் ள ஒருதனவானிடஞ்சென்று, நிகழ்ந்த சங்கதியெல்லாஞ்சொல் லி அக்கட்டளைப்பத்திரத்தையும் அவனுக்குக் காண்பித்து ஆறு மாதத்தவணைக்கு அவனிடத்தில் ஆயிரம்வராகன் கடன்வாங்கிக் கொண்டு தன்வீட்டுக்குவந்தான். உடனே மதிவல்லபன் குடிக் கூலிக்கு ஒரு பெரியவீடுவாங்கி நல்ல ஆடையாபரணங்கள்பூண்டு சொந்தவாகனமும் வைத்துக்கொண்டான். அதனால் பலஜனங் களும் அவனை நன்கு மதித்துச் சதா அவனைச்சூழ்ந்திருக்கும்படி இடமுண்டாயிற்று. "கைத்துடையான் காற்கீழொதுங்குங்கடன் ஞாலம்." என்னும் உண்மை யனுபவவாக்கியம் அவனிடத்தில் திருஷ்டாந்தமாய்விளங்கியது. பின்பு அந்தமதிவல்லபன் அப்பட் டணத்தில் உத்தியோகமில்லாதவர்களுட் சிலரை அழைப்பித்து, தான் அரசனிடத்தில்பெற்ற கட்டளைப் பத்திரத்தை அவர்கட்குக் காட்டி, தனக்குக்கிடைத்த இப்பெரியஉத்தியோகத்துக்குச் சும் பிரதி-கணக்கப்பிள்ளை-சேவகர்முதலிய கீழிட்ட உத்தியோகஸ் தர்கள் சிலர் வேண்டியதென்றும், அந்தப்படிஉத்தியோகத்துக்கு வருபவர்கள் மூன்றுமாதகாலம் வரையில் சம்பளமில்லாமல்வேலை செய்ய வேண்டியதென்றும், பிறகுதகுந்த சன்மானம் அளிக்கப் படுமென்றும் சொல்லி சிலரைத்தன் கீழ் உத்தியோகஸ்தர்களாக வைத்துக்கொண்டான். அப்பால் மதிவல்லபன் அக்கீழ் உத்தி யோகஸ்தர்களை யனுப்பி இராஜனுடைய யானைப்படை-குதிரைப் படை முதலியவற்றிற்குத் தீனிமுதலியனவிசாரணைசெய்யும் அதி காரிகளை அழைப்பித்தான். அவர்கள்வந்து மதிவல்லபனைக்கண்டு வணங்கிநின்றார்கள். மதிவல்லபன் அவர்களைநோக்கி, நீங்கள் நெ டுங்காலமாய் இவ்வுத்தியோகத்தில் மிகுந்த ஆதாயம் அடைந்து வருகிறீர்களென்பதை நான் நன்றாய் அறிந்திருக்கிறேன். நாளை யத்தினம்-யானைக்கூடம்-குதிரைலாயம்-மாட்டுத்தோழம்-ஆட்டுப் பட்டி முதலிய இடங்களைப் பரிசோதனைசெய்யநான்வருவேன், நீங்கள் யானை குதிரை முதலானவை இடுகிற இலத்திகள்-சாண

முதலியவற்றை வாராமலும் ஒன்றுடன் மற்றொன்றைக் கலக்காமலும் போட்டது போட்டவண்ணம் அங்கங்கே இருக்கும்படி பரமஜாக்கிரதையாய் வைத்திருங்கள் என்று வற்புறுத்தி அனுப்பினான். அவர்கள் அவ்வாறே செய்து யாது விளையுமோவென்று காத்துக் கொண்டிருந்தார்கள். மதிவல்லபன் மறுநாட்காலையில் தன் சிவிகையின்மேலேறிக்கொண்டு, சேவகர்களும் சம்பிரதிகளும் கணக்குப்பிள்ளைகளும் தன்னைச்சூழ்ந்துவர, முக்கோணம்தராசு நிறுக்குங் குண்டுகளுடன் அவ்விடஞ்சென்று, அவைகளைத் தனித் தனிநிறுத்து, ஒருதரத்துக்கிவ்வளவு எடையானால் ஒருநாளைக்கு இத்தனை தரத்துக்கிவ்வளவென்றும், ஒரு மாதத்துக்கு இவ்வளவென்றும், இதனால் ஒரு மிருகம் மாதாந்தரம் தின்னும் தீனிஇவ்வளவென்றும்; அதற்கு விலை யிவ்வளவென்றும், கணக்கிட்டான். பிறகு மதிவல்லபன் அந்த அதிகாரிகளை நோக்கி நீங்கள் யானை குதிரை-ஆடு மாடுகளுக்கு மாதாந்தரம்கொடுக்கும் தீனிகளுக்கும் வைக்கும் கணக்குகளுக்கும் உள்ள வித்தியாசங்களையும நான் பரிசோதனைசெய்யவேண்டியிருக்கிறது, நல்லது, நீங்கள் போங்கள் என்று அவர்களைப் பயமுறுததி அனுப்பிவிட்டான். அவர்கள் நெடுங்காலமாய் அரசன் அந்தப் பிராணிகளுக்காகக் கொடுத்து வரும் தீனிகளில் சிலவற்றைத் திருடிமிகுந்த ஆதாயம் அடைந்து வந்தவர்களானபடியால் உள்ளங் கலங்கி.

“ ஆற்றங்கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்தவாழ்வும் விழுமன்றே.,,

என்னும் உண்மை வாக்கியத்தின்படி; நம்முடைய புரட்டுக் கணக்கை, அரசனறிந்தால் ஆபத்து விளையுமே யென்றஞ்சி, பை பையாகப் பணமும், இனிமேலடையும் ஆதாயத்தில் மதிவல்லபனுக்குக் கொடுத்தார்கள். உடனே ஒருநாள் அரசனிடத்தில்மதிவல்லபன் தனியேசென்று அவனுடைய ஊழியக்காரர்கள் நெடுநாளாய் இராஜத் துரோகம் செய்துவந்த விஷயத்தை, அவர்கள் தனக்கெழுதிதந்த உடன் படிக்கையின்படி அளித்த இலஞ்சத்தொகைகள் முதலியவற்றையே சாட்சியமாகக்காட்டி அரசனுக்கு நிரூபித்தான். இதைக்கண்டு அரசன் அவ்வூழியக்காரர்களைத் தக்கவாறு தெண்டித்து மதிவல்லபனுடைய விவேகத்தைப் பலகாலும் வியந்து அவன் கடன்வாங்கியிருந்த தொகைக்கு இரட்டிப்பு அவனுக்கு வெகுமானங் கொடுத்ததுமன்றி அவனுடைய கீழ் உத்தியோகஸ்தர்களுக்கும் வேண்டியமட்டில் பொருள்தந்தான்.

இன்னும் இவனுடைய மதிவிளக்கத்தைச் சோதிக்கவேண்டு மென்று கருதி, பொருள் வரவுக்குச் சிறிதும் இடமில்லாத வே ருெரு உத்தியோகத்தை இவனுக்குக் கொடுத்து, இதில் இவனு டைய அறிவின் சாமர்த்தியத்தைப் பார்ப்போம் என்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டு மதிவல்லபனே! இப்போ திருக்கும் உத்தி யோகத்தை யொழித்து வேருென்று நான் உனக்குக் கட்டளை யிடுகிறேன், அதிலும் உனக்குச்சம்பளங்கிடையாது, உன் எழுத் தாணியை மாத்திரம் நீ ஓயாமல் அசைத்துக் கொள்ளலாம், அது யாதெனில் நம்முடைய அரண்மனை வாசலில் கட்டியிருக்கும் மணியைக் காலக்கிரமப்படி அடித்து அதனை ஏட்டில் அப்போ தைக்கப்போது இத்தனையென்று எழுதிக்கொள்வதினுல் உன் எழுத்தாணியை நீ அசைத்துக் கொள்ளலாம் இவ்வுத்தியோகத் தை இன்றுமுதல் பார்த்து வருவா யென்று அரசன் மதிவல்ல பனுக்குக் கட்டளைப்பத்திரங் கொடுத்தான். மதிவல்லபன் அரசனை வணங்கி அதனையேற்றுக்கொண்டு வந்து அன்று முதல் அவ்வுத்தி யோகத்தைப் பார்த்துவந்தான். அதில் அவனுக்கு ஒருகாசளவும் பயன் கிடைக்க வில்லை. அதற்குமேல் அவன் அரசனுடைய தேவி மார்கள் ஐந்துபேரில் ஒருத்தியிடத்திலுள்ள தாதியை வரவழைத் து நான் உன் எஜமாட்டியிடத்தில் அரசன் இரவில் நாடோறும் வருங்காலத்துக்குச் சற்று முன்னுகவும், இருந்து மற்ருெருதேவி வீட்டுக்கும் போவதற்குச் சிறிதுகாலம் பின்னுகவும் மணியடிக்கி றேன். அந்தப்படி செய்வதனுல் ஏனைய நாயகிமார்களிடத்தில் இருப்பதைவிட உன் தலைவியினிடத்தில் அரசன் அதிகநேரம் இருந்து சுகிப்பதற்கு இடமிருக்கும், நான் மணியை அடித்தாலல் லவா அவளைவிட்டு மற்ருெரு நாயகியினிடத்தில் அவரெழுந்து போவார்? நீ உன் எஜமாட்டி யிடத்தில் இது விஷயத்தைப் பற் றிச் சொல்லி எனக்கேதேனும் பொருளாதாயம் உண்டாக்கினுல் உனக்கு நான் அதிற்சிறிது தருகிறேன் என்றுசொன்னுன். மதி வல்லபன் இச்சங்கதியைச் சொன்னநாள் முதல் அவ்வாறே மணி அடித்து வந்தமையால், அரசன் அந்தத் தேவி வீட்டுக்குப்போயி ருக்குங் காலம்முன்னிலும் சிறிது அதிகமாயிருந்து நாளுக்குநாள் பின்னும் கொஞ்சம்அதிகரித்து வந்தது. இதனுல் அரசன்மற்றைத் தேவிமார் வீட்டிலிருப்பதைப் பார்க்கிலும் இங்கு மிகவும் அவ காசமாயிருக்கும்படி நேரிட்டது. அக்காரணத்தால் அரசனுக்கு அந்தத்தேவியிடத்தில் அதிக பிரீதி உண்டானமையால், அவள் மணி அடிக்கும் மதிவல்லபனுக்கு வேண்டியபொருளும் விலையுயர்

ந்த ஆடையாபரணங்களும் வெகுமான மளித்து வந்தாள், சில வருடங்கள் பொறுத்துப் பொறுத்து மதிவல்லபன் மற்றைத்தேவி மாரிடத்தும் அவ்வாறே நடந்து அவர்களுக்கும் அப்படியே அனு கூலங் காட்டி அவ்வவரிடத்திலும் வேண்டிய சன்மானங்கள்பெற் றுவந்தான் சில வருடங்களுக்குள் மதிவல்லபனுக்கு அளவிறந்த பொருள் சேர்ந்தமையால் அவ்வூரிலுள்ளார் யாவரும் தன்னை இர ண்டாவது அரசனாய் எண்ணும்படி பெரிய சீமானாக வாழ்ந்துவந் தான். இப்படி யிருக்குங்காலத்தில் ஒருநாள் அப்பட்டணத்திலு ள்ள கனவான் ஒருவன்வீட்டில் ஒரு கலியாணம் நடந்தது. அக் கலியாணத்துக்கு அலங்கரித்திருக்கும் இரத்தினா பரணங்களில் மிகுதியானவைதன்னுடைய நகைகளா யிருக்கக்கண்டு, அரசன் சந்தேகித்து அவ்வீட்டுக்கு உடையானைத் தனியே அழைத்து, இரண்டொருநகைகளைச்சுட்டி இவை என்னவிலை யென்றுகேட்க அவன் மஹாராசனே! இவை உம்முடைய அரண்மனை வாசலில் மணியடிக்கும் மதிவல்லபனுடையவை. நான் என்வீட்டுக்கலியா ணத்துக்கு இரவலாகவாங்கிவந்தேன், ஆகையால் அவற்றின் விலை எனக்குத்தெரியாதென்று கூறினான். அரசன் தன் அரண்மனைக் குச்சென்ற பிறகு மதிவல்லபனை அழைத்பித்து, நேற்று நான் இன்னகனவான் வீட்டுக்கலியாணத்துக்குப்போயிருந்தேன் அப் பெண்ணுக்குப்பூட்டியிருந்த சில இரத்தினாபரணங்கள் மிக்கவிலை யுயர்ந்தவையாயிருந்த படியால், அவற்றின் விலை யென்னவென்று அக்கனவானைக்கேட்டேன், அவன் உனக்குத்தெரியுமென்று சொ ன்னான், ஆகையால் அக்கனவானுக்கு நீ இரவல் தந்தநகைகளில் இரத்தின ஜடைப்பில்லை நீ யென்னவிலைக்கு வாங்கினாய்? என்று கேட்டான். மதிவல்லபன் அரசனைவணங்கி, மஹாராஜாவே! வீட் டுக்குப் போய்வரும்படி அடியேனுக்கு உத்தரவளித்தால் உடனே திரும்பிவந்து சொல்லுகிறேன் என்று அரசனிடத்தில் விடை பெற்றுக்கொண்டு தன்வீட்டுக்கு விரைந்து சென்று, தான் அரசன் தேவிமார்களிடத்தில் பரிசாகப்பெற்ற ஆடையாபரணங்க ளெல் லாவற்றையும் கொண்டுவந்து அரசன் முன்புவைத்து வணங்கி எழுந்துநின்று அவை தனக்குக் கிடைத்த வரலாற்றையெல்லாம் சிறிதும் ஒளிக்காமல் கூறி இவை எல்லாம் உம்முடைய தாகையால் தேவரீர்க்கே யன்றி அடியேனுக்கு இவற்றின் விலை இலேசமும் தெரியாது என்றுசொன்னான். இராஜன்,

"ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி."

என்றபடி, இவன் தன்னுடைய சோர்விலா முயற்சியாலும் புத்தி விசாலத்தாலும் தன் குடும்பத்தை விருத்திசெய்து அதிபிரபலமாயினனல்லவாவென்று அவனுடைய புத்தி சாமர்த்தியத்துக்காகவியந்தான்; அன்றியும் எவருக்கும் தீமையில்லாமல் இவன் வெகுமானமாகப் பெற்ற பொருள்களையெல்லாம் மறைக்காமல் கொண்டுவந்து காட்டி ஆதியோடந்தமாக உண்மையை உரைத்தானேயென்று மகிழ்ந்தான்.

அரசன்-நல்லது, இன்னுமொருதரம் இவனைச்சோதித்துப்பார்ப்போம் என்று தனக்குள் யோசித்து, மதிவல்லபனை நோக்கி, நீ நம்முடைய ஆளுகைக்குட்பட்ட எல்லாத் தேசங்களிலுஞ் சென்று அங்கங்குள்ள மனிதர், விலங்கு, புள்முதலியவற்றில் ஆண் இத்தனை, பெண்இத்தனையென்றும், மரம் மலை இத்தனையென்றும் கணக்கெடுத்து ஒவ்வொவ்வொன்றின் மொத்தம் இவ்வளவு என்று சொல்லவேண்டும், இவ்வுத்தியோகத்திலும் உனக்குச் சம்பளங்கிடையாது, உன் எழுத்தாணியைமாத்திரம் ஓயாமல் அசைத்துக்கொள்ளலாம் என்று கட்டளையிட்டனன். அதுகேட்டமதிவல்லபன் அரசனைவணங்கி மஹாராஜனே! அடியேன் தேவரீர்கட்டளையைச் சிரமிசைவஹித்துச்செய்வதற்கு யாதும்தடையில்லை, அப்படியே செய்கிறேன் என்று அரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டான். மறுநாள் சிலசிப்பந்திகளோடும் ஒரூருக்குச்சென்று, அங்கு ஒருவீட்டிலுள்ள மனிதர் ஆடு, மாடு, கோழி, முதலியவற்றின் கணக்கெடுக்கப் போனான். அவ்வீட்டார் பயந்தோடிவந்து மதிவல்லபனைநோக்கி, ஐயா! இதுவரையிலும் செய்யாத இக்காரியத்தை இப்போது அரசன் செய்வதற்குக்காரணம்யாது? சற்றேதயைசெய்து சொல்லவேண்டும் என்று மதிவல்லபனை வேண்டிக்கொண்டார்கள். அவன் இதுராஜாங்கரகசியமாதலால் ஒருவருக்கும் தெரிவிக்கக் கூடாது என்று கூறினன்.

இக்குடிகள் யாவருக்கும் எவ்வித துன்பமும் நேரிடா வண்ணம் அவர்களுடைய உயிரைத்தன்னுயிர்போல் பாதுகாத்துவரும் அரசனிடத்து இவர்களுக்கு எவ்வளவு விசுவாச மிருக்கிறதோ பார்ப்போம், வேற்றரசன் படை எடுத்துவந்தால் இவர்கள் உண்மையில் தங்களுடைய அரசனுக்காக அமர்க்களத்திலிருந்து உயிர் விடுவார்களா, அல்லது அந்தருணத்தில் அவனை வஞ்சிப்பார்களா இதைக் கண்டறிவோமென்று அவர்களைப்பார்த்து, நீங்கள் இவ்விஷயத்தை வேறொருவர் செவியிலும் போடக் கூடாதென்று வற்புறுத்தி அடியில்வருமாறு சொல்லத் தொடங்கினன், நம்முடைய

அரசனோடு அந்நியதேசத்தரசன் ஒருவன்நாலுமாதத்திற்குப்பின் யுத்தத்துக்கு வருவதாகக்கடிதம் அனுப்பியிருக்கிறான்.

"அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்."

சேனைக்குப்போர் செய்யும் சௌரியமும், பகைவர் மேல்வந்தெதிர்த்தால் தாங்கும்வலிமையும் இல்லாவிட்டாலும் பெருங்கூட்டமாகியதோற்றப் பொலிவால் பெருமையுண்டாகுமாகையால், நம்முடைய அரசன் தன் ஆளுகைக்குட்பட்ட தேசங்களிலுள்ள எல்லா ஆண்பிள்ளைகளும் அக்காலத்தில் ஒருவர்தவறாமல் யுத்தத்துக்கு வரவேண்டுமென்றும், பெண்கள்யாவரும் இராணுவத்துக்கு வேண்டிய போஜனாதிகளையு பாகஞ்செய்யவேண்டுமென்றும், ஆடுகோழிகள் முதலியவை ஆகாரத்துக்கு உபயோகப்பட வேண்டுமென்றும் ஒன்றுவிடாமல் கணக்கெடுத்து மொத்தம்காட்டுபடி கட்டளையிட்டனன் என்று சொன்னான். அவர்கள் யாவரும் மனங்கலங்கி, மதிவல்லபனைத் தனியே அழைத்துக் கொண்டுபோய், எங்கள் வீட்டுக்கணக்கை உம்முடைய ஏட்டில் பதியாமல் விட்டுவிட்டால் உமக்குமாதாந்தரம் இவ்வளவுதொகைதருகிறோம் என்று அவனுடன் ஏற்பாடு செய்து கொண்டார்கள். இவ்வாறே ஒவ்வொருகிராமத்திலுஞ்செய்து அங்கங்குள்ள ஆண்-பெண்-கால்நடைகள்முதலியசராசங்கள் யாவற்றையும் கணக்கெடுத்துவருகையில் இராஜவிசுவாசமுள்ளவர்கள் இன்னார் இன்னாரென்பதையும் விசுவாசமற்றவர்கள் இன்னார் இன்னாரென்பதையும் ஏட்டில் குறிப்பிட்டுக்கொண்டான். இன்னும் சில குடிகள் உள்ளபடி கணக்கைக் கொடுத்து விட்டார்கள். இப்படி யிருக்கையில், அரசன் ஒருநாள் மதிவல்லபனையழைப்பித்து, நாம் சொன்னபடி ! கணக்கெடுத்து முடிந்ததா? என்றுகேட்டான், மதிவல்லபன் அரசனைநோக்கி, மஹாராஜனே ! பறக்கும்பட்சிகளை யெல்லாம் ஒன்று விடாமல் கணக்கெடுத்து விட்டேன். காக்கைகளில் ஆண் இரண்டுலக்ஷம் பெண்இரண்டரைலக்ஷம். முட்டை யுருவாயிருப்பவை ஒருலக்ஷம் என்று அப்பால் சொல்லிக்கொண்டேபோனான். அரசன் நல்லது, அது இருக்கட்டும் மனிதர்களுள் ஆண் பெண் எத்தனைஎன்று கேட்டான். மஹாராசனே அதில் ஒரு தீராச்சந்தேசம் வந்திருப்பதால் அதன்பொருட்டு உம்முடன் தனியே யோசித்துச் செய்யவேண்டுமென்று விட்டிருக்கிறேன்என்றான். அரசன் அவனைத் தனியேஅழைத்துக்கொண்டுபோய் அச்சந்தேகம் யாதெனவினவ; மகாராசனே

உம்முடைய தேவிமார்களில் பாண்டியன் புத்திரி ஆனோ பெண்ணே? தெரிவித்தால் உடனே கூட்டி மொத்தம் தைத்துச் சொல்லுகிறேன் என்று கூறினான். பாண்டியன் புத்திரி அலியென்றுதன் ஒருவனுக்கு மாத்திரம் தெரியுமேயன்றி மற்றைத் தேவிமார்களுக்கும் இது விஷயம் தெரியாதாகையால் அரசன் மிகவும் நாணமுற்று இவன் கணக்கு முழுதும் சரியாகவேயிருக்குமென்று தனக்குள்ளே தீர்மானித்து அவனுடைய புத்தி பலத்துக்காக அதிக சந்தோஷங்கொண்டான். அப்போது மதிவல்லபன் அரசனைநோக்கி மகாராசாவே! நான் தேவரீருடைய கட்டளையின்படி கணக்கெடுத்து வருகையில் ஒரு அருமையான சங்கதி தெரியவந்தது. அது யாதெனில், தேவரீருடைய அரசாட்சிக் குட்பட்ட குடிகள் யாவரும் இராஜவிசுவாச முள்ளவர்களாக எண்ணவேண்டாம். வேற்றரசர் படையெடுத்துவர நேரிடுமாகில் தேவரீருடைய குடிகள்தின்னபடி ஒழுகுவார்களென்பதை இப்போதே அறிந்துகொண்டு அதற்கேற்றபடி நீங்கள் முன்னெச்சரிக்கையோடிருக்க வேண்டியதல்லவா? என்றுகூறி, இன்னின்ன கிராமத்தில் இன்னின்னகுடிகள் விசுவாச மற்றவர்களென்பதை அக் குடிகளின் வாய்மொழியைக் கொண்டே மெய்ப்பித்தான். தன் குடிகளின் பலாபலத்தை அறிந்துகொண்டிருப்பது அரசனுக்கு அத்தியாவசியமானபடியால்மதிவல்லபனுடைய தந்திரத்தை அரசன் வியந்து, இவன்உண்மையானவனும் மிக்க சாதுரியமுள்ளவனும் என்பதற்கு யாதும் ஐயமில்லை. இவனுக்கு எவ்வளவும் வரும்படியற்றதும் கஷ்டமானதுமான தொழில்களைக் கொடுத்தாலும் அவற்றிலெல்லாம் இவன் விவேகத்துடன் பிரவர்த்திப்பதுமன்றி நமக்குப்பெருத்தசலகரணைகளைக் காட்டுகிறான். இப்படிப்பட்ட ஒருவன் நம்மிடத்தில் இருந்தால் நமக்குப் பல ஆதாயவழிகளைக்காட்டி ராஜ்ய காரியத்துக்கும் மிக்க அனுகூல முள்ளவனுயிருப்பானென்று துணிவுகொண்டு மதிவல்லபனைத் தன்னிடத்தில் மந்திரியாக வைத்துக்கொண்டான்.

ஆகையால் விவேகவிளக்கம் ஒன்றைமாத்திரம் ஒருவன் தன் கைப்பொருளாகப் பெற்றிருப்பானுயின் எவ்வகையாலும் அவன் பிழைக்க வகைதேடிக்கொள்ளலாம். உத்தியோகம் நமக்கு அகப்படப்போகிறதில்லையேயென்று கருதி விவேகத்தை அபிவிருத்திசெய்வதற்கேதுவாகிய கல்வியை அனேகர் கைவிடுகிறார்கள். இதுபெருந்தவறு.

என் அன்புக்குரிய நாதா!

மேலெடுத்துக்காட்டப்பட்ட மதிவல்லபனுடையசரித்திரத்தை வாசித்துப் பொய்யுரைத்து ஒருவன் தன்மதிவல்லபத்தைக்காட்டு

வதும் முறையோ? என்றுகேட்கலாகாது. ஏனெனில், அவன்எழு த்தாணி சற்றுஅசைய இடங்கிடைக்குமானல் போதுமென்றுசொ ன்னவார்த்தையை அரசனுக்கு மெய்ப்பிக்கவேண்டுமென்னும்ரோ ஷத்தினுலும், குடிகளுக்குள்ளே இன்னர் இன்னர் இன்னின்ன நி லைமையி லிருக்கிறர்களென்பதை அரசனுக்குக் காட்டவேண்டிய தென்னும் நல்ல எண்ணத்தினுலும் அத்தகையதந்திரங்களேஅவன் அனுசரித்தானேயன்றி அரசனே வஞ்சிக்கவேண்டுமென்கிற துர்எ ண்ணம் அவனுக்கு எவ்வளவுங்கிடையாது. மேற்கண்ட பற்பல த ந்திரங்களே அவன் அனுசரித்தானேயாயினும் ஒவ்வொரு தடவை யிலும் ஒன்றையும் அவன் ஒளியாமலும் அரசனுக்குவஞ்சனைசெ ய்யாமலும் நடந்துவந்ததைத் தேவரீர் கவனித்தல்வேண்டும்அதற் காகவே அரசன் அவனேவியந்து தனக்கு அமைச்சனுக்கிக்கொண் டனன். என்று புஷ்பவேணி தன் கணவனுகிய வல்லாளனுக்குஎடு த்துக்காட்டி மீண்டும் சொல்லத்தொடங்கினுள்.

---

## புஷ்ப்பாவதி.

[அதிர்ஷ்டவசத்தின் அமைப்பு.]

முற்காலத்தில் நரபாலபட்டணத்தில் சோமன்என்னும்பெயரு டைய ஒருதையற்காரனிருந்தான். அவன் நன்னடக்கையும் இடை விடாமுயற்சியுள்ளவன்,பேராசைஎன்கிறபயித்தியம்பிடித்து அலே யாமல்தனதுதேகசிரமத்தினுல் என்னகிடைக்கிறதோ அதைக்கொ ண்டுதிர்ப்தியடைந்து உலகநிந்தைக்குஆளாகாதபடி நாணயமாய்ப் பிழைத்துக்காலத்தைகழிப்போமென்றமனமுள்ளவனுயிருந்தான் அந்தஎண்ணம் நிறைவேறவொட்டாமல் அவன்பெண்சாதி அதற்கு இடையூறுகநின்றுள். மிகவுமழகுபொருந்திய புஷ்பாவதிஎன்னும் அந்தப்பெண் அவன்தையல்வேலைசெய்கிறவனென்று தெரிந்து பூரா ணசம்மதியோடு அவனேமணம்புரிந்திருந்தும்அவன் அற்பவேலைசெ ய்துவருவது அவளுக்குச்சுத்தமாயிஷ்டமில்லே ஆகையால்மிக்க ஐ சுவரியமும் பெரியஅந்தஸ்தும்சம்பாதிக்கவேண்டியது அவசியமெ ன்று தன்புருஷனிடங்கூறி அதற்காகவேண்டியபலஉபாயங்களேயு மவனுக்கு அடிக்கடிபோதித்துவருவாள். அவனும் அவள்மேல்ஆ சையுள்ளவனுகையினுலே அவள்சொல்லுக்கு எதிருரையாமல்அ வள்என்னசொன்னபோதிலும் சிரித்துத்தலையாட்டுவான், அவள்

மாத்திரம் பணம் பணம் என்கிற பேச்சைவிடாமல் எப்பொழு தும் துராசைபிடித்தவளாயிருந்தாள்.

இப்படியிருக்க புஷ்ப்பாவதி ஒருநாள் சாயங்காலம் ஒருபெ ண்பிள்ளை கண்ணைப் பறிக்கத்தக்க ஆபரணங்களணிந்து திவ்யமா ன ஆடையுடுத்து, பின்னுமுன்னும் தன்னைச் சேவகர் புடைசூழ் ந்து உலாவி வருவதைக்கண்டாள். தனக்கும் அவ்விதமான உயர் ந்த பதவிகிடைத்து தானும் அப்படியே ஜம்பமாயிருக்கவேண்டு மென்கிற ஆசை அவளுக்கு வெகுநாளாய் உண்டாயிருந்த படி யால், அந்தப்பெண் யாரென்று ஆவலோடு விசாரித்து அவள் இ ராஜ ஜோதிஷனுடைய மனைவியென்று தெரிந்துகொண்டு வீட்டு க்குவந்தாள். வழக்கம்போல புருஷனைக்கண்டால் சிறித்தமுகமா யிராமல் அன்றைக்கு அவனைக்கண்டவுடன் முகத்தைச் சிடுசிடு வென்று வைத்துக்கொண்டு, அவன் எவ்வளவுநல்ல வார்த்தை சொல்லியும் ஒருபேச்சுக்கூடப்பேசாமல், சில நாழிகைபரியந்தம் சும்மாவிருந்து, கடைசியில் அவனை பார்த்து வீணே இனிய பே ச்சுகள் பேசுவதில் என்னபயன்? வாய்க்குக் கேடுதானே. என்னி டத்தில் உமக்கு உள்ளன்பிருந்தால் அதற்கு அடையாளமெங்கே என்றாள். அதற்கவன் நீ என்ன அடையாளம் வேண்டுமென்கிறாய்? நான்எதைக்கொடுக்க மாட்டேனென்றேன் என்று சொல்ல, அவ ள் நீ செய்யும் தையற்றொழிலை விட்டு விடு; அவ்வற்பவேலையினால் என்னலாபம் கிடைக்கிறது. உடனே ஜோதிஷனாகிவிடு. உனக்குப் பொருள் எதேஷ்டமாகக்கிடைக்கும். நானும் சௌக்கியமாய் வா ழ்வேனென்றாள். புருஷன், ஜோதிஷ சாஸ்திரிக்கு எவ்வளவோ வித்தையும் திறமையும் வேண்டியதாயிற்றே! நிரக்ஷர குக்ஷியா கிய நான் என்னமாய் ஜோதிஷன் ஆவேன் என்று தடுத்துச் சொ ன்னதன்மேல், "அதெல்லாம் எனக்குத்தெரியாது. நீ ஜோதிஷன் ஆகத்தான்வேண்டும். அங்ஙனம் ஆகாவிடில், நாளைக்கு நான் உன் னைவிட்டுப் பிரிந்தோடிப்போவேன்" என்றுபயமுறுத்தினாள். அ வள் அப்படிப்பிடிவாதம் செய்கிறது தக்கதென்றென்று புருஷன் நல்லதனமாய்ப் பலவாறு சொல்லியும், "செவிடன் காதிற்சங்கு ஊதினது" போலப்புஷ்பாவதியிடம் பயன் படாமற்போயிற்று. இராஜஜோதிஷன் பெண்சாதி நகைகள்போட்டுக் கொண்டிருப்ப தும், பலவேலைக்காரர்கள் பயபக்தியோடு அவளைச்சூழ்ந்துநின்று ஏவல்புரிவதும், அவளைப்போலவே தானுமாக வேண்டுமென்றும், அத்தகைய சுகத்திலிருத்தற்குச் செல்வம் வேண்டுமென்றும், அச்செல்வத்தை நமது புருஷனைக்கொண்டே சம்பாதிக்கவேண்டு மென்றும் தன்மனதில் அழுந்த வைத்தாள். இந்த எண்ணத்தை

த்தவிர அவளுக்கு வேறு சிந்தையில்லை. அன்றிரவெல்லாம் அப்படிக் கனவுகாண்பதிலேயே கழிந்துபோயிற்று. மறுநாட்காலையில் எழுந்திருந்து உடனே தன்கணவன் தன் இஷ்டப்படி நடக்கச்சம்மதியாமற்போனால் தான் வீட்டைவிட் டோடிப்போவதாகக் கூச்சலிட்டாள். தையற்காரன் என்னசெய்வான் பாபம்? அவ்வளவு அழகானபெண்சாதியைவிட்டுவிடவும் அவனுக்குமனம்வரவில்லை. ஜோதிஷமுந்தெரியாது. ஆகிலும் ஒருகை பார்ப்போமென்று ஒப்புக்கொண்டு தனக்குள்ள அற்பப்பொருள்களையும் விலையாக்கித் தேவையான ஜோதிஷ புஸ்தகங்களை வாங்கிக்கையில் வைத்துக்கொண்டுபுறப்பட்டுத்தெருவேபோய் நான்ஜோதிஷன்: நான்ஜோதிஷன்; எனக்குக்கிரகங்கள்முதலானவை தெரியும்; நடந்தசங்கதி, நடக்கப்போகிற சங்கதியாவும் நான் சொல்லுவேன் என்று எல்லோருக்கும் தெரியும்படியாக அறிக்கையிட்டான். ஊரார் எல்லோருக்கும் சோமனென்பவன் தையற்காரனென்று நன்றாய்த்தெரியும். ஆகையால் அவன் ஜோதிஷன் என்று கூச்சலிட்டுக்கொண்டு போவதைக்கண்டு அநேகர் ஆச்சரியமடைந்து அவனைப் பார்த்து, உனக்கென்னபைத்தியம்பிடித்ததாவென்று, ஒருவன் தலைகுனிந்து வேலைசெய்வதைவிட்டுஆகாயத்தைப்பார்க்க தலைப்பட்டையாவென்றும் இப்படி நானுவிதமாய் அவனைப்பரிகாசம் பண்ணத்தொடங்கினார்கள். தன்னுடைய அழகான பெண்சாதிக்குத் திருப்திகரமாய் எப்படிப்பட்டகாரியத்தையும் செய்யத்துணிந்த அந்தத்தையற்காரன் யாரென்னசொன்னாலும் சொல்லட்டுமென்று சும்மாவிருந்தான்.

அரசனுடைய தனாதிபதி மிகவும் விலையுயர்ந்த ஒருமாணிக்கம் களவுபோய் மனவருத்தமுற்று, இச்சங்கதி அரசனுக்குத்தெரிந்து போனால் நம்மை சிரசாக்கினைசெய்துவிடுவாரோ என்று பயந்து, தன்னாலானமட்டும் அதைக்கண்டுபிடிக்க முயல்வதே சரியென்று தீர்மானித்துத்தற்செயலாய்ச்சோமனென்பவனைச்சுற்றி கும்பல் கூடியிருந்த வழியாகப்போய் அக்கூட்டத்து ளொருவனை இக்கூட்டம் கூடியிருத்தற் கென்னகாரணமென்று வினவினான். மற்றவன் சோமனென்னும் தையற்காரனொருவனிருந்தானே அவனிப்போது தெய்வீகஞான மடைந்து ஜோதிஷனாக மாறியிருக்கிறானென்றான், அதைச்செவியுற்ற அந்தனபாலகன் மாணிக்கம்போனவிஷயத்தைக் கேட்போமென்று ஜோசியனைக்குறுகி நடந்த சங்கதிகளைக்கூறி நீர் உம்முடைய சாஸ்திரவல்லமையால் மாணிக்கம் போனவழிதெரிந்து சொல்வீரானால் 200-வராகன் வெகுமதிதரு

கிறேன். 6-மணி நேரத்திற்குள் சொல்லத் தப்புவீரானால் வேஷம் போட்டுக்கொண்டு ஜனங்களை ஏமாற்றிவருவதாக அரசனிடம் தெரிவித்துசிரசாக்கினை செய்விப்பேன் என்று சொல்லி அத்தன பாலன் சென்றான். அதைக்கேட்டவுடன் நாடியற்று, ஆவுயொடிங்கி, பெருந் திகிலடைந்து, தனக்கு நேரிட்ட சங்கடங்களை நினைத்து நினைத்துத் துக்கித்து, சற்றுநேரம் கைகால் அசையாமல் வாயை மூடிக்கொண்டிருந்து, பிறகு துக்கத்தை உள்ளே அடக்கமாட்டாமல் தன்மனைவி தன்னை இத்தகைய ஆபத்துக்குளாக்கினளே என்றெண்ணித்தன்னை யறியாமலே "ஓபெண்ணே! மனிதனுக்கு உன்னைவிட வேறேசத்துரு வேண்டுமோ" என்று உரத்துக்கூவினான்.

அந்த தனபதியினுடைய மூத்தமனைவியே அந்தமாணிக்கத்தையெடுத்து ஒளித்துவைத்திருந்தாள். 'குற்றமுள்ளநெஞ்சு குறுகுறுவென்னும்' என்றபடி அவள் என்னநடக்குமோவென்று தன்னுடைய வேலைக்காரியைத் தன் புருஷன் செய்வதை அறிந்து வாவென்று அநுப்பியிருந்தாள். அவள், ஜோஷியனோடு தனபாலன் பேசியதையும், அந்த ஜோதிஷன்சொன்ன சொற்களால்வெளிப்பட்டுப்போயிற்றென்று பயந்து, தக்ஷணமே எஜமானியிடம் ஓடிவந்து, தான் நேரிற்கண்டதை யெல்லாம் சொல்லி இன்னும் ஆறுமணிநேரத்திற்கெல்லாம் உண்மை முற்றும் வெளியாய்விடும், பின்னர்ப்பிராணாபாயம் நேரிடுமோ என்னவோ தெரியாது. இப்போதே ஜோதிஷனுடைய தயவைப்பெற்றுக் கொள்ள ஏதாவது வழிதேடவேண்டும் என்றாள். சோமன்சொன்னவார்த்தைகள் தன்னுடைய குற்றத்தைக் தான் சுட்டிக்காட்டுகின்றதென்று நிச்சயித்து, அந்த எஜமானி மிக்கவிரைவாய் அந்த ஜோதிஷனிடம்வந்து அவனைத்தனியே யழைத்து அவன்காலில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து 'ஐயனே! என்னை இந்தவேளையில் காப்பாற்ற வேண்டும். எல்லாவற்றையும்நானேஒப்புக்கொள்ளுகிறேன் என்று வேண்டிக்கொண்டாள். சோமன் தன்னுள்வியப்புற்று நீ என்னிடத்தில் ஒப்புக்கொள்ளவேண்டியது என்னவிருக்கிறது என்றான். அதற்கு அவள் உங்களுக்குத்தெரியாத விஷயம்என்னவிருக்கிறது? அந்த மாணிக்கத்தை நான் திருடிவைத்திருக்கிறேனென்று உங்களுக்குத்தெரியுமல்லவா? என்னிடத்தில் அன்பாயிராத என் புருஷனுக்குப் பிராணச்சேதம் நேரிடவேண்டுமென்றும் அதனால் எனக்குப் பொருள் கிடைக்கவேண்டுமென்றும் நான் அந்தத்திருட்டு வேலை செய்தேன். தெய்வத்தன்மையுள்ள நீங்கள் அதைக்கண்டு

பிடித்து என்னுடையகொடிய எண்ணத்தைப் பூர்த்தியாக வொட்டாமற் பண்ணினீர்கள். என்மேற்றயைசெய்யும்படிப் பிரார்த்திக்கின்றேன் என்னசெய்யச்சொல்லி கட்டளையிட்டாலும் செய்யக்காத்திருக்கிறேன். என்று வேண்டிக்கொண்டாள். பிராணபாயம் வந்துவிட்டதென்று நிராசையுடனே வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருந்த அந்த சோமனென்பவனுக்கு அச்சமயத்தில் தனுதிபதியினுடையமனைவி பிரார்த்தித்த வேண்டுகோளைப் பார்க்கிலும் ஆநந்தத்தைக்கொடுக்கத்தக்கதாய் வேறு ஏதேனும் உண்டோ? சோமன் அவள்வார்த்தையைக்கேட்டு ஆநந்தக்கடலில்மூழ்கி எழுந்திருந்தவனாய் ஜோதிடசாஸ்திரத்தில் நிபுணனென்று தோன்றும்படி தைரியமாய் நின்று அவளைப்பார்த்து "பெண்ணே! நீ செய்தவெல்லாம் எனக்குத்தெரியும். இன்னும் சிறிதுநேரத்திற்கெல்லாம் உனக்கு அவமானமும் ஆபத்தும் நேரிடுமென்றுநிச்சயமாயிருந்தேன். நீ நல்ல கெட்டிக்காரி. சமயத்தில்வந்து குற்றத்தை ஒப்புக்கொண்டாயே! அதுவே உனக்கு அதிர்ஷ்டந்தான். இல்லாவிடில் உன்கதி வேறாயிருக்கும். இப்போது தப்பினாய். உடனே வீட்டுக்குப்போய் அந்தமாணிக்கத்தை உன்புருஷன்படுக்கும் பஞ்சணையில் தலையணையின் கீழ்வைத்துவிடு; உன்குற்றத்தை நான் வெளியிடாமலிருக்கிறேன் என்றான். அவ்வளவாவாவது சகாயம் பண்ணினனே புண்ணியவானென்று சந்தோஷப்பட்டு அவள் அவனுடைய கட்டளைப்படியே வீட்டுக்குச்சென்று மாணிக்கத்தை அவன்குறித்த இடத்தில் வைத்துவிட்டாள். உடனே ஒருமணிநேரத்திற்குள் தனபாலனிடம் ஓடி, கிரகங்களுடைய ஸ்தானமுதலியவற்றைக் கணக்கிட்டுப் பார்த்ததில் காணாதுபோன மாணிக்கம் உங்களுடைய படுக்கையில் தலையணையின்கீழ் இறக்கிறதாகத் தெரியவருகிறது என்றான். அதைக்கேட்டு அவன் நம்முடையபடுக்கையில் இருந்தால் நமக்குத் தெரியாமற்போகுமா? இவனுக்குத் தீயகாலம் குறுகியதுபோலும். ஆயினும் படுக்கையைச் சோதித்தால் இரண்டிலொன்று தெரிந்துபோகுமென்று அங்குபோய்ப் பார்த்தான். ஜோதிஷன் சொன்னபடியே குறித்த இடத்தில் மாணிக்கம் இருந்தது கண்டு போயினஉயிர் மீண்டும் வந்ததுபோல் முகமலர்ந்து திரும்பியோடிவந்து ஜோசியனைச் சேர்த்துத்தழுவி ஆலிங்கனஞ்செய்து கொண்டு எனக்கு நேர்ந்த இடுக்கணைக்களைந்த மஹானுபாவனே! உம்முடைய சக்தியேசக்தி; உடம்போன்ற ஜோதிஷனையான் இதுவரையில் கண்டிலேன். கேட்டதுமில்லை. என்றுபுகழ்ந்து, தான்முன்னே சொன்னபடி 200-வராகனைத் தாம்பூலத்தில்வைத்து புஷ்பசந்தனத்தோடு ஜோசியனுக்கு வெகுமதிதந்தான்.

தையற்காரன் அவ்வெகுமதியைப் பெற்றுக்கொண்டு தனக்கு அன்றையத்தினம் நேர்ந்த சங்கடத்தைத் தீர்த்ததுமன்றி. இலாபமும் காட்டினதற்காகக் கடவுளைத் துதித்துக்கொண்டே வீடுவந்து சேர்ந்தான். வீட்டுக்குள் நுழையும்போது அவன் பெண்சாதி அவனைக்கண்டமாத்திரத்தில் அருகிலோடிவந்து "என்ன? புது ஜோதிஷரே! யாதுகொண்டுவந்தீர்?" என்றாள். அவன் இதோபார் 200-விராகன். இனி யாவது திருப்தியடைந்து என்னைச் சங்கடத்தில் மாட்டாமலிருக்கவேண்டுமென்று அவளை வேண்டிக்கொண்டவனாய்த் தான் காலையில் வீட்டைவிட்டுப் போனது முதல் திரும்பிவந்தவரையும் சாங்கோபாங்கமாகக் கூறினான். அவள் பொருள்மேல் நோக்கமுடையவளாதலால், ஆபத்தென்றும் அபாயமென்றும் பாராமல் "அன்புள்ள மணாளரே! தைரியத்தைக் கைவிடலாகாது. மேலும், புதிய தொழிலை விருத்திசெய்தால் அளவற்ற சம்பத்துண்டாகும். உலகத்தில் சௌக்கியமும் சந்தோஷமுந்தானே வேண்டியது. அவைகள் கிடைக்குமானால் எப்பாடுபட்டால்தா னென்ன! தொழிலில்தாழ்ந்தது உயர்ந்ததொன்றில்லை. எந்தத் தொழிலைச் செய்தாலும் ஊக்கத்தோடு அதைச் சரிவரச் செய்பவனே உத்தமன்" என்றாள். சோமன் "பெண்ணணங்கே! அப்படியல்ல முரட்டுத்தனம் செய்யாதே. என்று புருஷன் புத்திசொல்ல ஆரம்பிக்கையில் அவள் அவன்மேல் கோபித்து ஒருக்ஷணநேரத்தில் அவனைவிட்டுப் பிரிந்துபோவதாகக்கூறி பயங்காட்டினாள்.

சோமனென்பவன் தன்மனைவியின் இன்மொழிக்கு மனமுருகி இணங்கி மறுநாளும் அவளிஷ்டப்படியே நடப்பதாக ஜோதிஷநூல்களை எடுத்துக்கொண்டு, முதல்நாள்போலவே தன்னைஜோதிஷனென்று அறிக்கையிட்டுக்கொண்டுசென்றான். அன்றைக்கும் அவனைச்சுற்றிக் கும்பல் கூடினார்கள். ஆகிலும் ஒருவரும் அவனைப்பரிகாசம்பண்ண வரவில்லை. முதல்நாள் நடந்த விருத்தாந்தம் ஊரெல்லாம் பரவி அவன்பேர் பிரசித்தமாகி விட்டதனால் அவனை எல்லோரும் மெச்சலானார்கள். இப்படியிருக்க, கழுத்துமாலையையும் கைம்மோதிரத்தையும் இழந்துவிட்டு வீட்டுக்குப்போனால் புருஷன் என்ன சொல்வானோவென்ற பயத்தினாலே மிகவும் சங்கடப்பட்டுக்கொண்டிருக்கும் ஒரு பெண்பிள்ளை அவ்வழியேபோய்க்கொண் டிருக்கையில் அங்கே என்ன கும்பலென்று விசாரித்தாள். ஒரு தையற்காரன் திடீரென்றுண்டாகிய தெய்வ ஞானத்தினால் ஜோதிஷனாகி அற்புதம் அற்புதமென்று சொல்லும் வண்ணம் ஜோசியம் சொல்கின்றானென்று அங்கிருப்போர் அவளிடம்

தெரிவித்தார்கள். அப்படிப்பட்ட வல்லவனைக் கேட்டால் மறைந்துபோன சொத்து இருக்குமிடம் தெரிய வரலாமென்று அவள் கும்பலிற்புகுந்து ஜோதிஷனைநெருங்கி "உங்களைப்போன்ற சாஸ்திர ஞானிகளுக்கு எல்லாந்தெரியு மாகையால் என்னுடைய நகைகள் களவுபோனவிதத்தை எளிதில் தெரிந்து சொல்வீர்களே தயவுசெய்து அவ்வளவு சிரமமெடுத்துக்கொள்வீர்களானால் நான் என் சொத்து அகப்பட்டவுடனே தங்களுக்கு 50-விராகன் இனும் தருகிறேனென்று வேண்டினாள். அதைக்கேட்ட சோமன் நேற்று வந்த ஆபத்தினின்றும் கடவுள் தப்புவித்தார். இன்றைக்கு அவமானமடையாமல் எப்படி வீடுபோய்ச் சேரப்போகிறேம். என்று அச் சோசியன் பெருந்திகில்கொண்டு தலையிறங்கி நிற்க, அந்தப் பெண்பிள்ளை முரட்டுத்தனமாய் கும்பலிற் புகுந்து வந்ததனால் அரைத்துணி கசகி சின்னபின்னப்பட்டிருந்தது அவன் கண்ணுக்குப் புலப்பட்டது. அதை அவளோடு இரகசியமாய்ச் சொல்லக்கருதி அவன் "கீழேபார்" என்று அவள்காதோடேசொன்னான். அவள் ஞாபகமெல்லாம் நகையின்மேற் சென்றிருந்ததுபற்றி ஜோதிஷன் கீழேபார் என்று சொன்னவுடனே தான் ஸ்நானம் பண்ணுவதற்குமுன் அந்த நகைகளைப் பெட்டியின்கீழ் வைத்ததாக ஞாபகம் வந்தது: உடனே ஜோதிஷனைப்பார்த்து "ஐயா! நீங்கள் சொல்லாமற்போனால் எனக்கு நகை போனவழியே தெரியாது. குளிக்கும்போது நான் அவைகளைப் பெட்டியின் கீழே வைத்துவிட்டேன், இப்போது நீங்கள் உணர்த்திய குறிப்பால் ஞாபகத்திற்குவந்தது. நீங்கள் இங்கேயேயிருங்கள். வீட்டுக்குப் போய்வருகிறேனென்று சொல்லிவிட்டுச்சென்றாள். சின்னேரத்திற்கெல்லாம் ஒருகையில் நகைகளையும், ஒருகையில் விராகனையும் எடுத்துக்கொண்டு ஓடிவந்து ஜோதிஷனுக்குக் கொடுப்பதாகச் சொன்ன 50-விராகனைக் கொடுத்துவிட்டு வீடுசென்றாள். ஒரு உதாரணத்துக்கு இரண்டு உதாரணமாகவே அவன்பேர் எங்கும்பரவிற்று. ஆகிலும் அவனுக்கு மாத்திரம் உள்மர்மம் தெரியுமாகையால் அந்தவேலை தனக்குத் தகாதென்று நன்றாய்த்தெரியும். அவன் பெண்ஜாதியோ ஆசைக்கு அளவில்லையென்றபடி மேலும்மேலும் திரவியத்திற் ப்ரீதிகொண்டு அவனை ஜோதிஷசாஸ்திரத்தை உறுதியாகப் பிடிக்கும்படி போதித்தாள்.

இவ்வாறிருக்கையி லொருநாள் அவ்வூ ரரசன் பொன்னகைப் பெட்டிகளில் நாற்பதுபெட்டிகள் காணமற்போயின. பொக்கஷன் முதலான பெரிய உத்தியோகஸ்தரெல்லோரும் திருடனைக் கண்டுபிடிக்கத் தங்களாலானமட்டும் முயன்றார்கள். அரசன் ராஜஜோதி

ஷனையும் பிரதான மந்திரிகளையும் வரவழைத்து இன்னும் பத்து நாட்களில் திருடர்களைக் கண்டு பிடிக்காவிட்டால் உங்களைச் சிரச்சேதம் செய்துவிடுவேனென்றான், ஒன்பது நாட்கள் கழிந்தன. திருட்டுச் சங்கதி வெளிப்படுவதாகக் காணப்படவில்லை. அப்படி எல்லோரும் பயந்து திகைத்து நிற்கையில் அவர்களில் ஒருவன் தையற்கார ஜோதிஷனை வரவழைத்தால் காரியம் அனுகூலமாகுமென்று எடுத்துச்சொன்னான். தையற்கார சோமன்வீட்டுக்குடனே இரண்டு ஆட்கள் அனுப்பப்பட்டார்கள். அந்த தூதுவர்கள் சோமன் வீட்டிற்குட் சென்று நடந்தேறிய விர்த்தாந்தங்களைத் தெரிவித்தனர். ஜோதிஷன் தன்மனைவியைப்பார்த்து "ஏபெண்கள்ரத்தினமே! உன்னுடைய பேராசையின்முடிவைப் பார்த்தனையா? நானிப்போது கொல்லப்படப்போகின்றேன். ராஜஜோதிஷன் என்னுடைய அகங்காரத்தைக் கேள்விப்பட்டு வேஷக்காரனென்றுசொல்லி என்னைச்சிரசாக்கினை செய்விக்கப்போகிறானென்று கண்ணீர்விட்டுக்கதறித் தன்னையழைத்துச் செல்லவந்த ஆட்களோடுகூட ஜோசியன்சென்றான். அரண்மனை வாசலில் போகும்போது ராஜ ஜோதிஷன் ஓடோடியும் வந்து தையற்காரனுடைய கையைப்பிடித்து அழைத்துச்சென்று சர்வோபசாரமும் செய்து ஆசனந்தந்து உட்காரவைத்து "சகலமுந் தெரிந்த ஜோதிஷரே! தெய்வசங்கற்பம் எவ்வாறிருக்கின்றதென்பதைச் சிறிது கவனியும்." "குப்பை உயர்வதும் கோபுரம் தாழ்வதும்" என்றபழமொழிப்படி மேலோர்கள் தாழ்மையுறுவதும், தாழ்மையுடையோர் மேலுறுவதும் இவ்வுலக இயல்பாயிருக்கிறது. எல்லாவற்றிற்கும் அவரவருடைய அதிர்ஷ்டமே காரணம். என்னை யிப்போது ஏழரைநாட்டுச்சனி பிடித்திருப்பதால் நான் துன்புறவும், உங்களுக்கு இது நற்காலமானதால் நீங்கள் இன்பெய்தவும்நேர்ந்ததுஎன்றான்.

அப்போது அங்கேஒருதூதுவன்வந்து அரசன் புதிய ஜோசியருடைய வல்லமையைக்கேட்டு அவரை உடனே அழைத்துவரும்படி உத்தரவு செய்தாரென்றான். உடனே தையற்காரன் ராஜஜோஸியரிடம் விடைபெற்று இந்தச்சமயம் நம்மைதெய்வந்தான் காப்பாற்றவேண்டுமென்று தெய்வசிந்தனையோடு தூதனுடன் சென்று அரசனைக்கண்டு நமஸ்கரித்து நின்றான்.

அவனைக்கண்ட வேந்தன் 'எம்முடைய பொருளைக் களவாடிச்சென்றவன்யார்' என்று வினவினன், தையற்காரன் சிறிதுநிதானித்து "மண்டலேஸ்வரா! திருடினது ஒருவனல்ல; நாற்பதுபேர் கூடித் திருடியிருக்கிறார்கள்" என்றான். அதற்கு அரசன் சரிதான்.

அவர்கள் யாவர்? அப்பொருளை என்னசெய்திருக்கிறார்கள்? என்றுகேட்க, ஜோதிஷன் "அரசற்கரசே! அந்தக் கேள்விக்கு விடை இப்போது சொல்ல என்னாலாகாது? ஜோதிஷகணக்குகள் பார்க்க 40-நாட்கள்செல்லும் அதுவரையில் எனக்குத் தவணை தந்தால், அதன்பின் தாங்கள் கேட்பதற்கெல்லாம் பதில்சொல்வேன்" என்றான். "அரசன் அப்படியேயாகட்டும் 40-நாட்கள்சென்றபின்னர் என் பொருள்கள் அகப்படாமற் போகுமானால் உம்மைத் தூக்கிவிடுவேன். இதுநிச்சயம்" என்றான். ஜோதிஷன் அதற் கொப்புக்கொண்டு தலைதப்பியது தம்பிரான்புண்ணியம் என்றபடிநாம் உயிர்தப்பினோம்; நாற்பதுநாட்களுக்குள் வேற்றாருக்குச் சென்று பிழைக்கலாமென்று தன்னுள் தீர்மானித்துக்கொண்டு வீடுவந்துசேர்ந்தான். அவன்மனைவி புஷ்பவேணி தன்னாயகனிடம்வந்து அரசனிடம் சென்றீரே என்னவிசேஷமென்று வினவினாள். அவன்என்னசமாசார மிருக்கிறது? வேந்தனுடைய பொக்கிஷத்திலிருந்து, களவுபோன நாற்பது பெட்டிநகைகளை 40-நாளையிற் கண்டுபிடித்துச் சொல்லாவிட்டால் நான் என் ஆருயிரை இழப்பேன்; இதுதான் விசேஷம்" என்றான். அதற்கு அக்கன்னெஞ்சக்காதகி "தலைவனே! இதற்காகத் தாங்களேன் அஞ்சவேண்டும்? மாணிக்கத்தையும், கழுத்துமாலையையும் கண்டுபிடித்துச் சொன்னதுபோல் இந்தத்திருடரையும் தெரிந்து சொல்வதற்கு என்னதடையிருக்கிறது என்றுகேட்டாள்; ஜோதிஷன்"அடிபயித்தியமே! நீயென்னசுத்தமூடப்பிறப்பா யிருக்கின்றாய்! உன்னைச் சந்தோஷப்படுத்தும்பொருட்டு ஜோஸியவேஷம் தரித்தேனேயன்றி எனக்கு அந்தசாஸ்திரத்தில் சிறிதும் பரிக்ஷியமில்லை யென்பதை நீ அறிந்திருந்தும் பிடிவாதம் செய்வது தகுதியோ? ஏதோ தெய்வச்செயலால் அவ்விரண்டு கேசிலும் தப்பநேர்ந்தது. இந்தச்சமயம் அவ்வாறு தப்புவதற்கு யாதொரு வழியையுங்காணேம் ஆதலால் நான் அரசனிடம் 40-நாள் தவணைபெற்று வந்திருக்கின்றேனாதலால் அதற்குள்இப்போது நம்மிடத்துள்ள பொருளை யெடுத்துக்கொண்டு வேற்றார் செல்வோம். அங்கு முன்போலத் தையற்றொழில்செய்து ஜீவிக்கலாமென்றான். அச்சுந்தரியாகிய புஷ்பவேணி என்பவள் தன்கணவன்சொல்லியவற்றையெல்லாம் செவிசாய்த்துக்கேட்டு மிக்கஉக்ராவேசமான கோபமடைந்து "அற்பருக்குஅவர்களிடத்திலுள்ள தாழ்மையான குணம் நீங்குவதில்லை, இதனால்தான்.

"தங்கமுடி சூடினும் தன்குணம் விடார்கயவர்
திங்கள் முடிசூடும் தினகரா—கொங்கைதனில்

பாலருந்த அட்டைவிடில் பச்சைரத்தமேயருந்தும்
பாலருந்தமாட்டாது பார்.''

என்று மேலோர் கூறியிருக்கிறார்கள். தையற்றொழில் செய்து அதனால் வரும் ஸ்வல்பலாபத்தினால் குடும்பகாரியத்தைப்பார்த்து வருவேனானால் நான் எந்தக்காலத்தில் இராஜ ஜோஸியனுடைய மனைவியைப் போலாகிச் சுகமனுபவிப்பது? அதுகூடாதகாரியம். ஒருவன் மனோதிடத்தோடிருந்து குன்றாமுயற்சிகொண்டு காரியத்தைப்பார்த்து வருவானானால் அவனுக்குக் கைவல்யமாகாத காரியமொன்றுமில்லை. அப்படிச் செய்வதே புருஷர்க்குரிய இலக்கணமாம். இதைவிட்டு சோம்பல் கொண்டு பைத்தியக்காரத்தனமாகப் பேசுவதில் என்னபலன்? முன்னே உனக்குத் துணையாக நின்ற தெய்வமே இப்போதும் உனக்குச் சகாயம் செய்யாநிற்கும். நீ சிறிதும் அஞ்சற்க இப்பதியைவிட்டு வேற்றூருக்குச் செல்லவேண்டுமென்னும் கருத்தை அறவே வொழிந்துவிடு, அப்படிப் போவதாய்க் கருதினாலும் நான் அரசனுக்கு அறிக்கையிடுவேன். நான் சொன்னது தவறேன். நமக்கு யுக்தமான இவ்விளமைப்பருவத்தில் முயற்சியோடு திரவியத்தைச் சம்பாதிப்போமாயின் முதுமைப்பருவத்தே வருந்தாது ஜீவிக்கட்டும் ''திரைகடலோடியும்திரவியம்தேடு'' என்ற ஔவைமொழியை அலக்ஷியம் செய்யாலாமா? என்னுடைய அழகுக்கேற்ற அந்தஸ்தில் நீ என்னை வைக்கவேண்டுவது உன்னைப்பொருத்தகடனும் என்று நீண்டதோர்பிரசங்கம் செய்தாள், தன்மனைவியின் பிடிவாதத்தை யுணர்ந்த சோமன்தன் இல்லாளை நோக்கி நல்லது உன் கருத்துப்படி நடக்கின்றேன். இந்தநாற்பது நாட்களையும் சுகமாகக் கழிக்க எனக்குமனமிருக்கிறது. நான் சிறிதும் கணக்கறியாதவனென்பதை நீயும்அறிவையல்லவா? ஆகவே இதோ இங்கிருக்கிற 40-தேங்காய்களை நீ மறந்து போகாமல் வைத்துக்கொண்டு தினந்தோறும் நான் இரவில் கடவுளைத்தொழுதபிறகு ஒவ்வொருதேங்காயாகக் கொடுத்துவா. தேங்கா யென்னிடத்தில் எத்தனைசேருகிறதோ அதை எண்ணி அத்தனை நாள் கழிந்ததென்றுகண்டு கொள்வேன் என்றான். புஷ்பாவதி தன் எண்ணம் நிறைவேறிற்றென்று சந்தோஷப்பட்டு தேங்காய் நாற்பதையும் எடுத்துவைத்துக்கொண்டு அவன் இஷ்டப்படியே நடந்து கொள்வதாகக்கூறினாள்.

இதற்குள் அரசனுடையசொத்தைத் திருடியகள்வர்கள்ஊரைவிட்டோடிவிட்டால் தங்கள்மேல் சந்தேகந்தோன்றுமென்றெண்ணி அவ்வூரிலேயே யிருந்துகொண்டு தங்களைக்கண்டு பிடிப்பதற்

காக என்னென்னகாரியம்நடக்கிறதென்று ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சோமனென்பவன் ராஜசமுகத்திலிருந்து பேசும்போது அங்கே திருடர்களிலொருவனிருந்தான். கள்வர்கள் நாற்பதின்மரென்று ஜோஸ்யன் சொன்னதனாலேயே தன்னுடைய கூட்டத்தாரின் தொகையைச் சரியாகச்சொல்லி விட்டானென்று பயந்து உடனே தோழர்களிடத்திற்சென்று நாமெல்லோரும் அகப்பட்டுக்கொண்டோம், புதுஜோதிஷனுகிய சோமனென்பவன் கள்வர்கள் நாற்பதின்மரென்று அரசனிடத்திற் றெரிவித்தானென்ருன். அதைக்கேட்ட திருடர்த்தலைவன், சொல்லிவிட்டதனாலேயே அவனைச் சமர்த்தனென்று சொல்லிவிடலாமா? நாற்பதுபெட்டிகள் களவுபோயிருப்பதால் திருடர்களும் நாற்பதின்மரிருக்கலாமென்று யூகித்துச்சொன்னதா யிருக்கலாம். அது தற்செயலாய்ச் சரியாயிருந்தது. இவ்வளவேயன்றி அவனுடைய கல்விவல்லமைபாற் சொன்னதல்ல. ஆயினும் அந்தத்தையற்காரன் இரண்டு மூன்றுதடவைகளில் சமர்த்தனென்று பெயரெடுத்திருக்கின்ருன். ஆதலால் அவனுடைய செய்கையைக் கவனிப்பது நன்மைதான். அவனுடைய மனைவியிடத்தில் அவனுக்கு மிக்கபிரீதியுண்டு, ஏதாவது விசேஷமிருந்தால் அவளிடத்தில் சொல்லாதிரான். இன்றிரவு அவன் தன்மனைவியோடு சம்பாஷிக்கும்போது என்னசொல்லுகிருனென்று நம்மில் யாராவது ஒருவன் அவனுடைய வீட்டுக்கூரையின்கீழ் பதுங்கிக்கேட்டுவரவேண்டுமென்ருன். இது நல்லயுக்தி யென்று எல்லோரும் அங்கீகரித்து இரவுவந்தபிறகு அத்திருடர்கள் தம்மிலொருவனை யனுப்பினுர்கள். அக்கள்வன், தையற்காரன் ஜபமுடிந்து அவனுடையமனைவி தேங்காய் கொடுக்கிறசமையத்தில் அங்கேவந்து சேர்ந்தான். ஜோதிஷன் தேங்காயைவாங்கிக்கொண்டு "இன்றைக்கு இதோ நாற்பதில் ஒன்றிருக்கிறது" என்ருன். அதைக்கேட்டுக்கொண்டிருந்த திருடன் வயிற்றில் நெருப்பைவாரிக் கட்டிக்கொண்டதுபோல் தோழனிடஞ்சென்று நான்போனவுடனே ஜோதிஷன் ஞானதிருஷ்டியினலறிந்து நாற்பதில் ஒன்றிருக்கிறதென்று தன் மனைவியிடஞ்சொன்னுனென்ருன். அதையவர்கள் நம்பவில்லை. பயத்தினுலே அவனுக்கு அப்படிக்கேட்டிருக்குமென்று சிலர் நினைத்தார்கள். மறுநாள் இரவு அதேவேளைக்கு இரண்டுபேர் போகிறதென்றுதீர்மானித்து அன்றைக்கும் அவர்கள் ஜோதிஷன் மனைவி தேங்காய்கொடுக்க, "இன்றைக்கு இதோ இரண்டிருக்கிறது" என்று சொல்லும்சமையத்தில் அவ்விடம் வந்துசேர்ந்தார்கள். வந்த இருவரும் தங்களைத்தான் ஜோதிஷன் சொன்னுனென்று நம்பிக்கையுண்டாகிச் சென்று நடந்த சங்கதியை மற்றைத்திருடர்களோடு சொன்னுர்கள்.

திருடர்தலைவன் மறுநாள் மூவரை யனுப்பினன். அன்றைக்கும் அதேசொல்பிறக்கவே, நாலாநாள் நால்வர்வந்தார்கள். இப்படியே ஒவ்வொருவர் அதிகமாய்வந்துகொண்டிருந்தார்கள். வந்தவர்களுக்கெல்லாம் பூரண நம்பிக்கை யுண்டாகிவிட்டது. கடைசினுள் 40-பேரும் போனார்கள். சோமனென்பவன் இன்றோடு எல்லாம் சரிவந்துவிட்டது. இன்றைக்கு நாற்பதும் இதோ இருக்கிறது'' என்று உரத்துக்கூவினன்.

இவ்வார்த்தையைக் கேட்கவே திருடர்களுக்கிருந்த சகலசந்தேகமும் பரிஷ்காரமாய் நீங்கிப்போயிற்று. ஒருநாள்கூடத் தப்பாமல் வந்த நம்முடைய தொகையை எவ்வாறுகண்டுபிடித்துச் சொல்லக்கூடும்? தெய்வ ஞானமில்லாதுபோனல் இதைத்தெரிந்து சொல்லமுடியாது. அத்தகைய தெய்வகடாக்ஷம் பெற்றிருக்கிற மனிதனை ஏமாற்ற எண்ணுவது இனிரசமற்றகாரியம். நாம் இனி இவ்வூரைவிட்டுச் சென்றாலும் நாமிருக்குமிடத்தை இந்த ஜோசியன் ஒருநொடிப்போதில் கண்டு பிடித்துச் சொல்லி விடுவான். பின்பு அரசனுக்கினை மிகக் கொடியதாகச்சம்பவிக்கும், அவ்வாறு நேராவண்ணம் ஜாக்கிரதைப்பட்டு நாம் களவாடிய சொத்தில்கொஞ்சம் அவனுக்குக் கொடுத்து ஜோசியனை நாம் கைவசம்செய்துகொள்வதே சிறந்ததென்று மற்றைத்திருடர்களுக்குத் தலைவன் கூறினன். அவர்கள் அதுவே சரியென்று ஒப்புக்கொண்டுமறுநாள் விடிய இரண்டு நாழிகைக்கு முன்னதாக ஜோஸியன் வீட்டுக்கதவைத்தபதபவென்று தட்டினார்கள். அவன் அரசனுடைய சேவகர்கள் தான் தன்னை இழுத்துக்கொண்டு போகவந்து விட்டார்களென்று அலறி எழுந்து திடுக்கிட்டு கைகால் நடுங்கி இனி என்னசெய்யப்போகிறோமென்றுபயந்து கதவைத்திறந்து "நிதானியுங்கள். நீங்கள் வந்திருக்கிறகாரியம் எனக்குத்தெரியும்'' என்றான். கதவைத்திறந்தவுடனே திருடர் தலைவன் ஜோஸ்யன் காலில் சாஷ்டாங்கமாகவிழுந்து நமஸ்கரித்தெழுந்து கைகட்டி வாய்புதைத்து "தெய்வத்துக் கொப்பானவரே! தேவரீருக்குத் தெரியாத காரியமுமுண்டோ? நாங்கள்செய்த காரியம் தவறல்லவென்று ஸ்தாபிக்க வரவில்லை. உமக்கு இரண்டாயிரம் விராகன் கொடுக்கின்றோம். எங்கள்பால் கிருபைசெய்து நாங்கள்செய்த காரியத்தை வெளியிடாதிருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றோம்.'' என்று அவனை வேண்டிக்கொண்டான். சோமன் தன்கண்களை நிமிட்டிக்கொண்டு இப்போது நாம் காண்பது கனவோ அல்லது உண்மைதானோவென்று சற்று நிதானித்து, வந்திருப்பவர்கள் கள்ளர்களே

யாமென்று உள்ளபடி அறிந்தான். தன்னுடைய சந்தேகம்தீர்ந்த பின், கள்ளர் தலைவனைநோக்கி "என்னசொன்னுயடாதிருடா? உன்னுடைய தீச்செயலை அரசனுக்குத் தெரிவிக்கவேண்டாமென்று கூறுகிருய்? அது என்னுல்முடியாது. என்று ஏதோயோசனை செய்வதுபோலிருந்தான். திருடர்களெல்லோரும் "ஐயனே ! எங்களிடத்தில் இரக்கம்வைக்கவேண்டும். அரசனுடைய சொத்தையெல்லாம் திருப்பிக்கொடுத்துவிடுகிறேம். எங்களுடைய பிராணனைமாத்திரம் காப்பாற்றவேண்டும்" என்றுமீண்டும்பிரார்த்தித்தார்கள். ஜோதிஷன் அவர்கள்வேண்டுகோட்கிரங்கி "ஹா திருடர்களே ! சூரியசந்திர நட்சந்திரங்களின் மேலும் செல்லுகிற என்னுடைய ஞானதிருஷ்டிக்கு அகப்படாமல் தப்பித்துக்கொள்ளமுயன்றீர்களல்லவா? ஆயினும் அபாயம்வருவதற்குமுன்னமே நீங்கள் வந்து வணங்கினீர்களாகையால் பிழைத்தீர்கள் நீங்கள் களவாடிச்சென்ற சொத்துமுழுமையும் திருப்பிக்கொடுத்து விடவேண்டும். இப்போதேநீங்கள்விரைந்துசென்று பெட்டிகளைக்கொண்டுபோய் முன்னிருந்த சிலோடு அரசனுடைய மாளிகைக்குத் தென்பக்கத்துச் சுவற்றின்கீழ் ஒரு அடி ஆழத்தில் புதைத்துவிடுங்கள். இவ்வாறு செய்வீர்களாயின் உங்களுக்கு யாதொரு அபாயமும் வராதபடி நான் காக்கின்றேன். இல்லையாயின், உங்களுக்கும் உங்களுடைய இனத்தாருக்கும் நாசம்வந்துவிட்டதென்றே கண்டிப்பாய் நினைத்து விடுங்கள் என்றுன். கள்வர்களும் அவன்கட்டளைப்படியே செய்கிறதாக ஒப்புக்கொண்டு போய்விட்டார்கள்.

அவர்கள் சென்றபின் சோமனென்பவன் தன்மீது பெருங்கிருபை செய்த கடவுளை நினைந்து வணங்கினுன். ஒருமணிநேரத்திற்குப் பிறகு அரசனுடைய தூதர்கள் வந்து அவனை அழைத்தார்கள். அவன் தன்மனைவியிடஞ்சென்று திருடர்கள் வந்த விஷயமொன்றும் அவளிடம் தெரிவியாமல், நான்வேந்தனிடம் செல்கின்றேனென்றுன். அவள் தெய்வவருளால் உனக்கு யாதொருதீங்கும் சம்பவியாது ஜயம்பெறுவாய் அரசனிடம் சென்றதே தைரியமாக ஜோதிஷம் சொல்லென்று கணவனுக்குத் தைரியம் சொல்லியனுப்பினுள். வெளிக்கு அப்படி வேஷம் போட்டபோதிலும், புருஷன் இறந்து போகிற பக்ஷத்தில் தான் இன்னும் யாராவது பணக்காரனை வைத்துக்கொள்ளலாமென்பது அவளுடைய உட்கருத்து,

சோமனென்பவன் அரசன்சமுகம்போய்நின்றுன் அவனுடைய வரவை ஆவலோடுபார்த்திருந்த அரசன் "ஜோதிஷரே! சொத்தைக்

கண்டுபிடித்தீரா? தங்களுடைய முகக்குறியை நோக்கினால் ஐயமிருப்பதாகத் தோற்றுகிறது." என, ஜோதிஷன்: "மஹாராஜாவுக்குப் பொருள்வேண்டுமா, திருடர்கள் வேண்டுமா? என்னுடைய ஜோதிஷக் கணக்கின்படி ஒன்றுதான் கிடைக்கும். தங்களுக்கு எது இஷ்டமோ அதைத் தெரிவிக்கவேண்டுமென்றான். அதற்கரசன் திருடர்களைத் தண்டிக்கவேண்டுவது அவசியமானாலும்,ஏதாவது ஒன்றுமாத்திரந்தான் கிடைக்குமென்றபடியால் சொத்தைத்தான் கண்டு பிடித்துக்கொடும் என்று கேட்க, சோமன் திருடர்களை மன்னிப்பதாக அரசனிடத்துப் பிரமாணஞ் செய்து வாங்கிக்கொண்டு, என்னுடன் வந்தால் பொருளைக்காண்பிக்கிறேனென்றான். அரசனும் அமைச்சனும் பேராச்சிரியமெய்தி அவன்பின் தொடர்ந்தனர். அரண்மனைக்குத் தென்னண்டை மதிலருகேபோய் ஆகாயத்தை நோக்கி நின்று ஏதோமந்திரோச்சாடனம் செய்வதுபோல் அபிநயித்தான். அவ்வாறு சின்னேரம்சென்றவுடனே தென்னண்டை சுவற்றைக்காட்டி 'இந்தசுவற்றின் பக்கத்தில் வெட்ட உத்தரவுசெய்யவேண்டும் என்றான். அப்படியே தோண்டிப் பார்த்தபோது நாற்பதுபெட்டிகளும் முத்திரையிட்டது யிட்டபடியே அகப்பட்டன. அரசனுக்குவந்த ஆநந்தம் இவ்வள வவ்வளவல்ல. வேந்தன் அந்தஜோதிஷனை இறுக்கத்தழுவிகொண்டு தனது சமஸ்தான அரசஜோஸியனாக நியமித்து தனக்கிருந்த அழகிய ஒரேபெண்ணை அவனுக்கு விவாகம் செய்வித்தான். சோமன் உன்னதபதவிக்கு வந்து விட்டாலும், தான் ஏழையாயிருக்கும்போது எவ்வளவுதாழ்மையாயும் பொறுமையோடு மிருந்தானோ அப்போதும் அந்நிலையிலிருந்து மாறவில்லை. இருமனைவியரோடும் அரண்மனையில் வசித்திருந்தான். பின்னர் ஜோதிஷ சாஸ்திரத்தைக்கற்கவேண்டுமென்றும் அவர் அவனுக்குமிகுதியுமுண்டாகிக் கற்றுப் பாண்டித்தியனானான். அவனுடைய மூத்தமனைவியின் பேராசையானது இளையாளாகிய இராஜகன்னிகையினுடைய நற்குணத்தோடு சேர்ந்து திருந்தியது.

## சூடாமணியும், ஓர் அற்புதகட்டிலும்.

முன்னொருகாலத்தில் வசந்ததிலகன் என்னும் பெயரிய ஒரு வர்த்தகனிருந்தான். அவனுக்குச்சூடாமணி என்று ஒருபுத்திரனுண்டு. தாய் தந்தையர்களுக்கு அவனொரே மகனானமையால், அவ

கள் அவனிடத்தில் அதிக நேசம்கொண்டவர்களாகி, அவனைஒரு
வேலையும் செய்யவொட்டாமல் அவன் மனம்போனபடியெல்லாம்
களித்து விளையாடித்திரியவிட்டுத் தாங்களே அவனுக்காக வருந்
தியுழைத்துக்கொண்டிருந்தார்கள். குழந்தைக்குக் கல்வியாவது
கைத்தொழிலாவது ஒன்றும் கற்பிக்கவில்லை. தங்களுக்கு மரணம்
சம்பவித்துத் தம் அருமைக்குழந்தையைத் தனியேவிட்டுப்போ
ம்படியான காலமொன்றுவருமென்பதையும் அக்காலத்தில் அவ
ன் தானே வருந்தியுழைத்து வயிறுவளர்க்கவேண்டியதாகும்என்
பதையும் அவர்கள் சிறிதும் நினைக்கவில்லைபோலும்: இப்படியிரு
க்கச் சூடாமணிக்கு விவாகம் செய்யும்படியான வயதுவந்தது.
அதுதெரிந்து பெற்றோர்கள் அவனுக்குத்தகுந்த கன்னிகையொ
ருத்தியைத்தேடிக் கலியாணம்செய்வித்தார்கள். கலியாணமான
பின்பு சிலகாலம் அனைவரும் ஒன்றாய்க்கூடிச் சுகமாக வாழ்ந்திரு
ந்தார்கள்.

இப்படியிருக்க. நாளடைவிலே தாய்தந்தையர்களிருவரும்
இறந்து போனார்கள். ஐயோ ! இப்போது சூடாமணி என்னசெ
ய்வான்? ஏதாவது ஜீவனோபாயமொன்று தேடிக்கொள்ளப் பெற்
றோர்கள் அவனுக்கு யாதொருவழியும் கற்பிக்கவில்லையே. ஆயி
னும் அவன் தாய்தந்தையர்களிறந்த சிலநாள்வரையில் அவர்கள்
தேடிவைத்திருந்த பொருளைக்கொண்டு பெண்சாதியும் தானுமாய்
ஜீவனம்செய்துவந்தான். ஆயினும் ஒருவர்தேடிவைத்த பொருள்
எத்தனை நாளைக்குத்தாங்கும்? "குந்தித்தின்றால்குன்றும் மாளும்"
அல்லவா? "தேடாதழிக்கிற் பாடாய்முடியும்" என்றபெரியோரு
ரையும் இருக்கின்றதே. அவர்கள் தன்முயற்சியொன்று மில்லாத
பொருளையேதினந்தோறும் தின்று கொண்டுவரவே, சீக்கிரத்தி
லேயே அந்தப் பொருள் அநேகமாய்ச்செலவழிந்துபோயிற்று. அ
தைப்பற்றிச்சூடாமணிக்குச் சிறிதும்சிந்தையில் தோன்றவில்லை
யாயினும் அவன் மனையாட்டிக்குமட்டும் அதையெண்ணப் பெரு
ந்துயரமுண்டாயிற்று. பெரியோர் தேடிவைத்தபொருள் குறைய
க்குறைய அவளுடைய மனவிசாரம் அதிகரித்துக் கொண்டேவந்
தது. இப்படி அந்தப்பொருளெல்லாம் அநேகமாய்ச் செலவழிந்
துபோகக்கண்டு ஒருநாள் அவள் ஐயோ இந்தச்சொற்பமும் செல
வழிந்து போனபிறகு நாம் என்னசெய்கிறது ? நம்கணவனுக்குக்
கைத்தொழிலும் தெரியாது. கஷ்டப்படவும் அருகரல்லவே. என்
று அதே சிந்தாகுலம் கொண்டிருந்தாள். ஒருநாள் அவள் மிகவும்
முகம் வாடிமனங்கலங்கி நிற்கக்கண்டு சூடாமணி அவளண்டை
போய் என்காதலியே ! நீயேன் இப்போது இப்படி விசனமுற்றி
ருக்கிறாய் ? என்ன விசேஷம்? என்றுகேட்க, அவள் "மற்றொரு

விசேஷமுமில்லை. வயிறுவளர்ப்பதுதான் பெரிய விசேஷமாயிருக்கிறது. நம்பெரியோர்கள்வைத்த பொருள் அனைத்தும் செலவாகிவிட்டதே. இனிநாம் என்னசெய்கிறது? உமக்கு உழைத்து வேலைசெய்யவுந்தெரியாது. வர்த்தக வியாபாரங்களிலும் பயிற்சியில்லையே! இதனால் நாம்பிழைக்கும்வழி எப்படியென்று விசாரப்படுகிறேன்'' என்றாள் அதுகேட்டுச் சூடாமணி, இதற்காகவா நீவிசனப்படுகிறாய்? வேண்டாம்: எனக்குவேலைசெய்யத் தெரியும். எதற்கும் சுவாமியிருக்கிறார் மரம்வைத்தவன் தண்ணீர்வார்க்காமற்போவானா? என்று சொல்லிச் சமாதானப்படுத்தினான்.

அப்படியிருக்க ஒருநாள் காலையில் சூடாமணி எழுந்திருந்து கோடாரியைக் கையிலெடுத்துக் கொண்டு தன்பெண்சாதியைப்பார்த்து, என்கண்மணியே, நான் இப்போது வெளியேபோய் வேலை செய்துவிட்டு வருகிறேன். பகல்வேளைக்கு ஏதாவது போஜனமிருந்தால் கட்டிக்கொடு. சாயந்தரந்தான் திரும்பி வீட்டுக்கு வருவேனென்றான். அதுகேட்டு அவள், இவன் என்னவேலை செய்யப்போகிறானென்று வியப்புற்றாளாயினும், அதைப்பற்றி அவனை ஒன்றும் கேளாமலே சோறுகட்டிக்கொடுத்தனுப்பினாள்.

பெண்சாதி கட்டிக்கொடுத்த சோற்றைவாங்கிக்கொண்டு சூடாமணி குடாரியும் கையுமாய் ஒரு பெருங்காட்டுக்குப்போனான் அக்காட்டில் அவன் பகற்பொழுதெல்லாம் சுற்றித்திரிந்து அங்குள்ள மரங்கள்தோறும் போய்நின்று, "நான் உன்னை வெட்டலாமா, நான் உன்னை வெட்டலாமா" என்றுகேட்டான். மரம் மனிதரோடு பேசுமா? தான் கேட்ட கேள்விக்கு அக்காட்டில் ஒருமரமும் மறுமொழிகொடாமற் போகவே ஒரு மரத்தையும் வெட்டத் துணியாமல் அவன்போனபடியே திரும்பி வீடுவந்து சேர்ந்தான். வீட்டுக்கு வந்தவுடன் பெண்சாதி அவனுக்கு வேண்டியபடி உபசாரம் செய்தாளாயினும் இன்று எவ்விடத்திற்குப் போயிருந்தீர்கள் என்றாவது, என்னவேலை செய்தீர்களென்றாவது, ஒன்றும் அவள்கணவனைக் கேட்கவில்லை. அவனும் தான்போய்வந்த செய்தி இன்னதென்று மனையாளுடன் உரைக்கவில்லை.

மறுநாள் காலையிலும் அவன் முன்போலவே எழுந்து, இன்றையதினமும் நான்வெளியேபோகிறேன்; பகற்போஜனத்துக்குச் சோறு கட்டிக்கொடுவென்று கேட்க, அப்போதும் அவள், நீங்கள் எங்கே என்னவேலை செய்யப்போகிறீர்களென்று வினவ விரும்பாமல் சோறு கட்டிக்கொடுத்தனுப்பினாள். சூடாமணி குடாரியை எடுத்துத்தோளில்வைத்துக்கொண்டு முதல்நாள்போன காட்டுக்கு

போகாமல் மற்றொரு புறத்திலுள்ள பெருங்காட்டுக்குப்போனான் இந்தக்காட்டிலும் அவன் முன்போலவே மரங்கள்தோறும் சென்று உன்னை நான் வெட்டலாமா? உன்னை நான் வெட்டலாமாவென்று கேட்க, ஒருமரமும் பதில் உத்தரம் உரைக்காமற்போகவே, கட்டுச்சோற்றைமாத்திரம் அங்கோரிடத்தில் வைத்துத் தின்றுவிட்டு மாலைவேளையில் வீட்டுக்குவந்தான்.

மூன்றாநாள் மற்றொருபுரத்திலுள்ள காட்டுக்குக் குடாரியை எடுத்துக்கொண்டுபோனான். அக்காட்டிலும் அவன் ஒவ்வொரு மரத்தண்டையிலும் போய்நின்று நான் உன்னைவெட்டலாமா வென்று வேண்டிக்கேட்க, அவ்விடத்திலும் ஒரு மரமும் விடைகொடாமற் போகவே மிகவும் விசனமுற்றவனாகி வீடுவந்துசேர்ந்தான்

ஆயினும் அவன் அவ்வளவோடு அம்முயற்சியை விட்டுவிடவில்லை. பிடித்தகாரியத்தை எப்படியாவது முடித்தேதீரவேண்டும் என்ற விடாமுயற்சியுடையவனாகி மறுநாள் வேறொரு புறத்திலுள்ள வனத்திற்குப்போய் அன்று முழுதும், நான் உன்னை வெட்டலாமா வென்று கேட்டுக்கொண்டே அக்காட்டிலுள்ள மரங்கள்தோறும்போய்ச் சுற்றினான். ஒருமரமும் மறுமொழிகொடுக்கவில்லை. அப்படியிருக்க அன்றுமாலைப்பொழுதில் ஒருபெரிய மாமரத்தண்டைபோய், நான் உன்னை வெட்டலாமாவென்று கேட்டதற்கு அந்த மாமரம், "சுகமாய் வெட்டிக்கொள்" என்று அநுமதிகொடுத்தது. மரம்எங்கேயாவது பேசுவதுண்டாவென்பீர்களோ? சிறுவனான சூடாமணியினுடைய மனவுறுதியைப்பார்த்து அவனிடத்தில் கருணை கூர்ந்து கடவுளே அவன்மிகுந்த செல்வவானாகி க்ஷேமமாய்வாழ்ந்திருக்கட்டுமென்று திருவுளம்பற்றி அம்மாமரத்தை அவ்விதமாகப் பேசும்படிச்செய்தார்.

அந்தப் பேச்சைக் கேட்கவே சூடாமணிக்கு அதிக சந்தோஷமுண்டாயிற்று. அவனுக்கு வெகு விசித்திரமாய்ச் சட்டில் நிருமிக்கத் தெரியும்; அதற்கு வேண்டிய மரம் அகப்படவில்லையேயென்று அதற்காகவே அவன் இத்தனை நாள் தேடித்திரிந்தான். இந்த மாமரந்தன்னை வெட்டிக்கொள்ளும்படி சொன்னதுகேட்டுக் கடவுள்தான் கிருபை பண்ணினாரென்று அவன் உடனே அம்மரத்தை வெட்டியெடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போனான். கணவன் பெரிய ஒரு மரத்தைத் தலையில் தூக்கிக்கொண்டு வருவதைப்பார்த்து வீட்டிலிருந்த பெண்சாதி, இதென்ன இவர் இந்த மரத்தைத் தூக்கிக்கொண்டு வருகிறார், இதையென்ன செய்யப்போகிறார் என்று சிந்தித்துக்கொண்டிருந்தாள். ஆயினும் அதைப்பற்றி அவனை ஒன்றும் கேட்கவில்லை.

மறுநாள் காலையில் சூடாமணி எழுந்து அந்த மரத்தை அவ்வீட்டில் ஒரு அறைக்குள் கொண்டுவைத்து, தன்பெண்சாதியை அழைத்து, இனி ஒருவாரம்வரையில் நான் இந்த அறையைவிட்டு வெளிவரமாட்டேன், நீயும் இவ்வறைக்குள் வரக்கூடாது. அதுவரையில் அன்றுடம் வேண்டிய ஆகாரத்தைமாத்திரம் நீ ஒரு சிறிய சாளரத்தின்வழியாய் இவ்வறைக்குள் வைத்துவிடவேண்டும். அதுவரையில் நானும் உன்னுடன் பேசமாட்டேன்; நான் உன்னைக் கூப்பிடுகிறவரையில் நீயும் என்னுடன் பேசக்கூடாதென்று திட்டம் செய்துவிட்டு அவன் அந்த அறைக்குள் புகுந்து கதவைப் பூட்டிக் கொண்டான். அதுகண்டு அவன் பெண்சாதி, ஒருவாரம் வரையில் இவர் இவ் வறைக்குள் புகுந்துகொண்டு என்னவேலை செய்யப்போகிறார்? நானும் பார்க்கக்கூடாதென்கிறாரே? இதென்ன புதுமையோ தெரியவில்லையென்று அதிசயப்பட்டுக் கொண்டிருந்தாள்.

இப்படியிருக்க அவன் சொன்னபடியே ஒருவாரமாயிற்று. அதற்குள் அவன் அந்தமாமரத்தினால் அனைவரும் வியக்கத்தக்க வெகு விசித்திரமான கட்டிலொன்று செய்துமுடித்தான் அப்படிப்பட்டகட்டிலை அதுவரையில் எவரும் கண்டிருக்கமாட்டார்கள். வேலைமுற்றும் நன்றாய்த் தீர்ந்தவுடனே அவன் தன் பெண்சாதியைக் கூவிக்கதவைத்திறந்துகொண்டு உள்ளே வரும்படி அழைத்தான். வந்ததும் அவளைக்கண்டு, என்காதலியே, நான் எவ்விதமானகட்டில் செய்து முடித்திருக்கிறேன்பார் என்றான். அந்தக்கட்டிலைப்பார்த்து அவள் அதிக ஆச்சரியமடைந்து, என்பிராணநாயகரே, இக்கட்டில் உம்முடையவேலைத்திறமா? ஆ! இது எவ்வளவு விசித்திரமாயிருக்கிறது? இப்படிப்பட்ட பொருளைநான் இவ்வுலகில் எங்கும் கண்டதில்லையென்று சொல்லிச் சந்தோஷமடைந்தாள்.

அன்றைய தினமெல்லாம் அவன் எங்கும் வெளியே போகாமல் வீட்டிலேயேஇளைப்பாறியிருந்து மறுநாள் காலையில் கட்டிலையெடுத்துக்கொண்டு அரசன் அரண்மனைக்குப்போய் அரண்மனைவாயிலில் அதைவைத்துக்கொண்டு உட்கார்ந்தான் அவ்வரண்மனையிலுள்ள வேலைக்காரர்கள் அனைவரும் அதைப்பார்க்க ஓடிவந்தார்கள். அதைப்பார்த்து அவர்கள் மிகவும் வியந்து இத்தன்மையான புதுமையை யாராகிலும் எப்பொழுதாவது கண்டதுண்டா என்று ஒருவர்க்கொருவர் சொல்லி மகிழ்ச்சியடைந்தார்கள். பின்பு அவர்கள் சூடாமணியைப்பார்த்து, இது உன்னுடையதா? விற்பனைக்காக கொண்டுவந்தபொருளா? இதைச்செய்தது யார்? இது

முழுதும் உன்னுடைய வேலைத்திறமாவென்று கேட்க, அவன் உங்களுடைய கேள்விகளுக்கு நான் இப்போது விடைகொடுக்கமாட்டேன்; நான் உங்களுடன் பேசுவதில்லை, மகாராஜாவந்துகேட்பாரானால் எல்லாவற்றையும் அவருடன் சொல்வேன் என்றான். உடனே அந்தச் சேவகர்கள் அரசனிடம் சென்று, தங்களுடைய அரண்மனை வாயிலில் ஒருவன் வெகு விசித்திரமான கட்டிலொன்று வைத்துக்கொண்டிருக்கிறான். நாங்கள் கேட்டால் எங்களுடன் ஒன்றும் பேசமாட்டேனென்கிறான். நேராகத் தங்களோடு தான் பேசுவானுமென்றார்கள். அதுகேட்டு அரசனும் அதிக சந்தோஷமடைந்து, நல்லது, அப்படியே அவனைச் சீக்கிரம் இங்கே வரவழையுங்கள் என்றான்.

அரசன் கேட்டுக்கொண்டபடியே சூடாமணி தன் கட்டிலை எடுத்துக்கொண்டு அரசன் எதிரிலேபோய் நின்றான். அவனைப்பார்த்து அரசன், இந்தக்கட்டில் விற்பனைக்குக் கொண்டுவந்ததாவென்றுகேட்க, சூடாமணி, ஆம்! விற்பனைக்கு வந்ததுதானென்றான், ஆ! இந்தக் கட்டில் எவ்வளவு விசித்திரமா யிருக்கிறது? இதைச் செய்தது யார்! என்று அரசன்கேட்டதற்கு அவன் நானே செய்ததென்றுசொல்ல, அரசன் மிகவும்ஆச்சரியப்பட்டு, ஆயின்இதன் விலை என்னவென்றுகேட்க, சூடாமணி, இதன்விலை ஆயிரம்ரூபாயென்றான், ஆ! என்ன? ஆயிரம்ரூபாயா ஒருகட்டில் ஆயிரம்ரூபா என்றிதுவரையில் எவரும் கேள்விப்பட்டதில்லையே! என்று அரசன் வியந்துநிற்க; அச்சிறுவர்த்தகன் அதென்னவோ நான் அறியேன் இதன்விலை ஆயிரம் ரூபாய்க்குக் குறைவில்லை. இஷ்டமானால்வாங்கிக்கொள்ளுங்கள், இல்லாவிட்டால் விட்டுவிடுங்கள்என்று துடியாய்ப் பேசினான். அதுகேட்டுஅரசன் இக்கட்டிலினிடத்தில் ஏதாவது விசேஷமிருக்கும், இல்லாவிட்டால் இவன் இப்படிப்பிடிவாதம் செய்யமாட்டானெனத் தெரிந்து அப்படியே ஆகட்டும் நீகேட்கிறபடி ஆயிரம் ரூபாயே வாங்கிக்கொள் என்று சொல்லி அக்கட்டிலை எடுத்துக்கொண்டான். சூடாமணியும் அதன் விலையாகிய ஆயிரம் ரூபாயையும் பெற்றுக்கொண்டு அரசனைப் பார்த்து, மகாபிரபுவே இப்போது ஒன்றுசொல்லுகிறேன். செவிகொடுத்துக்கேட்கவேண்டும். இக்கட்டிலில் தாங்கள் படுக்கை கொள்ளுகிற முதலிராத்திரி நித்திரைகொள்ளாமல் கண்விழித்துக்கொண்டு ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். விழித்திருந்தால் இதன்பெருமை தங்களுக்கு நன்றாய்த் தெரியவரும் ஒருவேளை மறந்து நித்திரை கொள்ளப்போகிறீர்கள்! எச்சரிக்கையாய் இருங்களென்று சொல்

விவிட்டுப் பணத்தை எடுத்துக்கொண்டு வீட்டுக்குச்சென்றான். அவன் கொண்டுவந்த ரூபாயைப் பார்த்து, அவனுடைய மனையாள்மிகவும் சந்தோஷமடைந்து என் பிராணநாதரே ஏது இவ்வளவுரூபாய் இதெல்லாம் உம்முடையதுதானா இவ்வளவு உமக்குஎங்கேகிடைத்ததுஎன்று கேட்க, சூடாமணி! அடிபேதாய் இவ்வளவும் நம்முடையதுதான் நான் செய்துகொண்டுபோன கட்டிலை வாங்கிக்கொண்டு அதற்காக அரசன் எனக்குக்கொடுத்தவிலை இது நான் இதை எங்கேயோ திருடிக்கொண்டு வந்துவிட்டதாக நினையாதே நான் திருடனல்ல என்று புன்னகைகொண்டு பேசினான் அதுகேட்டு அவளும் உள்ளம் உவந்தாள்.

அன்றிராத்திரியே அரசன் அந்தஅற்புதமான மஞ்சத்தின்மேல் ஏறிப்படுத்து என்ன புதுமையோ பார்ப்போமென்று கண்விழித்திருந்தான். இராத்திரி பத்துநாழிகை யானபிறகு அக்கட்டில் கால்களுள் ஒன்று மற்ற மூன்றுகால்களையும்பார்த்து தோழர்காள், நான் இப்போது இந்த மகாராஜாவினுடைய ராஜ்யத்தைப் பார்த்துவரப்போகிறேன் நீங்கள் இந்த மஞ்சம்சாய்ந்து அரசன் கீழே விழாதபடி ஜாக்கிரதையுடன் உறுதியாய்த் தாங்கிக்கொண்டிருக்கிறீர்களாவென்றுகேட்க, மற்றவைகள் அப்படியே நீபோய் வருமளவும் அரசர்க்கு அபாயமில்லாதபடி நாங்கள் காத்துக்கொண்டிருக்கிறோம். போய்ச் சீக்கிரமாய் வந்துசேர் என்று சொல்லி விடைகொடுத்தன.

அவைகளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அந்தக்கால்படுக்கையறையைவிட்டு வெளியேபோவது அரசன் கண்ணுக்கு நன்றாய்த் தெரிந்தது. கட்டில் கால் அங்கிருந்து புறப்பட்டு ஒரு காட்டிற்குப்போயிற்று. இதுபோனபோது அக்காட்டிலே இரண்டு நாகங்கள் ஒன்றுக்கொன்று கலகப்பட்டுக்கொண் டிருந்தன. அவற்றுள் ஒருநாகம் மற்றொன்றைப்பார்த்து, நான் அரசனைக் கடிக்கப்போகிறேனென்றுசொல்ல மற்றொன்று நீகடிக்கக்கூடாது நானே கடிக்கப்போகிறே னென்றது. அதற்கு அந்தப்பாம்பு மறுபடியும் நீ ஒருபோதும் கூடாது. உனக்குமுன் நான் கட்டில்மேல் தாவி அவனைக் கடித்துவிடுவேனென்றுகூற, இரண்டாவது அதுஒருகாலும் முடியாது. கட்டில்மேல் ஏற உன்னாலாகாது நான் அவருடைய பாதரக்ஷையில் புகுந்துகொண்டிருந்து நாளை காலையில் அவர் பாதரக்ஷை தரித்துக்கொள்ளும்போது, அவர் காலைக்கடித்துவிடுகிறேன் என்று சொல்லிற்று.

அதைக்கேட்டிருந்த கட்டில்கால் உடனே திரும்பி அரண்மனைக்குவந்து, தான்கண்டதும் கேட்டதுமாகிய எல்லாச் செய்திக

ளையும் மற்ற மூன்றுகால்களுக்கும் சொல்லி, நாளை காலையில் அரசன் பாதரக்ஷை தரித்துக்கொள்வதற்குமுன் அதைத் தட்டுவாரானல் அதினின்றும் பாம்பு கீழேவிழக் காண்பார். அப்போது என் பேச்சு மெய்ப்படுமென்றது.

பிறகு மற்றொருகாலானது, இப்போது நான்போய்த் தேசங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருகிறேன் நான் வருமளவும் நீங்கள் கட்டில்சாயாமல் ஜாக்கிரதையாய் பார்த்துக்கொண்டு இருக்கவேண்டுமென்றுசொல்ல மற்றவைகள் அப்படியே ஜாக்கிரதையாயிருக்கிறோம் போய்வாவென்று சொல்லியனுப்பினவுடனே அந்தக்கால் புறப்பட்டு மற்றொரு காட்டிற்குப்போயிற்று. அக்காட்டிலே அரசன் உல்லாசமாய் உலாவும் அரண்மனை ஒன்றுண்டுஅதனருகே அந்தக் கட்டில்கால் போனபோது "இந்த அரண்மனை இப்போது மிகவும் சிதிலமாயிருக்கின்றது இனி அரசன் எப்பொழுதாவது இவ்வரண்மனையில்வந்து நுழைவாரானல் நுழைந்தவுடனே இது இடிந்து அவர்தலையில்விழுந்து அவரைக் கொன்றுவிடும், இந்த அரண்மனையைக்கட்டின பாபமேயொழியபின்பு ஒருபோதும் அவர் இதைப்பழுதுபார்த்ததில்லை. அதன் பயனை இப்போது அடையப்போகிறார்" என்று ஒரு ஆகாசவாணி சொல்லிற்று. அவ்விடத்திற் போயிருந்த கட்டில்கால் அந்த அசரீரி வாக்கைக்கேட்டு மிகவும் பயந்து உடனே ராஜமாளிகைக்குவந்து நடுக்காட்டில் ஆகாசவாணிசொல்லிய செய்தியைத் தன்தோழர்களானமற்றமூன்றுகால்களுக்கும்சொல்லி இப்போது நான்ராஜாவாயிருப்பேனானல் இந்தக்ஷணமே அந்தமாளிகையை இடித்துத்தள்ளிவிடும்படி கட்டளைசெய்துவிடுவேன். அது மிகவும்சிதிலமாகி, அரசன் எப்போ வரப்போகிறாரென்று அவர்தலையில் வீழ்ந்து கொல்லக் காத்திருக்கிறதே என்றுசொல்லிற்று. கட்டிலின்மேல் படுத்துத்தூங்காமலே அரசன் அதைஎல்லாம் கேட்டுக்கொண்டேயிருந்தான் அச்செய்திவாஸ்தவமே. அவ்வரண்மனைகட்டியதுதான்தெரியும் பின்புஒருபோதும்பழுதுபார்த்ததேயில்லை அரசனும்அதைமுற்றும்மறந்துவிட்டான்அவ்விடத்துக்கு அவன்போனதேயில்லை.

அதற்குப்பிறகு மூன்றாவதுகால் இப்போதுநான் வெளியேபோய் அங்குள்ளவிநோதங்களைப்பார்த்துவிட்டுவருகிறேன்நீங்கள்மூவரும் அரசற்குஅபாயம்வராதபடி கட்டிலைக்காத்துக்கொண்டிருங்களென்றுசொல்லி செலவுபெற்றுக்கொண்டு மற்றொருகாட்டிற்குப் போயிற்று அக்காட்டிலே ஒருஆண்டி குடிகொண்டிருந்தான். அக

ற்கருகே ஒரு சத்திர முண்டு. அதில் ஒரு பெண்பிள்ளை வாஸம்ப ண்ணிக்கொண்டிருந்தாள். அவள் ஒரு போர்ச்சேவகனுடைய மனையாள். அந்தச் சேவகன் அவளை அச்சத்திரத்திலேவிட்டு ஒரு வருஷத்திற்கு முன்னேதேசாந்தரம் போய் விட்டான். அவளுக்கு அக்காட்டிலிருந்த ஆண்டியினிடத்தில் ஆசை அதிகம். நாள்தோறும் இராத்திரி அவள் அவனிடத்திற்குப்போய் நெடுநேரம் அவனுடன் பேசிக்கொண்டிருப்பாள்.

அப்படியிருக்க அன்றையதினந்தான் தேசாந்தரம் போயிருந்த அவளுடைய கணவன் திரும்பி வீட்டிற்கு வந்தான். அதனால் அன்றிராத்திரி அவள் அந்த ஆண்டியினிடம்போகச் சிறிது நேரமாகிவிட்டது. நாழிகைசென்று வரக்கண்டு ஆண்டி அவளிடத்தில் சிறிதுவெறுப்புற்றவனாகி, இன்றையதினம் நீ இவ்விடம் வருவதற்கு ஏன் இவ்வளவு தாமதம்? என்றுகேட்க, அவள், அடியாளுடைய தப்பிதமன்று. ஒருவருஷகாலமாய் வெளியேபோயிருந்த என் கணவன் இன்றையதினம் திரும்பி வீட்டுக்கு வந்தான். அதனால் இந்நேரம் தாமதப்பட்டுப் போயிற்று, மன்னிக்கவேண்டுமென்றாள். அதுகேட்டு அந்த ஆண்டி, நல்லது, உனக்கு உன்கணவனிடத்தில் பிரீதி அதிகமா, என்னிடத்தில் அதிகமா? என்று வினவ, அந்தப் பொல்லாச் சிறுக்கி, இதைக் கேட்பானேன்! உம்மிடத்திலேதான் பிரீதி அதிகம் என்றாள். அப்படியானால் நீ இந்தக்ஷணமே வீட்டுக்குப்போய் உன் கணவனுடைய தலையை வெட்டிக் கொண்டுவந்து என் கண்ணெதிரில் காட்டவேண்டுமென்றான்.

அப்படியே ஆகட்டுமென்று அந்தக்கொலை பாதகியானவள் உடனே தான் குடியிருந்த சத்திரத்திற்குப்போய், அங்கேபடுத்து நித்திரைசெய்து கொண்டிருந்த கணவனுடைய கழுத்தைக் கிஞ்சித்தேனும் கூச்சமில்லாமலும், தன்னைக் கைபிடித்த கணவனென்றகண்ணோட்டமில்லாமலும், ஒரேவெட்டாக வெட்டித் துண்டித்துக்கொண்டுபோய், தன்னிடத்தில் ஆசைகொண்டவன்போல நடித்த ஆண்டியின் எதிரிலே வைத்துவிட்டு நின்றாள். அதைப்பார்த்தவுடனே அவன் அவளிடத்தில் அதிககோபங்கொண்டவனாகி, ஆ கொலைக்கஞ்சாதகொடும்பாவி, யாரோ வழிப்போக்கனான என்பேச்சைக்கேட்டுக் கைபிடித்துக் கலியாணஞ்செய்துகொண்ட கணவனைக் கொல்லத் துணிந்த நீ இனி எந்தப் பாதகம் செய்யத்தான்பின்வாங்குவாய்; உன்னைப் பார்த்தாலே பழி சூழ்ந்துகொள்ளும் உடனே ஓடிப்போ; நிமிஷங்கூட என்னெதிரில் நிற்காதே என்று

சொல்லி அவளை உடனே அவ்விடத்திலிருந்து துரத்திவிட்டான். ஆ! பெண்களுடைய கடுநெஞ்சை என்னென்று சொல்லலாம்! அக்கொடியவள், நமதுதலைவிதி இப்படியாயிற்றென்றுஅவ்வளவோடாவது அடங்கிப்போகாமல், அற்றுப்போனதன் கணவன் தலையைத் தூக்கிக்கொண்டுபோய் அவன்முண்டத்தோடு பொருத்திவிட்டு, கோவென்று கதறப் புரப்பட்டாள். அந்தச் சத்திரத்திலுள்ளவர்களெல்லாரும் ஓடிவந்து என்னவிசேஷமென்று கேட்க, அவள் கள்வர்கள் அநேகர் வந்து என் கணவனைக் கொன்று விட்டு ஓடிப்போனார்கள் என்று சொல்லிப் பின்னும் ஓயாமல் புலம்பினாள். அங்கே போயிருந்த மூன்றாவது கட்டில்கால் இந்த ஆச்சரியங்களை யெல்லாம் பார்த்துவிட்டுத் திரும்பி அரண்மனைக்கு வந்து அதன் வரலாறுகளையெல்லாம் மற்ற மூன்று கால்களுக்கும் சொல்லிற்று, இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டே அரசன் இன்னும் கண்விழித்திருந்தான்.

மூன்று கால்களும் வெளியேபோய் வேடிக்கைபார்த்து விட்டுவரவே நான்காவது காலுக்குந் தானும்போய்வேடிக்கை பார்க்க வேண்டுமென்கிற ஆவலுண்டாயிற்று. அதனால் கடைசியாய் அதுவும்மற்ற மூன்றுகால்களினிடத்தில் விடைபெற்றுக் கொண்டு மற்றொருகாட்டுக்குப் போயிற்று. அக்காட்டில் கள்ளர்கள் ஏழுபேர் இருந்தனர். அவர்கள் அப்போதுதான் அரசன் அரண்மனைக்குவந்து அங்கேகட்டிலின்மேல் படுத்துக்கண்வளர்ந்து கொண்டிருந்த ராஜகுமாரியை அவ்வண்ணமே தூக்கிக்கொண்டுபோய் வைத்திருந்தார்கள். அந்தப்பெண் அப்போதும் அப்படியேதான் மெய்மறந்து தூங்கிக்கொண்டிருந்தாள். மேலும் அக்கள்ளர்கள் அரசனுடைய தனசாலைக்கும்போய் அங்கிருந்த திரவியங்களையும் அபகரித்துக்கொண்டு வந்துவிட்டார்கள். அவ்விடச்திற்குப் போன நான்காவதுகட்டில்கால் அச்செய்திகளை யெல்லாம் பார்த்துவிட்டுச் சீக்கிரமே அரண்மனைக்குத் திரும்பிவந்து மற்ற மூன்றுகால்களையும்பார்த்து, தோழர்களே, நமது மகாராஜா மிக புத்திமானாயிருந்தால் இவர் உடனேஎழுந்து வடபுறத்துக்காட்டுக்கு ஓடவேண்டும், அங்கே சில திருடர்கள் நமது ராஜகன்னிகையையும், இவ்வரண்மனையிலிருந்து திருடிக்கொண்டு போன அளவற்ற திரவியங்களையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். உடனே எழுந்தோடினால் சொத்துக்களையும் அவர்களைத் தடையின்றி பிடித்துக் கொள்ளலாம் என்றது.

அந்த வார்த்தையைக் கேட்டதக்ஷணமே அரசன் எழுந்து தன்சேவகர்களையும் சில போர்வீரர்களையும் கூட்டிக்கொண்டு காட்டுக்குப்போகப் புறப்படும்போது முதலாவது கட்டில்கால் சொன்ன பேச்சை நினைத்துத் தன் பாதரக்ஷையைத் தூக்கித்தட்ட, அதினின்றும் ஒரு பாம்பு சுருட்டிக் கொண்டு கீழே விழுந்தது. (மற்றொரு பாம்பு அரண்மனைக்கு வராமல் அப்படியேகாட்டுக்கு ஓடிப்போய்விட்டது.) இதனால் முதல் கட்டில்கால் சொன்னபேச்சு உண்மையென்று அரசனுக்குத் தெளிவாய்த் தெரிந்தது.

அவன் காட்டிற்குப்போனபோது அங்கே நான்காவது கட்டில்கால் சொன்னபடியே திருடர்கள் தன் மகளையும்திரவியங்களையும் வைத்திருக்கக்கண்டு, பெண்ணையும் பொருளையும் அப்படியே அரண்மனைக்குக் கொண்டுவந்தான். அரசன்மகள் அப்போதும்தூங்கிக்கொண்டிருந்தாள்; தனக்கு இவ்விதமான ஆபத்து நேரிட்டதென்று அவளுக்குச் சிறிதும் தெரியாது. இதனால்நான்காவதுகால் சொன்னபேச்சும் உண்மையாயிற்று. அந்தத் திருடர்கள் மட்டும் அவன் கையில் அகப்படவில்லை; பல போர்வீரர்களோடு அரசன் வரக்கண்டு மூலைக்கொருவராய் அவர்கள் ஓடிப்போனார்கள்.

பின்பு அரசன் தனதுபழைய அரண்மனையை இடித்துவிடும்படி பல வேலைக்காரர்களை அனுப்பினான். அவர்கள் போனபோது அது தானே இடிந்துவிழக் காத்திருந்தது. அப்போது யாராவது உள்ளே நுழைந்திருந்தால் அவன் அந்தக்ஷணமே அதன்கீழ்அகப்பட்டுக்கொண்டு நசுங்கிப்போயிருப்பானென்பதற்குச் சந்தேகமில்லை. அதைக்கண்டு இரண்டாவதுகால் சொன்னதும் உண்மையேயெனத் தெரிந்து கொண்டார்கள்.

மறுநாள் அரசன் ராஜசபையில் உட்காந்திருந்தபோது, இராத்திரி பல திருடர்கள் வந்து சத்திரத்தில் ஒரு போர்வீரனைக் கொன்று விட்டதாக முறையிட்டார்கள். அதுகேட்டு அரசன் அந்தப் போர்வீரனுடைய மனைவியை வரவழைத்து, உன்கணவனைக் கொன்றது யாரென்றுவிசாரிக்க, அவள், கள்ளர்கள்வந்துகொன்றுவிட்டார்கள் என்றாள். அதைக் கேட்கவே அரசனுக்கு அவளிடத்தில் அதிககோபமுண்டாயிற்று. ஏனெனில், மூன்று கட்டில் கால்களும் சொன்னபேச்சு உண்மையாயிருப்பதனால் மற்றொரு கால்சொன்ன பேச்சும் உண்மையாகவே இருக்குமென்று அவன் உறுதியாக நம்பினான். அதனால் கொலையுண்டுபோன வீரனுக்கு நடத்தவேண்டிய கிரியைகளையெல்லாம் கிரமமாக நடத்துப்படி இ-

டம் செய்து, உடனே நடுகாட்டில் ஒரு பெருந்தீ வளர்த்தி அதில் கொலைக்கஞ்சாத பெரும்பாவியான அக்கொடியவளைத் தள்ளி எரித்து விடக் கட்டளையிட்டான்.

பிறகு இப்படிப்பட்ட அற்புதமான கட்டிலொன்றைக் கொடுத்துத் தன் உயிரைக்காத்த கனவானான சூடாமணியைவரவழைத்துத்தன்பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு, குழந்தாய், உன்னுடைய கட்டிலில்லாவிட்டால், இன்று நான்பாம்புகடித்து இறந்துபோயிருப்பேன். ஒருவேளை அதற்குத் தப்பினாலும், பழைய அரண்மனை இடிந்து தலையில் விழஅதற்குத் தப்பாமல் அவசியம் மாண்டுபோயிருப்பேன். இதற்குமுன், அது அவ்வளவு அபாயஸ்திதியிலிருக்கிறதென்பது எனக்குத் தெரியாது. என்மகளும் அநியாயமாய்த் திருடர் கையில் அகப்பட்டுப்போயிருப்பாள். இந்தப் படுபாவியான பெண்பிள்ளையும் பிழைத்திருக்கும்படியாகும். இப்படிப்பட்ட தீமைகள் ஒன்றும் நேரிடாமல் நான் உன்கட்டில் கால்களால் காக்கப்பட்டேன். ஆதலால் உன்னிடத்தில் எனக்கு அபரிமிதமான அன்பு உண்டாயிற்று. நாளையதினம்முழுதும் நீஎத்தனை வண்டிகள் ஓட்டிக்கொண்டு வந்தாலும், அவைகளில் நீகொண்டுபோகக்கூடிய திரவியம் நான் உனக்குத்தருகிறேன் என்றான்.

அப்படியேயாகட்டுமென்று சூடாமணி மறுநாள் காலையில் அளவற்றவண்டிகளை ஓட்டிக் கொண்டுவந்து ஒவ்வொருவண்டியிலும்வேண்டுமளவு பொன்வெள்ளிநாணயங்களையும், ஆடையாபரணங்களையும் ஏற்றிக்கொண்டு வீடுபோய்ச்சேர்ந்தான். அந்தவண்டிகளைப் பார்த்தபோது அவன்மனையாளுக்கு உண்டான ஆநந்தத்துக்கு அளவில்லை. "என்பிராணநாதர் ஒரேஒருவாரந்தான் வருந்திவேலை செய்தாராயினும் அதனால் அளவற்ற பொருள்சம்பாதித்துவிட்டார்." என்று மிகவும் மகிழ்ச்சியடைந்தாள். பின்பு அவர்கள் அந்தத்திரவியத்தைக்கொண்டு வேண்டியகாணி பூமிகளும் தோட்டம் துரவுகளும் வாங்கிக்கொண்டு வெகுசுகமாக நெடுநாள் களிப்புற்றிருந்தார்கள்.

---

## அரசனும், அரசியும், சந்நியாசியும்.

கர்வபீடம் என்னும் ஒருதேசத்தில் தனியரசுபுரிந்துகொண்டுவந்த அரசனொருவன்செல்வச்செருக்கில் மூழ்கினவனாகிஇவ்வுலகத்தில்தான் எக்காலத்தும் ஜீவித்திருப்பான்போல நடந்துவந்தான்.

அவனுடைய மனைவியாகிய இராஜஸ்திரீயும் கணவனைப்போலவே அகங்காரத்துக்கு ஓர் பெரும் பீடமாயிருந்தனள். ஆண்பிள்ளை யாகிய அரசனே இறுமாப்பில் தலைசிறந்து மதிமயக்கங்கொண் டன னென்றால், மடமையை ஓர் குணமாகக்கொண்டபெண்பாலா கிய அவன் மனைவி அவ்வாறிருந்தன ளென்பதற்குக் காரணமும் வேண்டுமோ? "அரசனெவ்வழி அவ்வழிக் குடிகள்" என்னும் முதுமொழிக்கிணங்க, அவ்வூர்க் குடிகளும்தேசத்தின் அனித்திய த்தையும், செல்வத்தின்நிலைமையையும் முற்றும் அறியாதவராகி இறுமாந்திருந்தார்கள், இப்படியிருக்கையில் உலகவாழ்க்கையின் அநித்தியத்தைஉள்ளபடியறிந்த ஒருசந்நியாசி அவ்வூர்வழியாகப் போகநேரிட்டபோது அவவூரரசன் முதல்யாவரும்கொண்டிருந் த மதிமயக்கத்துக்காகப் பெருந்துக்கமடைந்து அவர்களுக்கு நன் னெறியைக்காட்டும்பொருட்டு அன்றிரவு இராஜனுடைய அரண் மனைக்குள் ஒருவருக்குந்தெரியாது பிரவேசித்து ஓரிடத்தில் புலித் தோலைக்கீழேவிரித்து ஓர்கபாலத்தைப்பக்கத்தில்வைத்தும் படுத் துக்கொண்டிருந்தார். இவரைக்கண்டகாவலாளிகள் "ஓய்! நீர்என் இங்குவந்துபடுத்துக்கொண்டிருக்கிறீர்? இதை என்னவென்று நினைத்தீர்? எழுந்தோடிப் போம்போம்" என்று அதட்டினார்கள் அதற்கு அவர்சாந்தமாய் "இதை ஒருபொதுஸ்தானமான சத்தி ரம் என்று நினைத்து நான்வந்துபடுத்துக்கொண்டேன்" என்றார். அவர்கள் இதைக்கேட்டுக் கலகலவென்று நகைத்து, "ஓய்கண்ணில் லாப்பாவி! இதுஇராஜன் அரண்மனையல்லவா? இதைவிட்டு உட னே ஓடிப்போம்" என்றார்கள். இந்தப்படி அவர்கள் அதட்டிக் கொண்டிருக்கையில் தன் சயன அறைக்குப் போய்க்கொண்டிருக் கும் இராஜஸ்திரீ அங்குவந்துநின்று நடந்த விருத்தாந்தத்தைக் கேட்டுசந்நியாசியைப்பார்த்து "பளாபளா! நன்று நன்று! சந்நி யாசியே! இதை நீர் ஒருசத்திரமென்று நினைத்த என்னமதியோ? என்றனள். அதைக்கேட்ட சந்நியாசி "அம்மே! இந்த அரண்மனை யாருடையது? என்றார்.

அரசி:—இராஜாதி ராஜராகிய எனது பர்த்தாவுடையது.

சந்நியாசி:—உன்பர்த்தாவுக்குமுன் இவ்வரண்மனையில் ஜீவி த்திருந்தவர் யார்?

அரசி:—என்கணவருக்குமுன் அவர்பிதா இதிலிருந்தார்.

சந்:—அதற்குமுன் இந்த அரண்மனையாருடையது?

அர:—அதற்குமுன் இது ஒருவேற்றரசனுடையது. அவனை யுத்தத்தில் வென்று, இதையும் இத்தேசத்தையும் அவர்கைப்பற் றிக்கொண்டார்.



சங்:—அதற்குமுன் இதில் யாரிருந்தது ? இது யாருடையது?

இவ் வினுக்களைக் கேட்டு மனம் சகியாதவளாகி இராஜஸ்திரீ "அதற்குமுன் அவனப்பன்; அதற்குமுன் அவனப்பன்" என்று பத்துதடவை வாயில் ஈ நுழையாதபடி பரபரவென்று சொல்லி முடித்தாள்.

சந்நியாசி:—அம்மே! உனக்குப்பிறகு இம்மாளிகையிலிருப்பவர்யார் ?

அரசி:—எனது புத்திரன், என்பௌத்திரன்முதலினோர்கள்.

சந்நி:—அம்மா ! சுமார் ஆயிரவருஷகாலமாய் இதைக்கையாண்டு இதில் இத்தனைபெயர் குடியிருந்தார்கள். இன்னும் இதில் எத்தனையோ பெயர் குடியிருக்கப் போகிறார்கள். இத்தனைபெயருக்கும் பொதுவானவாசஸ்தலமாகவிருக்கும் இவ்விடத்தைச் சத்திரமென்று கூறுது வேறென்னென்று கூறலாம் என்றார்.

இவர்களிந்தப்படி பேசிக்கொண்டிருந்ததை அடுத்த அறையிலிருந்த அரசன் கேட்டுக்கொண்டிருந்து அவ்விடத்திற்கு வந்து அச்சந்நியாசியைப் பார்த்து அவர்கையிலிருந்த மண்டையோட்டைச் சுட்டி இதையேன் வைத்துக்கொண்டிருக்கிறீர் ? என்றான்,

சந்நியாசி:—(துறவிக்கு வேந்தன் துரும்பு என்றபடி சிறிது மஞ்சாமல் இச்சந்நியாசி அரசனை நோக்கி) அரசே! நான் மயானத்தின் வழியாக வந்து கொண்டிருக்கையில் இக்கபாலத்தைக்கண்டேன். இது மகாராஜனுகிய உன்னையொத்த ஒருபிரபுவினுடைய கபாலமோ? அல்லது என்னைப்போன்ற ஒரு ஏழையின் மண்டையோடோ என்ற சந்தேகம் பிறந்தபடியால், அதை அவகாசமாய்ப் பரீக்ஷித்துப் பார்ப்பதற்காக வைத்துக்கொண்டிருக்கிறே னென்று சொல்லி அவ்வரசனும் பட்டவர்த்தனியும் சிறப்பெய்த வேண்டுமென்று உள்ளத்திற் கருதி அவர்களை நோக்கினர். உயிர் நீங்கிய பிறகு அரசனும் ஏழையும் ஒருபடித்தாய் விடுகின்றனரேயன்றி எவ்வளவும் வித்தியாசம் தோன்றவில்லையல்லவா? என்று நினைத்தவுடனே அவ்வரசனும் அவன் மனைவியும் சந்நியாசியின் வார்த்தைகளினுலும் அவர் கிருபாநோக்கத்தினுலும் ஞானோதயமடைந்து அவரை நமஸ்கரித்து அவருக்கு வேண்டிய உபசாரத்தைச் செய்து அன்று முதல் உலகவாழ்க்கையின் அநித்தியத்தையும் யாக்கை-செல்வமுதலியவற்றின் நிலையாமையையும் உணர்ந்துசாத்மீககுணமுடையவர்களானுர்கள். நாளாவர்த்தியில் அவ்வூர்க் குடிகளும் அங்ஙனமே ஒழுக்கத்திற் சிறந்தார்கள். நித்தியா நித்திய வஸ்து விவேகம் பெற்ற இச்சந்நியாசியின் நல்வருகையால், சர்வபீடம்

என்னும்பெயர்பெற்றிருந்த அப்பதி சாத்மீசபிட மென்னும் பெயரைச் சிறிது நாளில் வசிக்கப்பெற்று விளங்கிற்று.

---

## இந்துதேசத்துப் பூர்வீக அரசனும், அவர்களுடைய நீதியும்.

பூர்வத்திலிருந்த இந்து அரசர்கள் மன்னுயிரைத் தம்முயிர் போலப் பாவித்து மநுநீதிமுறை வழுவாமல் செங்கோல்செலுத்தி வந்தனர். அவர்கள் தாங்கள் குடிகளுக்கு வரும் சுகத்துக்காகச் சந்தோஷித்தும் துக்கத்துக்காக மனங்கவன்றும் வாழ்ந்துவந்தார்கள். அவர்கள் புவியை அரசாண்டு பிரஜைகளைப் பரிபாலித்துவருவது பாவகாரியமென்றே துணிவுகொண்டிருந்தனர். ஏனெனில், தம்குடிகளிடத்தே நிகழும் நல்லன தீயனயாவையும் அறிந்து அவற்றிற்குத் தக்கபடி நடத்துவது அசாத்தியமாகையால் புத்தி பூர்வகமாயும் அபுத்தி பூர்வகமாயும் தமக்குப் பாவம் சம்பவிக்குமென்றும், அதனால் மீளாநரகத்துக்கு ஆளாகவேண்டியிருக்குமென்றும் அவர்கள் மிகவும் பயந்து அரசுபுரிவது பல விதத்திலும் பெருந்துக்கத்துக்கு இடமென்றே நிச்சயித்திருந்தார்கள். ஆகையால்,

> "எல்லார்க்குமெல்லா நிகழ்பவையெஞ்ஞான்றும்
> வல்லறிதல்வேந்தன்றொழில்"

என்னும் திருக்குறள் வாக்கியத்தின்படி அவ்வரசர்கள் தம்பிரஜைகளிடத்து நிகழ்வன எல்லாவற்றையும் அவர்கள் வாய்மொழியைக்கொண்டே உண்மைகண்டு நீதிசெலுத்துவது கூடாமையென்றுணர்ந்து, நம்பிக்கையுள்ள ஒற்றர்களை விடுத்து அல்லும்பகலும்அங்கங்கு நடக்கும் அந்தரங்க விஷயங்களையும் தெரிந்து தக்கவாறு நடத்திவந்தார்கள் அவ்வொற்றர்களைநம்பாமல் அவ்வரசர்கள் தாமும் ஒவ்வோர் நாள் அர்த்தராத்திரியில் மாறுவேடம்பூண்டு தனியேபோய் ஊரில் நிகழ்வனவற்றைக்கண்டறியும்படி நகர்சோதனை செய்துவந்தார்கள். இவ்வாறுபலவுபாயங்கள் செய்தும் சிலவிஷயங்களில் உண்மையறிவது மிகவும்துர்பலமாயிருந்தபடியால், பாவத்துக்கே பலவழியிலும் இடமாயுள்ள ராஜ்யபாரம் முற்றிலும் வேண்டுவதில்லையென்றே புத்திமான்கள் அரசவாழ்க்கையைவெறுத்து வந்தார்கள் என்பதற்கோர் உதாரணம் கூறுகிறோம்.

சேரமான்பெருமாணாயனார்என்பவர் இளவரசராயிருக்கையில் அவரது தந்தை நெடுநாளாக ராஜபரிபாலனஞ் செய்து வந்து பின்னர் தேகவியோகமடைய, மந்திரிமுதலானோர் இளவரசரை நோக்கி அவ்வரசுரிமையைக் கைக்கொள்ளவேண்டுமென்றுவேண்டிக்கொண்டனர். அவ்விளவரசர் பாவத்துக்குப்பயந்தவரும், தெய்வபக்தி யுள்ளவருமாகையால், பிரஜைகளிடத்தில் நடக்கும்நன்மை தீமைகளைக் கண்டுணர்ந்து நீதிசெலுத்துவது கூடாமையென்றும் குடிகள் சொற்சாதுரியத்தால் மெய்பொய்யாகவும், பொய்மெய்யாகவும் விளங்கி, அதனால் தனக்குப் பெரும்பாவம் சித்திக்குமென்றும் பயந்து அவர்கள் வேண்டுகோளுக்கிசையாது மறுத்தனர்.

பிறகு ஈசுவரன், "குடிகள் ஆங்காங்கு நடத்தியனவும், பேசிக்கொள்ளுமவைகளுமாகிய விஷயங்களையெல்லாம் நீஇருந்தவிடத்தில் அறியுமாறு உனக்கு அனுக்கிரகஞ்செய்தோம். நீ அரசைக் கைகொள்" என்று உறுதிமொழி கூறியபிறகு, அச்சேரமான் ராஜ்யத்தைக் கைக்கொள்ளலாயினர். ஆகையால் அவருக்குக் கழறிற்ற றிவார்என்பதற்குத்தன் அரசாக்ஷிக்குட்பட்ட உயிர்வர்க்கங்கள் ஆங்காங்கு இரகசியமாய் (கழற்றிற்று)பேசிக்கொள்பவையனைத்தும் அறியும் சக்தி எய்தப்பெற்றவரென்பது பொருள். அவ்வரசர்கள் இவ்வளவுபயந்து அரசுபுரிந்து வந்தமையாலேதான் ஈசுவரனும் அவர்கட்கு முன்னின்று உதவிசெய்துவந்தார். குடிகளோ அரசனைத்தெய்வமாகப் பாவித்து அவனையன்றித் தங்களுக்கு வேறே புகலிடமில்லையென்றேகருதிவந்தார்கள். "அனைவோர்க்கும். தெய்வம்இலை முகப்பைம்பூணிறை" என்னும்பிரயாணமே இவ்வுண்மையை நாட்டவல்லது. அவ்வரசர்கள் நீதிவழுவாமல் செய்து வந்த அரசும், அதுவிஷயமாக ஈசுவரன் அவர்களுக்கு முன்னின்று புரிந்த அற்புதமும் அடியில்வரும் சரித்திரங்களால் நன்குவிளங்கும்.

பூர்வம் மதுராபுரியை அரசாண்டுவந்த பாண்டியவமிசத்தரசர்களிலொருவன் தன்நாட்டிலுள்ள பிரஜைகளின் சுகதுக்கங்களைத் தன்னதாகப் பாவித்து மநுநீதிமுறைவழுவாமல்ராஜ்யபரிபாலனஞ் செய்துவந்தனன். அவன் தன்பட்டணத்தில் நடக்கும் சகலசமாசாரங்களையும் ஒற்றர்களா லறிந்துகொள்வது மல்லாமல் அவர்களை நம்பாமலே தானும் ஒவ்வோர்நாள் அர்த்தராத்திரில் மாறுவேடம் பூண்டு ஒருவருக்குந்தெரியாமல் அப்பட்டணத்தில் ஆங்காங்கு நடக்கும் அந்தரங்கமான விஷயங்களை அறியும்பொருட்டு நகர்சோதனை செய்துவந்தான். அவ்வாறு அந்தப்பாண்டியன் செய்துவருகையில் ஒருநாள் அர்த்தசாமத்தில்அப்பட்டணத்தி

னுள்ளஒருபிராமணன் வீட்டிற்குள்ளுண்டானபேச்சுக்குரல் அவ
ன் செவியிற் புகுந்தது. அவ்விஷயம் யாதென்று பாண்டியன்
அவ்வீட்டின் சுவர்க்குச் சமீபத்தில் ஒன்றியிருந்து கேட்டனன்.
அப்போது அங்குநடந்தது என்னை யெனின், அவ்வீட்டுப் பிரா
மணனுடைய கற்பிற் சிறந்த மனையாளானவள் காசிக்குப்போக
உத்தேசித்துச் சர்வபிரயத்தனத்தோடு சித்தமாயிருக்கும் தன்நா
யகனை நோக்கி, நாயகரே! தேவரீர் காசியாத்திரைபோக இருக்கி
ன்றீரே, உம்மை யன்றி எனக்கு வேறோர் ஆதரவும் துணையுமில்லை
யே, நானெங்ஙனம் உம்மைவிட்டுத் தனித்துயிர்வாழ்வேன்? இக்
குழந்தைகளை எவ்வாறு பாதுகாப்பேன்? என்று மிக்க மனோது
க்கத்துடன் கூற, அந்தனன்-பெண்ணே! நீ என் மனக்கவலையுறுகி
ன்றனை? இப்பட்டணத்திலுள்ள ஜனங்கட்கெல்லாம் பாண்டியனே
தாயும் தந்தையுமாகையால் அவன் உனக்குயாதும் குறைவுவரா
மல் காப்பாற்றுவான், நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் என்று
மனையாட்டிக்கு வேண்டிய சமாதானங்கள் கூறிக்காசிக்குப்போய்
விட்டான். பாண்டியன் அங்கு நிகழ்ந்த யாவற்றிலும் கேட்டுக்
கொண்டு தன் அரண்மனைபோய்ச் சேர்ந்தான். அன்று மறுநாள்
முதல் பாண்டியன் அந்தப் பார்ப்பன மாதுக்கு அன்னவஸ்திர
முதலானவை குறைவறக்கொடுத்து சம்ரக்ஷணை செய்துவரவேண்
டுமென்றும், அவ்வாறு அவள் ஒருத்திக்கு மாத்திரம் அவைகளை
நடப்பித்துவருவதனால் தன்பட்டணத்திலுள்ளார் யாவருக்குந்த
ன்னிடத்தில் துர்ப்பாவம் ஜனித்து அதனால் தனக்கு அபகீர்த்தி
யுண்டாகுமென்றும், அவ்வாறு சம்பவிக்காவண்ணம் அப்பட்ட
ணத்திலுள்ள பிராமணர்களுக்கெல்லாம் அதுபோலவே உபகரித்
துவரவேண்டுமென்றும் தனக்குள் தீர்மானித்து அவ்வூர்ப் பிரா
மணர்கள் யாவருக்கும் ஒரேபடித்தாக அன்னவஸ்திர முதலான
வற்றை நடத்திக்கொண்டு வந்தான். மேலும் அந்தப் பாண்டியன்
நகர் சோதனைக்குப் புறப்பட்டு வரும்போதெல்லாம் மேற்கூறிய
பார்ப்பனக் குலமாதின் வீட்டண்டை தவறாமல் வந்து நின்று
சோதித்துக் கொண்டுபோவான். இங்ஙனம் நிகழுங் காலத்தில்,
ஒருநாள் இரவில் பாண்டியன் அவ்வீட்டண்டை சோதனைக்குவந்
தபோது, முன் காசியாத்திரைக்குச்சென்ற அந்தணன் அன்றுதா
ன் திரும்பிவந்து நெடுங்காலமாய் மனைவி மக்களைப் பிரிந்திருந்த
ஆராமை மிகுதியால் அர்த்த ஜாமமாகியும் நித்திரைவராமல் இல்

லாளுடன் வீட்டுக்குள் பேசிக்கொண்டிருந்தான். அந்தப் பிராமணன் காசியினின்றும் திரும்பி வீடு வந்துசேர்ந்த சங்கதிபாண்டியனுக்குத் தெரியாதாகையால், மனதில் ஆசங்கையுற்று, இவ்வீட்டில் புருஷர் குரலொலிகேட்கின்றதே, ஈதென்ன அதிசயம், இப்பார்ப்பனமாதின் நாயகன் காசிக்குபோயிருக்கின்றனனே, நம்முடைய நீதிதவறிப்போய்விட்டதுபோலிருக்கின்றதே, நம்மையே பெருங்காவலாக நம்பிப் பிராமணன் தன்மனையாளைத் தனியேவிட்டகன்றானே, நாமிதற்கென் செய்வோம் என்று தீராக்கவலைகொண்டவனாய், நல்லது, இதன் உண்மையையறிவோம் என்றுதீர்மாய்க்கேட்டதுமல்லாமல் தன்மனையாட்டி மீது அனுமானமுங்கொண்டான். உடனே பாண்டியன், குரலொலியால் முன் காசியாத்திரையின்பொருட்டுச் சென்ற பிராமணனே யென்று ஐயமறத் தெரிந்துகொண்டு மனந்திடுக்கிட்டு நாம் என்ன காரியம் செய்தோம், மோசம்வந்துவிட்டதே, நாம் கதவை இப்பாதிராத்திரியில் இடித்ததனால் பிராமணனுக்குத் தன்மனையாளிடத்தில் சந்தேகம் உண்டாகுமே, இப்பெருஞ் சங்கடத்திற்கு நாமல்லவோ காரணமாய் நின்றோம், நாம் தீரயோசித்துச் செய்யாமல்அவசரப்பட்டமையாலன்றோ இப்போதுமனக்கிலேசமடைய வேண்டிநேரிட்டது.

"எண்ணித்துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவமென்பதிழுக்கு."

என்னும் தெய்வப்புலமைத் திருவள்ளுவர்மொழி நமக்கே அனுபவமாயிற்றென்று சஞ்சலமுற்று இத்தப்பிதஞ் செய்தற்குக் கருவியாயிருந்தன இக் கையே யாதலால் இதனை இனிவைத்திருத்தல் கூடாது என்று உடனே தன் முன்கையை வாளினால் வெட்டிஅவ்விடத்திலேயே எறிந்துவிட்டு. அவ்வீதியிலுள்ள மற்ற வீட்டுக்கதவுகளையும் தட்டிக்கொண்டே தன் அரண்மனை போய்ச்சேர்ந்தான். மறுநாள் பாண்டியன் இராத்திரி நிகழ்ந்த விஷயங்களை மந்திரி முதலானவர்களுக்குத் தெரிவித்தான். அவர்களால் அந்தப் பிராமணன் தன் மனையாளிடத்திற்கொண்ட சந்தேகந்தீர்ந்து மிகவும் ஒற்றுமையாய் வாழ்ந்திருந்தனன். பிறகு அப்பாண்டியன் பொன்னால் கைசெய்வித்துக்கொண்டான். அன்றுமுதல் அப்பாண்டியனுக்குப் பொற்கைப் பாண்டியனென்னும் பெயர்வழங்கி வந்தது.

* * * * * *

குலோத்துங்க பாண்டியன் தன்குடிகளுக்குத் தன்னாலும்தன்பரிவாரத்தாலும் பகைவராலும் கள்வராலும் பிற உயிர்களாலும் வரத்தக்க ஐந்துவகையான பயத்தையும் நீக்கி, மன்னுயிரைத் தன்



னுயிர் போலப்பாவித்து மநுநீதி முறைவழுவாமல்மதுரா நகரில் அரசியற்றிவரும் நாளில் பாண்டிநாட்டிலுள்ள திருப்புத்தூர்என்னும் நகரிலிருந்து ஒரு பிராமணன் கைக்குழந்தையோடுங் கூடிய தன்மனைவியை அழைத்துக்கொண்டு மதுராபுரியிலுள்ள தன்மாமன் வீட்டுக்குப்போகும் பொருட்டுப்பிரயாணப்பட்டான். வரும் வழியில் அவன்மனையாள் தாகவிடாய்கொண்டு ஜலம் கேட்டமையால்அவளை அக்காட்டிலுள்ள ஒருபெரிய ஆலவிருக்ஷநிழலில் இருத்தி நீர்தேடிக்கொண்டு வரப்போனான். அப்போது, அந்த ஆலமரத்தில்நெடுநாளைக்குமுன்னர் எவனோ வேடுவனால் எய்யப்பட்டுதைத்துக்கொண்டிருந்த ஒரு அம்பானது காற்றால் அலைப்புண்டு வீழ்ந்து அம்மரத்தடியிலிருந்த பிராமணமாதின்வயிற்றில்தைத்துருவ, அவள் உயிர்துறந்தாள். அச்சமயத்தில் ஒருவேடன் அம்பேறிட்டவில்லையுடையவனாய் வெயிலுக்கு இளைபாறும்பொருட்டு அந்த ஆலமரத்தடியில் ஒருபுறத்துவந்து நின்றான். முன்னே தண்ணீர் தேடிக்கொண்டு வரப்போன பிராமணன் திரும்பி வந்துஉதிரவெள்ளத்தில் வீழ்ந்துமாண்டுகிடக்கும் தன்பத்தினியைக்கண்ணுற்று, திடுக்கிட்டு ஆ! ஆ! என் இன்னுயிர்க்காதலியே! என்கண்மணியே! கற்பகத்தின் பூங்காம்பே! மாதரசே! வனிதாரத்னமே! உனக்கு இவ்வாபத்து எவ்வாறு சம்பவித்தது? நான் இக்கொடுஞ்செயலை எவ்வண்ணங்கண்டு மனஞ்சகிப்பேன்? என்றுமத்தினால் அலைப்புண்ட தயிர்போல் கலங்கி மனந்தளர்ந்து ஐயோ! ஐயோ! இப்பெண்பழிக்குக் காரணமாயிருந்தவர்யாவர்? என்று அலறிநான்கு புறத்திலும் சுற்றிப்பார்க்கையில், வில்லேந்தி அருகில் நிற்கும்வேடனைக் கண்டு, இவனே நிரபராதியாகிய என்மனையாட்டியைக் கொன்று பழியேற்றவன் என்று தனக்குள் நிச்சயித்து, அவ்வேடனைநோக்கி அடா வேடா! மஹாபாபீ! நீயேன் இல்லாளைக்கொலைபுரிந்தனை, அவ்வாறுசெய்தும் ஒன்று மறியாதவன் போல் நாடகங்காட்டி வாய்பேசா திருக்கின்றனை என்று முறையோ! எனவாய்விட்டுக்கூவினான். அம்மா! அம்மா என்று அலறித்தாய்முகத்தை நோக்கி விம்மிவிம்மி யழுங்குழந்தையைப் பலகாலும் முத்தமிட்டு, தெய்வமே! தெய்வமே! இப்படியும் செய்வாயா? என்று அவ்வந்தணன் மேன்மேலும்கதறிக் கூவித்துயரக்கடலிலாழ்ந்தனன். பிறகு பால்வேண்டியழும் தன்குழந்தையைச் சுற்றத்தாரிடம் சேர்க்கும்படி அவ்வழியேசென்ற சிலரிடத்தில் ஒப்புவித்துவிட்டு; இறந்தமனையாளைத் தன் முதுகிலெடுத்துக் கொண்டு, வேடுவனைமடிபிடித்திழுத்துக்கொண்டே பாண்டியன் அரண்மனைவாயிலை அடைந்து பிரேதத்தை எதிரேயிட்டு,

"கோமுறைகோடாக் கொற்றவரேறே முறையேயோ
தாமரையாள்வாழ்தண் கடிமார்பா முறையேயோ
மாமதிவானோன் வழிவருமைந்தா முறையேயோ
தீமைசெய்தாய்போற்செங்கைகுறைத்தாய் முறையேயோ."

என்று பலருங்கேட்கும்படி ஓவென்று அலறி முறையிட்டு, கோல் கோடாமல் அரசுசெய்யும் பாண்டியன் இரவில்துயிலுங்காலத்திலும் அவனுடைய ஆக்ஞா சக்கரமானது நீதிவழுவாமல்பிரஜைகளையெல்லாம் காக்கும் வல்லபமுடையது என்னும் உண்மை என்மட்டில் பொய்த்தது யாது காரணமோ ? என்று கூக்குரலிட்டழுதான். அங்குஇருந்த காவலாளர்கள் பாண்டியனிடம்போய், மண்டலேஸ்வரா ! ஒருவேதியன் தன் மனையாளைக் கொலைசெய்தானென்று ஓர் வேடனைக் கொண்டுவந்து நம் அரண்மனைவாயிலில் கூக்குரலிட் டழுகின்றான் என்று கூறினர். அதுகேட்ட குலோத்துங்க பாண்டியன் உள்ளம் நடுநடுங்கி, நான்செய்யும் அரசு மிகவும் நன்று ! நன்று ! என்று சிந்தாகுலனாய் வெளியேவந்து பிராமணனை நோக்கி, உனக்குற்றதுயர் யாது ? என்று வினவினான். அப்போது பிராமணன் பாண்டிவேந்தே ! இன்று நான் இந்த என் மனையாளை அழைத்துக்கொண்டு வருகையில் வழியிலே தாகவிடாய்க்கு நீர் கொண்டு வரும்பொருட்டு இவளை ஓர் ஆலமரத்தடியில் நிறுத்திப்போனேன், நான் திரும்பிவருவதற்குமுன் இவ்வேடன் இவளைக் கொன்று பக்கத்தே நின்றிருந்தானென்று கூறினான். பாண்டியன் வேதியனுடைய வாய்மொழியை உட்கொண்டுவேடனைநோக்கி, நீ விளைந்ததை ஒன்றும் ஒளிக்காமல்கூறுகஎன்ன, ஐயோ! எம்மரசே அடியேன் இன்று இளைப்பாறும் பொருட்டு அந்த ஆலமரத்தின் ஒருபுறம்வந்துநின்றேன், அவ்வளவேயல்லாமல் நான்இம்மாதைக் கொன்றேனல்லேன், கொன்றவர்களையும் பார்த்திலேன் என்று வேடன் சொன்னான். அங்கிருந்த மந்திரிமுதலானோர்வேடனைநோக்கி, அப்படியாயின் இம்மாதின் சரீரத்தில் அம்பேறுண்டவகை எப்படி ? என்று வினவவும், அம்புதைத்துருவியது மெய்யே, ஆனால் நான் அதுவிஷயத்தைக் குறித்து ஒன்றுமறியேன்என்றுவேடன் கண்ணீர் சோரமொழிந்து நின்றான். இப்படிப்பட்டகொடுங் கொலை புரிந்தஒருவன் செய்தவன் நானல்லேன்என்றுசொல்லாமல் நானேதானென்று ஒப்புக்கொள்வானோ ? அங்ஙனஞ்சொல்லானாகையால் இவனை நன்கு தண்டித்தாலன்றி உண்மை வெளிப்படமாட்டாதென்று மந்திரிகள்யாவரும் ஒரே அபிப்பிராயமாகச்சொ

ன்னார்கள் பாண்டியன் அவ்வாறேதண்டித்து உண்மைதேருங்கள் என்றுதண்டஞ்செய்வோர்க்குக் கட்டளையிட்டான். அவர்கள் அரசன் ஆணையின்படியே தண்டஞ்செய்துகேட்டும் அவவேடன்முன் சொன்னவண்ணமே சொன்னான். தண்டஞ்செய்வோர் பின்னும் அதிகமாகத் தண்டஞ்செய்துகேட்டும், வேடன் முன் மொழிக்கு மாறுபாடில்லாமலே மொழிந்துவந்தான் பின்புபாண்டியன்கிலேச முற்று ஒன்றுந்தோன்றாதவனாய், இவ்வேடனோ மிருதியாகச்செய்யும்தண்டத்துக்கும்அஞ்சாமல் ஒரேமொழி கூறுகின்றான் கொன்ற குறிப்பு இவன் முகத்தில் தோன்றவில்லை, இந்தமாதைக் கொன்றவன் இவனோ? வேறுபிறரோ? அல்லது யாரேனும் வேடுவர்மிருக வேட்டையாட எய்த அம்பானது குறிப்பில் தப்பி இவள்மீது பாய்ந்ததனால்தான் இவள் இறந்தனளோ? வேறுஎவ்வகையோ? என்று பலபலவாக யோசித்தும் உண்மை யறியக்கூடாதவனாய் நீதிநூல் வல்லோரைப்பார்த்து, நீங்கள் நூல்களை ஆராய்ந்து இதற்கு ஏதாவது ஒரு சூழ்ச்சி சொல்லுங்களென்று கூறினான். அவ்வாறே அவர்கள் பல நூல்களையும் தீர ஆராய்ந்து பார்த்து, அரசர்பெருமானே! இது நூல்களால் ஆய்ந்து அறியத்தக்கதன்று, தெய்வத்தாலேதான் தெளியவேண்டும் வேறு உபாயமொன்றும் இல்லை என்றுசொன்னார்கள். அப்போது பாண்டியன் பிராமணனைப்பார்த்து, நான் இதைத்தீர ஆராய்ந்து உன்மனக்கவலையை ஒழிக்கின்றேன், நீஒன்றுக்கும் அஞ்சவேண்டாம், உன்னை யாளுக்கு ஈமக்கடன்களை முடித்துவருக என்று அவனை அனுப்பிவிட்டு, வேடனைச் சிறையில் அடைத்துத் தங்கள் குடிக்குக் குலதெய்வமாகிய சொக்கலிங்கப்பெருமான் ஆலயத்தையடைந்து வணங்கி, சர்வக்ஞனாகிய எம்பெருமானே! எம்மரபுதழையப் பாண்டியனாய் வந்து ஆதியில் அரசுபுரிந்த கருணாநிதியே! இவ்வேடுவனே பிராமணமாதைக்கொன்றானோ? அல்லதுபிறர்தாம்வதைசெய்தார்களோ? சாட்சிகளில்லையென்று வழக்கைத் தள்ளி விடுவது ஒருபெருங்காரியமன்றே? உண்மையைக் கண்டறிவதன்றோஅரசனுடைய கடமை? இது எவ்வகையாலும் தெளிதற்குக் கூடாமையாயிருக்கின்றது, தேவரீர் திருவுளத்தில் கருணை கூர்ந்து என் மனக்கவலையை ஒழித்தருளல்வேண்டு மென்னும் பொருள்படும்படி,

"மன்றாடுமணியே யிம்மறவன்றான் பார்ப்பனியைக்
கொன்றானோ பிறர்பிறிதாற் கொன்றதோ விதுவறநா
லொன்றானு மளப்பரிதாக் கிடந்ததாலுன்னருளா
லென்றாழ்வு கெடத்தேற்றாய்."

என்று பிரார்த்தித்தகாலையில், சொக்கலிங்கப் பெருமான் அன்பனே! இம்மதுரா நகரத்துக்குப் புறத்திலுள்ள வணிகவீதியிலே ஒரு கலியாணம் நடக்கப்போகின்றது; அங்கு நீ மனைவியிழந்த பிராமணனோடுவருவாயானால் உன் மனத்திலுள்ள சந்தேகத்தை நிவிர்த்திசெய்கின்றோம் என்று அசரீரியாகச் சொல்லியருளினர். பாண்டியன் அந்தத் திருவாக்கைக் கேட்டு மனமகிழ்ந்து அரண்மனை யடைந்து, மனைவிக்கு ஈமக்கடன் முடித்து வந்த அந்தணனை யழைத்துக் கொண்டு மாறுவேடம்பூண்டு இரவில்புறப்பட்டு அந்தக்கலியாண வீட்டுக்குப்போய் ஒருபுறம் இருந்தான். அந்த மணமகனுக்கு அளவிட்ட வாழ்நாள் முடிந்தமையால் அவனுயிரைக் கவர்ந்து வரும்படி காலன் அனுப்பிய தூதரிருவரில்ஒருவன் மற்றவனை நோக்கி, தோழனே! இன்று இம்மணமகன் ஆவியைக் கொண்டு வரும்படி நம்மிறைவனாகிய யமதருமன் நம்மைஅனுப்பினனே, சரீரத்தில் பிணியொன்றேனு மில்லாதிருக்க, நிஷ்காரணமாய் இவனுடைய உயிரைக்கொள்வது எவ்வாறு?என, மற்றொருவன் நண்பனே! ஈதோர் பெரியகாரியமா? ஆலமரத்தில்நெடுநாள் முன்னர் ஏறுண்டிருந்த கணையைக்காற்றால் வீழ்த்தி எவ்வாறு சுகசரீரியாயிருந்த பிராமண மாதின் உயிரையாம் கவர்ந்தோமோ அதுபோல், நாளைக்கு உண்டாகும் கலியாணவாத்திய ஆரவாரத்தால் இங்கு கட்டியிருக்கின்ற பசுகயிறு அறுத்துக்கொண்டுவெருண்டு இந்த மணமகனைப் பாயும்படி அதைவிடுத்து அப்போது இவனுவியைக் கவர்வோம் என்று ஜகதீசன்அருளால் பாண்டியனும் பிராமணனுமாகிய இருவர் மாத்திரம் கேட்கும்படி சொன்னான். அதைக்கேட்ட யமதூதன் ஆம் அப்படியே செய்யலாம் என்று சம்மதித்தான் அவ்விரண்டு காலதூதர்களும் வசனித்துக்கொண்டிருந்ததைக்கேட்ட பாண்டியன் பிராமணனே! இப்போது இங்கு நடந்த சம்பாஷணையைக் கேட்டனையோ! என்ன, வேதியன் இம்மணமகன் அவ்வாறேயிறந்தால் என்மனையாள் இறந்தது மெய்யேயாம், இதனைப் பார்ப்போம் என்று கூறி பாண்டியனோடங்கிருந்தனன். மறுநாள்காலையில் அவ்வீட்டில் மணமகன் சுற்றத்தார் முதலிய யாவரும் திரண்டுவந்து கலியாணச்சடங்கு தொடங்குகையில், கொட்டிய பல வாத்தியமுழக்கத்தால் அங்கிருந்த பசு வெருண்டு கட்டியிருந்த தாம்பை அறுத்துக்கொண்டு விரைந்தோடி மாப்பிள்ளையை முட்டியதால் அவன் உயிர்நீங்கினன். உடனே,

"மணமகனே பிணமானுய் மணப்பறையே பிணப்பாறையா
யணியிழையார் வாழ்த்தொலிபோ யழுங்கையொலி பாய்க்கழிய

அந்தணன்கண்டு, ஐயோ! என் மனைவியிறந்தது அவ்வளவாக என க்குத் துயரத்தை உண்டாக்கவில்லையே, இந்த மணமகன் உயிர் மாய்ந்தது எனக்கு அதிக துன்பத்தை உண்டாகுகின்றதே, அந் தோ! தெய்வமே! என்றுசொல்லித் தன் மனைவியின் மரணத்தாலு ண்டான துக்கத்திலும் அதிக துயரெய்தினன். பாண்டியன் அழை த்துக்கொண்டு தன் அரண்மனைபோய்ச் சேர்ந்து மந்திரிமுதலாயி னோர்க்கு இது சங்கதிகளைத் தெரிவித்து, வேதியனை வேறோர் வி வாகம் செய்துகொள்ளும்படி வேண்டியபொருள் அளித்து அனு ப்பிவிட்டுச் சிறையில் அடைத்த வேடனைக்கால்விலங்கு நீக்கி, நா ன்தெரியாமல் செய்தகொடுந்தண்டனையை மன்னிக்கவேண்டுமெ ன்று அவனிடத் தன்புபாராட்டி அவனுக்குவேண்டிய பொருள் தந்து அவனை அவனிருப்பிடம் போகச் செலுத்தினன்.

சாக்ஷிகளில்லா இத்தகைய வழக்கைத் தெய்வ பலத்தாலன் றி, வாதிபிரதிவாதிகள்வாய்மொழியைக் கொண்டாவது வேறு எ வ்வகைப் பிரமாணங்களாலாவது அறிதல் சிற்றறிவுடைய மானிட ர்க்கு முக்காலத்தும் அசாத்தியமாம். இந்துதேசத்துப் பூர்வீகஅ ரசர்கள் தெய்வத்தையே பெருந்துணையாக நம்பி நீதிவழுவாமல் அரசுசெய்துவந்தமையால் தெய்வமும் அவர்களுக்கு முன்னின் று அப்போதைக்கப் போது துணைசெய்துவந்தது.

* * * * * *

சோழமண்டலத்திலே சூரியவம்சத்தரசர்களுக்குரிய இராஜ தானிகள் ஐந்தனுள் ஒன்றாகிய திருவாரூரில் இருந்து அரசியற் றிய சோழராஜாக்களுக்குள்ளே மநுநீதிகண்டசோழர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாவித்து, செங்கோல் நடத்தி அரசியற்றிவரும் நாளில் அவர் செய்த புண் ணிய மிகுதியினாலே அவருக்கு ஒரு நல்ல புத்திரன்பிறந்தான். அவன் பலகலைகளையும் கசடறக்கற்று வல்லவனாகி அறிவொழுக் கங்களிற் சிறந்த, இளவரசு ஆவதற்குத் தக்கபருவத்தை யுடைய வனாய் வாழுநாளில் ஒருநாள் இராஜமாளிகையினின்றும் புறப் பட்டு அரசகுமாரர்களும் சேனைகளும் சூழ்ந்துவரத் தேரிலேறி வீதியிற் சென்றான் அவ்வாறு செல்லும்பொழுது வீதியில் ஒரு பசுக்கன்று துள்ளிக்கொண்டுபோய் அந்தத் தேர்ச்சகடத்தின் அ டியில் அகப்பட்டிறந்தது. அதுகண்ட தாய்ப்பசு ஓடிவந்து, அல றி உடல் நடுங்கிச் சோர்ந்து கீழே விழுந்து புரண்டு பெருங் கூச்சலிட்டது. சோழபுத்திரன் அதுகண்டு, ஓ! ஓ! அபாயம் வந்

துவிட்டதேயென்று மனங்கடுமாறி; பெருந்துயரில் மூழ்கி அறிவ ழிந்து தேரினின்றும் கீழே அடியற்ற மரம்போல் வீழ்ந்தான். அல றுகின்ற தாய்ப்பசுவைப்பார்த்து உயிர் பதைத்துச் சோர்ந்தான். இறந்துகிடக்கின்ற இளங்கன்றைப்பார்த்து பெருமூச்சுவிட்டு இர ங்கினான். நான்பிறந்தது என்னுடைய தந்தையாருக்கு இப்பெரு ம்பழி தேடிவைப்பதற்கோ ? என்று கலுழ்ந்தான். பிறந்த குலத் துக்குப் பெரும்புகழ் சம்பாதித்து வைப்பதற்குப் பிரதியாகநான் என்றும் அழியா அபகீர்த்திதேடிவைத்தேனே ! என்றான்.

"எழுபிறப்புந்தீயவை தீண்டாபழிபிறங்காப்
பண்புடைமக்கட்பெறின்."

என்னும் முதியோர்வாக்குமாறாக நடந்து பெரும்பாவத்துக்குள் ளானேனே! என்றான். மகன் தந்தைக்குச் செய்யும் உபகாரமாவ து இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை யாதுதவஞ்செய்தானோ என்று உலகத்தார் கொண்டாடும்படி நடந்துகொள்ளுவதன்றோ? இவ்வாறு பலபலவாக யோசித்து மனந்தளர்ந்து, இனிச் சிந்தித் து நைவதில் யாதும் பயனில்லை, அபுத்தி பூர்வமாகச்செய்த இப் பாவத்திற்குப் பிராயச்சித்தம் ஏதேனும் உளதாயின் என தந்தை யர் அறியுமுன்னமே பிராமணர் விதிக்கும்பிரகாரஞ் செய்துகொ ள்ளல்வேண்டும்என்றுதீர்மானித்துப்பிராமணரிடத்தேசென்றான், தன்கன்றையிழந்ததாய்ப்பசு அத்துயரத்தைச்சகிக்கமாட்டாதுக ண்ணீர்ஒழுகச்சென்றுஇராஜமாளிகை வாயிலிற்கட்டியிருக்கும்ஆ ராய்ச்சிமணியைத் தன்கொம்பினால் அடித்தது. அதுகேட்ட மநு நீதிகண்டசோழர் திடுக்கிட்டுசிங்காசனத்தினின்றும்இறங்கிவிரைந் துவந்துகடைவாய்வருகையில்காவலாளர்கள் எதிர்வந்துவணங்கி நின்றுராஜாவேஇங்கேஒருபசுவந்து ஆராய்ச்சிமணியைத்தன்கொ ம்பினால்அடித்ததுஎன்றுவிண்ணப்பம்செய்தார்கள். மநுநீதிகண்ட சோழர் அதுகேட்டு வருந்தியலறுகின்ற பசுவைப்பார்த்துஇதற்கு யாது இடையூறு சம்பவித்தது? என்று மந்திரிகளைக் கோபித்துப் பார்க்க, அம்மந்திரிகளுள் ஒருவன் வணங்கிநின்று, பூமண்டலேஸ் வரா! உம்முடைய புத்திரன் தேர்மேலேறி வீதியிற்போம்பொழு து ஒரு பசுக்கன்று துள்ளியோடி வந்து அத்தேர்க்காலில் அகப் பட்டிறந்தது அதன் தாயாகிய இப்பசுஇங்குவந்து ஆராய்ச்சிமணி யை அடித்தது என்று விண்ணப்பஞ் செய்தான் அதைக்கேட்ட மநுநீதிகண்ட சோழர் பெருந்துயரங் கொண்டு இரங்கி ஏங்கி,

கன்றை யிழந்த தாய்ப்பசுவின் முகத்தைப் பார்த்து உள்ளம் பதைத்து என் செங்கோன்முறைமை நன்று ! நன்று ! என்றேங்கி,

"ஆடுங்கடைமணி நாவசையாமலகில மெல்லாம்
நீடுங்குடையைத்தரித்த பிரான்."

என்று உலகத்தோர் போற்றும்படி இதுவரையில் அரசு செய்து வந்தஎனக்கு இன்று ஒரு பிள்ளையால் அபகீர்த்திவந்து சம்பவித்ததே ! என்று மனந்தளர்ந்தார்.

"அல்லற்பட்டாற்று தழுதகண்ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும்படை."

என்னும் சான்றோர் வாக்கியத்தின்படி அரசன் நீதிவழுவாமல் முறைசெய்யாதபடியால், குடிகள் துன்பப்பட்டு அதனைப் பொறுக்கமாட்டாமல் அழுதகண்ணீர் அரசன் செல்வத்தைத் தேய்க்கும்படையாயிற்றே ! என்றார் இவ்வாறு துக்கக்கடலில் மூழ்கி ஒன்றுந் தோன்றாமல் தியக்கமடைந்திருக்கும் சோழ மஹாராஜாவை மந்திரிகள் நோக்கி, எம்மரசே ! மனந்தளர்ந்து ஏக்கமுறுவது இதற்குப் பரிகாரமாகாது, கோவதைக்குத் தருமநூல்களில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தை உம்முடைய புத்திரனைக் கொண்டு செய்விப்பதே தருமம் என்றார்கள். அதற்கு மநுநீதிகண்டசோழர்நீங்கள் கூறும் பிராயச்சித்தம் கன்றை யிழந்தலறும் இப்பசுவின் துக்க நோய்க்கு மருந்தாகுமா ? நான் ஏகபுத்திரனை இழக்கின்றேன் என்றுகருதி நீங்கள் எல்லோரும் சொல்லிய இவ்வார்த்தைக்கு நான் இசைந்தேனாயின் நடுவுநிலைமைதவறாதா ? உயிர்களுக்குத் தன்னாலும், தன் பரிவாரத்தாலும், பகைவராலும், கள்வராலும் ஏனைய உயிர்களாலும் வரத்தக்க ஐந்துபயத்தையும் நீக்கி அவைகளைக் காப்பவனன்றோ அரசனெனப்படுவான் ? நான் என் புத்திரன்செய்த பாவத்தின் பொருட்டுப்பிராயச்சித்தஞ்செய்வதற்கு உடன்பட்டுப் பிறனொருவன் செய்தபாவத்திற்கு அவனைக்கொல்வேனாயின், பூர்வம் மநுவினால் செய்யப்பட்ட தருமநூல்விதி என்னால் கடக்கப்பட்டதென்னும் பழமொழி உலகில் என்றும் நிலைபெறாதா ? என்றார். அப்போது, மந்திரிகள் சித்தங்கலங்கி, மாஹாராஜாவே ! இவ்வுலகில் இதுபோல் முன்னும் நடந்திருக்கின்றதே, இக்குற்றத்தின் பொருட்டு உம்முடைய புத்திரனைக் கொல்லுதல்முறையன்று, தருமநூலில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தஞ் செய்வதேபண்டு தொட்டு மேலோர் வழங்கிய கொள்கை என்றார்கள். அதற்குமநுநீதி கண்ட சோழர் நீங்கள் தருமநெறியின் உண்மையைச் அறிநு

ம் சிந்தியாது பேசுகின்றீர்கள். எந்தக்காலத்திலே எந்தப்பசு கன்றையிழந்த துயரத்தினால் வந்து ஆராய்ச்சிமணியை அடித்தது சொல்லுங்கள், ஆதலால் என் புத்திரனைக்கொல்வதே தணிபொருள் என்று சிந்தியுங்கள், நான் இப்பசுவின்துயரத்தை நீக்க வல்லவனல்லேன், ஆகையால் இப்பசு தன் கன்றையிழந்து துயருறுதல்போல் நானும் என் புத்திரனை இழந்து துக்கப்படுதலே நீதியென்றுகூறி எவ்விடத்தும் எக்காலத்தும் யாவராலும் செய்தற்கரிய செய்கையைச் செய்யத்துணிந்தார். உடனேமந்திரிகள் அஞ்சி அவ்விடத்தினின்றும் நீங்கினார்கள். பின்னர் மநுநீதிகண்டசோழர் தம்முடைய புதல்வனை அங்குவரவழைத்து ஒருமந்திரியைப்பார்த்து நீ இந்தப்பிள்ளையை வீதியில் கிடத்தி மேலேதேரைச்செலுத்தக் கடவாய் என்று கட்டளையிட்டார். அந்த மந்திரிபோய் அவ்வாறு செய்ய மனஞ்சகியாமல் தன்னுயிரை விடுத்தான், அதனையுணர்ந்து மநுநீதிகண்ட சோழர் தம்முடைய அருமைப்புத்திரனைத் தாமேகொண்டுவீதியிற்சென்று தமதுசுகத்துக்கு ஒருபுத்திரனே இருக்கின்றான் என்பதைச் சிந்தியாது, தருமவழி நடத்தலொன்றையே உறுதியாகக் கொண்டு அவனைக்கீழேகிடத்தி அவன்மார்பிலே தேருருளை அழுந்தும்படிநடத்தினார். சோழர் செய்த கடுஞ்செய்கையைக்கண்டு அங்குசூழ்ந்திருந்த மனிதர் யாவரும் மனம் சகியாதவர்களாய்க்கண்மாரிபொழிந்தார்கள். அப்போதுசர்வஜீவ தயாபரராகிய கடவுள் அங்கெழுந்தருளிவந்து முன்னின்றார். சோழர் அவரைத்தரிசித்து "சர்வலோகநாதனே! சர்வாந்தரியாமியே! சகலகல்யாணகுணபரனே! அன்பர்கள்வைப்பே! அருட்பெருங்கடலே! ஆனந்தப்பொருளே! என்று மனமுருகித்துதித்து வணங்கிப் பேரானந்தப்பெருங்கடலில் மூழ்கிப் பரவசப்பட்டு நின்றார். அப்பொழுதே பசுங்கன்றும், இராஜகுமாரனும் மந்திரியும் உயிர்பெற்றெழுந்தனர். அதுகண்ட சோழர்பரவசமெய்தி தாம் இத்தன்மையாளரென்று அறியாதவராயினர். அவர் தமது பாதத்தில்வந்து வணங்கிப் புத்திரனைத்தழுவியெடுத்துமனமகிழ்ந்தார். பசு தன் கன்றைக்கண்டு அடங்காப்பெருமகிழ்ச்சிகொண்டு உடல்பூரித்துத் தன்கன்றுஉண்ணும்படிக்குப்பாலைச்சுரந்து அபாநீங்கிற்று. அங்கெழுந்து காட்சிதந்த ஜகதீசன் மநுநீதிகண்டசோழருக்கு மேற்கண்டபடிகிருபைசெய்து அந்தர்த்தானமாயினர்.

"பார்க்குமுன்னவனே முன்னின்றால்முடியாதபொருளுளதோ,"

ஆகவே, முற்காலத்திய இந்துதேசத்து அரசர்கள்எவ்வகைப்பட்ட உயிர்களையும் ஒருபடித்தாய் மதித்துவந்தனரேயன்றிஉயர்வு

தாழ்வு பாராட்டிவந்திலரென்றும், சுயப்பிரயோசனத்தை எவ்வளவும் கருதிலரென்றும், குடிகள் அவ்வரசர்களைத் தெய்வமாய்பாவித்து வந்தார்களென்றும், அவ்வரசர்கள் நீதிசெலுத்துகையில் அவர்களுக்குப் பூரணமாய்த் தெய்வானுகூல மிருந்ததென்றும் இதனால் தெளிவாய்விளங்குகின்றது.

## செல்வ நிலையாமை.

உலகத்திலுள்ள எவ்வகையான அருமைப்பொருள்களையும் நாம்எளிதில் அடைவதற்குச் சாதகமாயிருப்பது செல்வமேயாம். பெறுதற்கரிய மானிடப்பிறவியை எய்தப்பெற்ற ஒவ்வொருவரும் அடையற்பாலதாகிய தருமார்த்தகாமமோக்ஷமென்னும் சதுர்வித புருஷார்த்தங்களுள் முன்னைய மூன்றாகிய தருமம் (அறம்), அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்), என்பவற்றுள், நடுவணதாகிய பொருளொன்றைமாத்திரம் ஒருவன் அடையப்பொறுவானேயாயின், அவனை ஏனைய அறமும், இன்பமும் தாமேவந்தெய்தும். இக்கருத்தை யறிந்தே.

"வடுவிலா வையத்து மன்னியமூன்றி
னடுவணதெய்த விருதலையுமெய்தும்."

என்று அறிஞர் கூறியுள்ளார். உலகத்தில் எவ்வகைப்பட்ட அறத்தைப் புரிவதற்கும் எத்தகுதிய இன்பத்தை அனுபவிப்பதற்கும்இன்றியமையாததாகிய கருவியாயுள்ளது செல்வமென்பதை ஒருவருமறுக்கார். அறம் புரியாவிடத்து வீடு அடைதல் துர்லபமாதலின் அவ்வறத்துக்குச் சாதகமாய் நிற்கும் பொருள் வீட்டுக்கும் சாதகமாயுள்ள தென்பது சொல்லாமே அமையும். ஜகதீசனது திருவடிச்செல்வமொன்று நீங்கலாக, உலகத்திலுள்ள அரும்பொருள்கள் யாவும் இமைப்பொழுதில் மாய்ந்துவிடத்தக்கனவென்று மேலோர் கூறிய சித்தாந்தத்துக்கு இலக்கியமாய் நிற்பவை யாக்கை, இளமை, செல்வம் என்னும் இம்மூன்றும் சிறந்தன. அவற்றுள் நிலையாமையில் மிகச் சிறந்தது செல்வமேயாம். புருடஆயுள்நூறுவயதென்றும் இளமைப்பருவம் முப்பதுவயதென்றும் அறிஞர் யாக்கைக்கும் இளமைக்கும் ஓர் காலவரையறை நிர்ணயித்திருக்கின்றார்கள். அங்ஙனம் செல்வத்துக்கு ஒருகாலவரையறை எவரேனும் ஏற்படுத்தி யிருப்பதை நாம் யெங்கும் கண்டதில்லை. ஏனைய எல்லாப் பதார்த்தங்களைவிட, செல்வத்தினிடத்து நமக்கு அதிக அவா இருப்பதற்கு இரண்டுகாரணங்களுள. முதலாவது, மேலே

எடுத்துக் காட்டியபடி ஏனைய எவ்வகைப்பட்ட பதார்த்தங்களையும் எய்துவதற்குச் செல்வம் பெருங்கருவியா யிருக்கிறபடியினால் அதனிடத்து ஆன்மாக்களுக்கு அதிக விருப்பமுண்டாகின்றது. இரண்டாவது, கிடைத்த செல்வம் நீடித்துநம்மிடத்து நிற்குமாயின் அதனிடத்து வாஞ்சை குறையும். அது வெகு சீக்கிரத்தில் உடையானைவிட்டகலு மியல்பினை யுடையதாதலின் அதனிடத்துண்டாகும் அவா பெரிதாயிருக்கின்றது. எந்தப்பொருளானது அதிசீக்கிரத்தில் அகலும் தன்மையதோ அது மிக்க அவாவை நமக்கு விளைவிக்கின்ற தென்பது அனுபவசித்தம். மனோதத்துவ சாஸ்திரமும் இதுவிஷயத்தைப்பற்றி சாட்சிபகரத்தக்கது. மாதர் இன்பத்தைநமக்மேருவைப்போல் நம்மை நினைக்கச்செய்வதும் அதை அடிக்கடி அவாவும்படிநம்மைத் தூண்டுவதும் எது ? அவ்வின்பத்தின் நிலையாமையேயாம். அது க்ஷணநேரத்தில் லயப்படுகின்றபடியினாற்றான் அதை மீண்டும் அடையவேண்டுமென்றும் பேரவா ஆன்மாக்களிடத்தில் உண்டாகின்றது. இதுபோலவே செல்வத்தின் அநித்தியமே அதனை நாம் அவாவுதற்குக் காரணமாயிருக்கிறது. செல்வம் தரித்திரம் என்னும் பதங்கள் வடமொழிகளேயாயினும் சில தமிழ்ப்புலவர்கள் அவற்றைத்தமிழ்ப்பதங்களைப்போல் பிரயோகித்து அவற்றிற்கு வேடிக்கையார்த்தமாய் ஒரு வியப்பான உரைகூறுகின்றனர். செல்வம் தன்னை உடையானைக்கண்டு எப்போதும்செல் (வோம்) வம் யாம் உன்னைவிட்டுப்போவோம்) என்றும், தரித்திரம் தன்னை உடையானை நோக்கி எப்போதும் தரித்தி (ரோம்) ரம் (யாம் உன்னிடத்தில் எப்போதும் தரித்து இருக்கமாட்டோம்) என்றும் கூறுவதாக அப்புலவர்கள் உரைப்பார். இந்த உரை மஹா வேடிக்கையார்த்தமாகக் கூறப்பட்டதேனும் அதில்யதார்த்தம்மாத்திரம் இனிது விளங்குகின்றது.

இறுதியில் காரிமாயுள்ள இன்பத்தினிடத்து நாம் கொள்ளற்பாலதாகிய ஆசையானது-அவ்வின்பத்தை அடைவதற்குக்கேவலம்கருவியாகமாத்திரம் இருக்கும் செல்வத்தினிடத்தில் பொருந்தியிருப்பது மனிதனுடையமனோதத்துவ லட்சணமாயிருக்கிறது. காரியத்தைமறந்து கருவியினிடத்தேபேரவாக்கொண்டிருப்பது மனதுக்குஅடுத்தஒருவித இயற்கையென்பது மனோதத்துவசாஸ்திரிகளின் கருத்து. ஆகையினாற்றான் அநேகர் அறத்தைப்புரிந்து இன்பத்தைநுகர்ந்துகடைசியில்வீட்டை அடைவதற்கு வேண்டியகாரியங்களைச் செய்யாமல் அவற்றிற்குக்கருவியாயுள்ள பொருளினிடத்தேலயப்



பட்டு வாணுளை வீணுளாக்கி மரிக்கின்றனர். செல்வம் வந்தகாலத்துக் காலதாமதமின்றி, நமக்கும் பிறர்க்கும் பெரும்பயனைத்தரத்தக்க கருமங்களை வெகுசீக்கிரத்தில் நாம் செய்து முடிக்கவேண்டியதென்கிற எண்ணத்தைக்கொண்டே ஜகதீசன் அதற்கு அவ்வளவு நிலையாமையைத் தந்திருக்கின்றார் இதனை உணர மதியிலாச்சிலர்,

> "உடாஅது முண்ணுதுந் தம்முடம்பு செற்றுங்
> கெடாஅத நல்லறமுஞ் செய்யார் கொடாஅது
> வைத்தீட்டி ஞரிழப்பர் வான்றோய் மலைநாட
> உய்த்தீட்டுந் தேனீக்கரி."

என்னும் அமுதவாக்குக்கு உதாரணமாகின்றார்கள். செல்வத்திடைத்து மனிதர்களுக் குண்டாயிருக்கும் பேரவாவைக்குறித்து ஒரு சிறு கதை சொல்லப்படுகின்றது. அதாவது:—

ஒரு ஊரில் தனபாலகனென்றொரு வணிகன் இருந்தான். அவன் மேலும் மேலும் பொருளைஈட்டுதலிலேயே அவாக்கொண்டிருந்தானேயன்றி அதில் எவ்வளவும் பிறர்க்கு வழங்குவதுமில்லை தானும் அனுபவிப்பதுமில்லை. நன்றியில் செல்வமென்று மூதறிஞரால் இகழ்ந்துரைக்கப்பட்ட தன்மையை நச்சுமரம் பழுத்தது போன்ற அவனுடைய செல்வம் பெற்றிருந்தது. அறிவில்லாதவன் தன்பொருளை எனது எனதுஎன்று சொல்லிக்கொண்டு இருக்கின்றான். அவனுடைய பொருளை யானும் என்னது என்னது என்று சொல்லிக்கொண்டு இருப்பேன் அப்பொருள் என்னதன்று, தன்னதுதானென்று அவன்கூறுவதற்கு நியாயமில்லை; ஏனெனில் அப்பொருள் அவனதா யிருக்குமாயின் அவன் அதனைப் பிறருக்கெடுத்துக்கொடுப்பான், தான் அனுபவிப்பான், அங்ஙனம் அவன்செய்வதில்லை, யானும் அவனிடத் துள்ள அப்பொருளைப் பிறருக்கு வழங்குவதுமில்லை, அனுபவிப்பதுமில்லை, ஆதலின் அப்பொருளை என்னதென்று யானும் சொல்லிக்கொண்டு திரியலாமே என்னும் அருமைக்கருத்தமைந்த,

> "எனதென தென்றிருக்கு மேழைப் பொருளை
> எனதென தென்றிருப்பன் யானுந்-தனதாயிற்
> றானுமதனை வழங்கான் பயன் துவ்வான்
> யானுமதனையது:"

என்னும் அற்புதகவி அவ்வணிகன்பொருட்டுத் தானோ செய்யப்பட்டது? மேலும்மேலும் செல்வம் தனக்குச் சேரவேண்டுமென்று

எக்கங்கொண்டு அவன் செல்வநாயகியாகிய இலட்சுமியை அல்லு ம் பகலும் பிரார்த்தித்துவந்தான். அப்பெருமாட்டி அவனுடைய நல்வினைக்கீடாக அவனுக்குச்செல்வத்தை விருத்திசெய்துகொண் டேவந்தனள். இப்படியிருக்கையில் தனபாலகன் தன்னுடைய செல்வத்தையெல்லாம் ஒருநாள் பார்த்து ஐயோ! ஒருகாலத்து என்னை விட்டகலுமோ? என்று துக்கித்து, அன்று இலட்சுமிப் பிராட்டியை நோக்கிஅதிவினயத்துடன் பிரார்த்திக்கவே அவன் பிரசன்னமாகி உனக்கென்ன வரம்வேண்டுமென்று வணிகனைவினு வினள். அம்மே ஒன்றுவேண்டும், இந்தசெல்வம் என்னிடத்திருப் பதற்கு நீ என்னிடத்துத் தங்கியிருப்பதே காரணமாகும், நீ என் விட்டகலுங்காலத்து இச்செல்வமும் என்னைவிட்டகலும், நீ என் னைவிட்டு வேறொருவனிடத்தில் போவதாயிருந்தால் இன்னதினத் தில் என்னைவிட்டகலுவேனென்று என்னிடத்து முன்பாகச் சொ ல்லவேண்டியதோடுங்கூட, போகும் தருணத்திலும் அப்பா! போ கின்றேன் என்று என்னைநேரிற்கண்டுசொல்லிவிட்டுச்செலவுபெற் றுக் கொண்டும் போகவேண்டியதென்று அதிவினயத்துடன்கேட் டுக்கொண்டான். அவன் நெடுங்காலமாய்த்தன்னிடத்தில் அதிக பக்திபாராட்டி வந்தானாதலின் அம்மையாரும் அவ் வேண்டுகோ ளின்படி அப்படியே ஆகட்டுமென்று உறுதிமொழிகூறி மறைந் தனள். சிலகாலஞ்சென்ற பின்பு வணிகன் அடியில்வருமாறுதனக் குள்யோசிக்கலாயினன். "திருமகள் என்னைவிட் டகலும்போது என்னை நேரிற்கண்டு, போகின்றேன், என்றுசொல்லிஎன்னிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஏகுவதாய் உறுதிமொழி கூறினள், அத் தேவியார் சொற்றவருள், நான் உயிரோடிருந்தாலல்லவா என்னை நேரிற்காண்பாள், நான் இறந்துபோவேனேயாகில் தன் வாக்கு தத்தப்படி என்னைபார்க்க அவளுக்கு இசையாது, என்னிடத்தில் சொல்லாமலே அவள் என் வீட்டை விட்டகலக் கூடாதல்லவா? ஆகவே இச்செல்வம் என் இல்லத்தை விட்டகலுவதற்கிடமிராது என்றுகுயுக்தி பண்ணிக்கொண்டு ஒருபாழுங்கிணற்றில் வீழ்ந் திறந்தான்.

நிலையிலாச் செல்வத்தினிடத்து அப்புல்லறிவாளனுக்கிருந்த பேரவா அவனுடைய அகாலமரணத்துக்கேதுவாயிருந்தது. செல் வமொன்றுண்டாக வைக்கப்பாற்றன்று." என்று பெரியோர் கூறி ய பொய்யா மொழியை உணராது அவன் வீணாக மரித்தனனே. பரிதாபம்! பரிதாபம்!

## ஸோலனும், கிரீஸஸும்.

செல்வநிலையாமையைக்குறித்து கிரீஸ்தேச சரித்திரத்திலிருந்து அடியிற்கண்ட விஷயம் எழுதப்படுகின்றது:—

கிறிஸ்து பிறக்க சுமார் 550 ஆண்டுகளுக்கு முன்னர் கிரீஸ்தேசத்தைச்சேர்ந்த லிடியாஎன்னும் பிரதேசத்தை அரசாண்டுவந்த கிரீஸஸ் என்னும் மன்னன் பெருத்த சம்பத்துடையவனாயிருந்தான். திரண்டசெல்வமுடையவனை இந்துக்கள் குபேரனென்று வழங்கி வருவதுபோல் ஐரோப்பியர்கள் நாளைக்கும் கிரீஸஸ்என்று வழங்கி வருகிறார்கள். புராதன கிரீஸ்தேசத்திய மஹான்களில் ஒருவராகியும் சட்டநிரூபணகர்த்தராயுமிருந்த ஸோலன் என்பவர் கிரீஸஸ் கொலுவீற்றிருந்த ஸார்டியா என்னும் பட்டணத்துக்கு அம்மன்னனைக் காணப்போயிருந்தார். அந்தமஹானுடையகுணாதிசயங்களுக்கும் பாண்டித்தியத்துக்கும் ஏற்றபடி அரசன் அவரை நன்குமதித்து முகமன்கூறி அவருக்குத்தகுந்த உபசாரங்களைச் செய்தான். அரசனுடைய செல்வப்பெருக்கத்தையும், மாடமாளிகை கூடகோபுரங்களின் எழில்நலத்தையும், நவரத்தனங்கள் இழைத்த சிங்காசனத்தையும், மேனகை-திலோர்த்தமை-ஊர்வசி முதலிய அரம்பையர்களையொத்த ரூபலாவண்ணியம்பெற்றவனிதையர்களின் பரதநாட்டியத்தையும் ஸோலன் பொருளெனமதியாமலும் வியக்காமலும் மேல்நோக்கமாயிருந்தார். இதைக்கண்ட அரசன் அதிசயித்துத் தன்னுடையபாளிகையிலிருந்த அளவிறந்த நவரத்னத்திரள்களையும், ஆதவனொளியை மழுங்கச்செய்யும் அருமையான பீதாம்பர உடைகள் முதலியவற்றையும், ரத்னங்களிழைத்த ஆபரணாதிகளையும், வாகனாதிகளையும், சிற்பவேலைத் திறங்களையும் மற்றுமுள்ள விசித்திரங்களையும் அந்த மஹானுக்கு ஒவ்வொன்றாகக் காட்டுவித்தான். பிறகு அரசன் ஸோலனைப்பார்த்து, ஐயா! என்னிலும் அதிக சவுக்கியவான் எவனாவது உலகத்திலுண்டா? என்றுவினவ, அதற்கு அவர்-ஆதென்ஸ் என்னும்நகரத்தில் டெல்லஸ் என்னும் ஒரு சத்புருஷனுண்டு, அவன் மஹா தரித்திரனாயிருக்கினும் தேசாபிமானம் பூரணமாகப் பெற்றுத் தன்னாலியன்றவரையில் மனமொழி மெய்களினால் தன் தேசத்தவர்களின் க்ஷேமத்துக்கான பற்பல அருமையான கருமங்களைப்புரிந்து, உலகினர் "இவன்தந்தை என்னோற்றான் கொல்?" என்றுகூறி வியக்கத்தக்க சற்குணங்கள் வாய்ந்த புத்திரர்களையும் பவுத்திரர்களையுங் கண்ணாரக்கண்டு, இறுதியில்தன்னுடைய தேசத்தின்பாதுகாப்பின் காரணமாக அமர்க்களத்தில் வலசைவாங்காமலிறந்தா

ன். அவனைவிட மனச்சந்துஷ்டியையும் புகழுடம்மையும்இன்பநு கர்ச்சியையும் அடைந்தவர்யாவர் ? என்று ஸோலன் விடைபகர்ந் தார். இதைக்கேட்ட அரசன் தன்னை அந்த மஹான் சவுக்கியவா ன்களில் டெல்லஸ் என்பனுக்குப் பின் இரண்டாவதாகவேனும்ம திப்பாராக்குமென்று நினைத்து ஐயா ! என்னிலும் அதிகசவுக்கிய முடையான் இன்னும் எவனாவது உலகத்திலுண்டா ? என்றுவின வ, அதற்கு அவர் ஆர்கஸ் என்னும் பிரதேசத்தில் இரண்டு உத்த மச்சிறுவர்களுளர், அவர்கள் ஒரு தாய்வயிற்றுப் புத்திரர்களாயி ருந்து ஒருவரை ஒருவர் சகோதரவாஞ்சையோடுநேசித்து, "உட ன்பிறந்தார் சுற்றத்தாரென்றிருக்கவேண்டாம்." என்னும்முதுரை யின்கருத்தைப்பொய்யாக்கினவர்கள், தங்களுடைய தாயினிடத்து அதிகபரிவு பாராட்டினவர்கள், அவர்களுடையதாயார் ஜூனோ என்னும் தேவதேவி வீற்றிருக்கும் ஆலயத்தில் அர்ச்சகத் தொழி ல் பூண்டவளானபடியால் ஒருநாள் ஆலயத்துக்கு அவள் அதிவி ரைவாய்ப் போகவேண்டியதா யிருந்தபோது அவள்வழக்கமாய்ஏ றிச் செல்லுவதற்குரிய வண்டிக்குப் பூட்டப்படும் எருதுகள்சித்த மாயிராதபடியினால் அச்சகடத்தை அச்சிறுவர்கள்இழுத்துக்கொ ண்டுபோய்த் தாயாரை ஆலயத்தில்விட்டார்கள். இவ்வற்புதமான செய்கையைக்கண்டு மனமகிழ்ந்ததாயார் அம்மையாரை நோக்கி, என் அருமைப்புதல்வர்களுக்கு உயர்ந்த பதவிதந்து அவர்களைஆ ட்கொள்ளவேண்டுமென்று குறையிரக்க,அம்மையார் கருணைகூர்ந் து அவ்விருவரையும் மரணவேதனையி லிருந்தும் தப்புவித்துத்தம் அடிச் செல்வத்தைத் தந்தனள், ஆகையால் அச்சிறுவர்கள் மிக்க சவுக்கியவான்களென்பதற்கு ஐயம் யாது ? என்றுவிடைபகர்ந்தா ர். அதற்கு அரசன் மனவருத்தத்துடன் ஐயா ! யான் சவுக்கியவா னல்லனோ ? என்று கேட்டான். என்னுடைய அளவிறந்தசம்பத் தையெல்லாங் கண்ணாரக்கண்டுந்தேவரீர் என்னை ஏன்சவுக்கியவா னென்று சொல்லவில்லை? என்று வினவினதற்கு அந்தமஹா னுபாவர் அடியில் வருங்கருத்தமைய உபந்நியாசித்தனர்.

"இவ்வுலக இன்பமும் ஒரு இன்பமாகுமா? நமது தேகமே அநித்தியமானால் அதைக்கொண்டு நாம்இவ்வுலகத்தி லடையத்த க்க இன்பங்களை நித்தியமாகச் சொல்வது சரியா?

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையா
யணியிழையார்வாழ்த்தொலிபோயழுகையொலியாய்க்கழியக்
கணமதனிற்பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை
யுணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க்கொன்றுமிலை,

மணமகனாயிருந்தவன் மணச்சடங்குமுடிவதற்குமுன்னமே உயிர்நீங்கிய பிணமானானல்லவோ, மனத்துக்கானந்த வாத்தியங்களெல்லாந் துக்கத்துக்காக ஒலிக்கப்படும் வாத்தியங்களானதையும், மங்கலவாழ்த்துச் செய்துகொண்டிருந்த ஸ்திரீகள் முறையோமுறையோவென் றலறியழுதலையும் யாம்பிரத்தியக்ஷமாய்க் கண்டிருக்கிறோம். ஒரு நொடியில் தோன்றியழியும் இந்தத் தேகத்தினால் அடையத்தக்க பிரயோஜனத்தை அறிஞர் அடைவார்கள். [illegible] ச் சதமென்றெண்ணி, நமது வாழ்வுபோது மதிமோசம் போவார்கள் என்றுமேலோர்கூறியதை நீ ஞாபகத்தில் வைப்பாயாக. இப்போதிருக்கும்வாழ்வும் செல்வமும் அரைநொடியில் என்னவோ? ஆதலின், எவனொருவன் மரணமடைகிறவேளையில் ஒருபழுதுமின்றிச் செலவைப்பெற்று மனச்சந்துஷ்டியை நிறைந்தே அனுபவித்தான் சவுக்கியவானென்று கூறுவதுசரி; அன்றியும் ஒருவனுடைய இன்பத்துக்குச் செல்வமொன்றே காரணமாகாது. அது அவனுடைய மன அமைதிமுதலிய இன்பத்துக்குச் சில விஷயங்களில்பெருந் தடையாயிருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்; கிடைத்தமட்டில் திருப்தியடைந்து மேலான கருமங்களைப் புரிந்துவந்து கடைசிமட்டும் மனக்கவலையற்றிருப்பவனைத்தான் சவுக்கியவானென்று கூறவேண்டும். ஆதலால், உன்னைச் சவுக்கியவானென்று வீணாய்மதித்துக்கொள்ளாதிருப்பாயாக.

இந்த உபந்நியாசத்தைக் கேட்டபோது அரசன் ஒருவாறு அருவருப்பெய்தி ஸோலனுக்கு விடைதந்து அனுப்பிவிட்டான்.

ஸோலன் இவ்வண்ணமாகச் செய்த அற்புதவசனங்களின் உண்மையினைச் சிலநாளையில் கிரீஸஸ் அநுபவப்பிரசித்தமாகக் கண்டறிந்தான். பெர்ஷியாதேசத்து இராஜாதிபதியாகிய ஸைரஸ் என்பவன்படையெடுத்துவந்து கிரீஸஸ் என்பவனைவென்று அவனுடைய இராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டதுமன்றி அவனையுங்கொல்லத் துணிந்தான். அபஜெயமடைந்த மன்னனைப் பெருந்தீமூட்டி உயிரோடு அதில் வீழ்த்த எண்ணி ஸைரஸென்னுமரசன் அவனைக்கொண்டுவந்து நிறுத்துகையில், அந்நேரப்பாக்கியமற்ற மன்னன் ஸோலன் என்னும் மஹான் தனக்குச் செல்வநிலையாமையைப்பற்றிச் செய்த உபந்நியாசம் ஞாபகத்துக்குவர, "ஓ ஸோலனே! ஸோலனே! ஸோலனே!" என்றுரக்கப் [illegible] யுமாய்க் கதறியழுதான். இதைக்கேட்டமாத்திரத்தில் அவன் அவ்வண்ணம் ஸோலனுடைய பெயரை நினைத்துக் கூவிக்கதறுங்காரணம் யாதென்று ஸைரஸ் வினவ, ஆதியோடந்தமாகக்கூறிய விருத்தாந்தங்களைத் தீயில்வீழ்ந்திறக்கநின்ற கிரீஸஸ் மனமுருகிச் சொல்லி முடித்தவுடனே, ஸைரஸ் என்பவனுக்கு ஞானோதயமாகி, நிலையில்லாத இவ்வுலகசெல்வமை உணர்ந்து, [illegible] தயா[illegible]புரிந்து அவனை உபசரித்து ஒழுகிவந்தான்.

பெறுதற்கரியதாய், யாவற்றிற்குங் கருவியதாயுள்ளசெல்வத்துக்கு நிலையாமையை ஜகதீசன் தந்தையோசிக்கையில் செல்வம் பெற்றக்கால் பின்னுவதென்று பிடித்திராமல் அதனாலாய பரோபகாரமுதலிய புருஷார்த்தங்களை அதிவிரைவில் ஆன்மாக்கள் செய்து ஈடேற வேண்டியதென்பதே இணையில் ஞானபூரணனது கருத்தென்பது தெள்ளிதிற்புலப்படுகின்றது. ஆகையால்,

"அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்"

என்னும் அற்புதவசனத்தைச் செல்வர்கள் ஞாபகத்தில்வைப்பார்களாக.

கதாவாசகர்களே!

இதுவரையிற்சொல்லிவந்தகதைகள் புஷ்பவேணி என்பவள் தன்கொழுநனாகிய வல்லாளனுக்குச் சொல்லியதென்று நீங்கள் மறவாதிருந்தால் உங்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

புஷ்பவேணி கதைசொல்ல ஆரம்பித்த மறுநாள் தொடங்கிதன்கணவனுக்குக் கல்விகற்பிக்க ஆரம்பித்து அவனைவாசகாடைபடிக்கும்படிச்செய்தாள். பின்னர்ப் பல நீதிநூல்களைநாளொன்றுக்கு ஐந்து பாடல்கள்விகிதம் மனனம்செய்துதன்னிடத்தே ஒப்புவிக்கவேண்டுமென்று திட்டம்செய்தாள். அவ்வாறே அவனும்பாடம்செய்து ஒப்பிக்கலானான். அவன் அவ்வாறு கஷ்டப்பட்டுமன்னம்செய்வதற்கு ஒருகாரணமிருந்தது. பாடல்களை வரப்படுத்தித் தன்னிடத்தில் ஒப்புவித்தால்தான் கதைசொல்வதாக நமது புஷ்பவேணி கூறினளாதலால், கதைகேட்பதில் மிக்க அவாவுடைய வல்லாளன் அவள் சம்மதத்திற்கிணங்கி நடக்கலானான். பொருள் தேட்டத்திற் பிரியமுடைய ஒருவன் இரவுபகலென்பதின்றிக் கஷ்டப்பட்டுப் பொருள்சம்பாதிப்பதுபோல், வல்லாளனுக்குக் கல்வி ஏறஏற அதில் ஒருவித இனிமையும், பிரியமும் அதிகரித்து பனிவியின் தொந்தரவில்லாமலே தானே வாசிக்கமுயன்றான். இரவும் பகலும் கஷ்டப்பட்டான். வெகுசீக்கிரத்தில் குறள் நாலடியார்முதலிய நூல்கள் பசுமரத்தாணிபோல் அவன்மனத்தேபதிந்தது.

தமது புதல்வன் கல்வியில் மிக்கபற்றுடையவனாய், இடையிடையே தனக்குண்டாகும், தன் மனைவிக்குண்டாகும் சந்தேகங்களைக் கல்வியிற் கம்பனெனத்தகும் தன் தந்தையிடஞ்சென்று கேட்டுத்தெளிவான் இவன் செய்கையைக்கண்ட தந்தை பெருங்களிப்பெய்தினார். கற்றறிந்த பெண்ணைத் தன்மகனுக்கு மனைவியாக்கியதனாலுண்டான பிரயோஜனம் இதுவேதென வல்லாளன் தாய் நன்குணர்ந்தாள்.

வல்லாளன்தாய் சிறிதுநாட்கள்பொறுத்து சிவபதமடைந்தாள். தந்தைதனக்குள்ள ஆஸ்திகளையெல்லாம்வல்லாளனுக்கே உரித்தாக்கினன்.

வல்லாளனுக்குக் கல்வியதிகரித்தபின் அந்நாட்டிலுள்ள நாவலர்பாற்பயிலலானான். இரண்டுமூன்றுவருடத்திற்கெல்லாம் அவன் எடுத்த நூல்களுக்கு உரைசொல்லவும், இனியபாடல்களியற்றவும்வல்லவனானான். வல்லாளன் சொற்பநாட்களில் இவ்வளவுதிறமை பெற்றதையும். இதற்குக்காரணம் அவள் மனைவியென்பதையும் தெரிந்த ஊரார்புஷ்பவேணியைக் கொண்டாடினர். தமதுபிள்ளைகளும் கல்வியுடைய பெண்களையே விவாகம் செய்விக்கவேண்டுமென்னு மெண்ணம் அந்நாட்டினர்க்குப் பெரிதுமுண்டாயிற்று.

சுந்தரம்பிள்ளை, தன்மகன் தன்னில் அரைத்தரம் கல்வியிற்றேர்ந்திருக்கின்றானென்னும் மகிழ்ச்சியிற்சிறந்தார். இவ்வளவுகல்வியும் தன்மகனுக்குத்தனதுமருமகளாலல்லவாஉண்டானதுஎன்னும் நினைவுஉண்டாகும்தோறும் தன்மருமகளிடம் சென்று அவளை ஆசீர்வதித்து மகிழ்வார். இஃதிப்படியிருக்க,

பின்னர்நடந்தஒருவிஷயத்தைக்கூறி,இக்கதையைமுடிப்போம்.

ஒருநாள் வல்லாளன் தனதுகல்வித்திறத்தைப் பலரறியத் தெரிவிக்கவேண்டுமென்றுன்னி 1901 ௵ ஜனவரி ௴ 11௳ சமரபுரி சுந்தரேஸ்வரர் சந்நிதானத்தில் பகல் 3 - மணிக்குப் பெண்கல்வி என்னும் விஷயத்தை வல்லாளப்பிள்ளையால் பிரசங்கிக்கப்படும். என்று ஒரு சிறுபத்திரிகைபொன்று அச்சிட்டு எங்கும் கொடுக்கப்பட்டது. உண்மையறியாத சிலர் இதென்னவிந்தை! கல்வியானதுலவலேசமுமின்றிக் கண்டவிடத்தில் மாடெனத்திரிந்த வல்லாளன் பெண் கல்வியைப்பற்றிப் பிரசங்கம் செய்யப்போகின்றானாமே! நாம்சென்று காண்போமென்று தமக்கிருந்த அவசியமான அலுவல்களையெல்லாம் கட்டிவைத்துவிட்டு ஆலயத்தில் இரண்டுமணிக்கெல்லாம் எண்ணிறந்த ஜனங்கள் உட்காரவும் நிற்கவும் இடமின்றி நெருங்குண்டு கஷ்டத்தோடு நின்றிருந்தனர். அந்தச்சமயத்தில் எள்ளையெடுத்து அக்கூட்டத்தில் இறைத்திருந்தால் ஒன்றுகூடக்கீழே சிந்தியிராது. ஜனக்கூட்டம் அவ்வளவுநெருக்கமாகவிருந்தன. இன்னும்வல்லாளன் வரவில்லையே வரவில்லையே என்று ஒரு நிமிஷத்தை ஒருயுகமாகக்கழிந்தனர். அநேகர் சிறிது முன்னுகச் சென்றால் வல்லாளன் முகத்தைப் பார்க்கலாமென்று பாம்புபோல் தங்கள் தேகத்தை வளைத்துச் சிறிதும் சிரமம்பாராமல்மெல்ல மெல்ல உள்நுழைந்துகொண்டிருந்தனர். ஒருபுறம் கல்விப்பழக்கமும், அதிற் பிரியமுமுடைய சிலபெண்கள் கூட்டமாகக் கூடியிருந்தனர். சுந்தரேஸ்வரர் சந்நிதானத்திலுள்ள பதினாறுகால் மண்டபத்தில் இரத்தினகம்பளம்விரித்து. ஒருசிறியமேஜையும் அதன்மேல்மெழுகுவர்த்திவிளக்கும் வைக்கப்பட்டிருந்தன அங்கே சிலபெரியமனிதர்கள் விபூதி தாரணம் விளங்க கழுத்தில் உருத்திராக்ஷம் பொலிய வைதிக கோலத்தோடு உட்கார்ந்திருந்தனர், அவர்கள் இடைஇடையே வார்த்தையாடுவதும், கைக்க

யாரத்தை எடுத்துப்பார்ப்பதுவுமாகவிருந்தனர். அதிலிருந்தஒருவர் "சிவநேசமுதலியாரே! என்னமணி ஆயிற்று?" என, அவர் மூன்றடிக்க ஐந்துநிமிஷமிருக்கின்றது என்றார்.

அப்போது கோச்சுவண்டியொன்றுவந்துகோயிலுக்கெதிரே நின்றது. ஜனங்களெல்லாம் தங்கள் தங்கள் இடம்விட்டுப் பெயர்ந்து வல்லாளன் வல்லாளன் என்றார்கள். அதிற்சிலர்பிரசங்கியார் வந்துவிட்டாரென்றனர், இவ்வாறு இரண்டு நிமிஷம் ஜனங்கள்கடலொலி செய்து அடங்கினர்.

வல்லாளன், அவர்தந்தை, புஷ்பவேணி, வல்லாளன் மாமனாராகிய சௌந்தரம் பிள்ளை ஆகிய நால்வரும் வண்டியைவிட்டிறங்கிக்கோயிலுக்குட்சென்று கடவுளை வணங்கி, ஆடவர்மூவருஞ்சரியாய் மூன்று மணிக்கு மண்டபத்தில் வந்து உட்கார்ந்தனர் புஷ்பவேணிமட்டும் பெண்கள் கூட்டத்திற்போய்ச்சேர்ந்தாள். அவளை அங்குள்ள ஸ்திரீகள்யாவரும் விஸ்வாஸத்தோடு மரியாதைசெய்து தங்களோடு இருக்கப்பிரார்த்தித்தனர்.

உடனே வல்லாளன் அடியில் வருமாறு பிரசங்கிக்கலானான். புல்லறிவாளனாகிய எனது பிரசங்கத்தைக்கேட்குமாறு தங்களை வரக்கோரியஎனது அபிலாஷையைப் பூர்த்திசெய்வான் மிகப்பிரயாசையோடு வந்த எனது தந்தைமார்களே! சகோதரர்களே! சகோதரிகளே! தாய்மார்களே! உங்களுக்குளன்மனப்பூர்வமானவந்தனஞ்செய்கின்றேன்.

"நீட்டோலை வாசியான் நின்றான் குறிப்பறியமாட்டாதவனே மரம்" என்றபடி நான்கு வருடங்களுக்குமுன் நாயேன் கல்விபயில்லாததோர் தேசத்திற்பிறந்த கசடன்போல, அகரம் இந்தஸ்வரூபமாயிருக்குமென்பதேயுணராமல் எங்கும் திரிந்தலைந்திருந்தேனென்பதை நான்சொல்லாமலே இச்சபையின்கணுள்ள அறிஞரிற்பெரும்பாலார் அறியா நிற்பர். இதோ இங்குவீற்றிருக்கும் என்னையீன்றதந்தையோ கல்வியிற் கம்பனையொத்தவர் என்பதையும் இங்குள்ளோர் யாவரும் அறிந்ததே. அங்ஙனமிருந்தும் என்னுடையஊழ்வினையானது எனக்குக்கல்விகற்பியாதபடி அவரைத்தடுத்தது. யானும் எனது தாயின் தனப்பாலுண்டு நாத்தடித்து மந்தசிகாமணியாயினேன். சில நாட்களில் என்தீவினை ஒழிந்து நல்வினையானது தலைநீட்டிப்பார்த்தது. என்னை உய்விக்கவேண்டுமென்றே இதோ இங்குவீற்றிருக்கும் கனப்பொருந்திய என் தந்தையன்னசௌந்தரம் பிள்ளையென்னும் திருப்பெயருடையார் வயிற்றில் உதித்த புஷ்பவேணி எனக்கு மனைவியாகவந்தாள். நான் கல்விவாசனையில்லாக் கசடனாயிருந்ததைக் கண்டு எனக்காக அவள் துக்கித்து இனிய பல கதைகளையெடுத்தோதி அடியேனுக்குக் கல்வியிற் பிரியமுண்டாகச் செய்து மெல்ல மெல்லத் தனக்குத் தெரிந்தகல்வியையும் போதித்து, இருள்மூடிக்கொண்டிருந்த என் உள்ளத்

தேனானைச்சுடர்கொளுத்தி இப்பெருங்கூட்டத்தினிடையேநின்று பிரசங்கிக்கச்செய்த அவ்வுத்தம சற்குணவதிக்கு நானெனது ஸ்வல்ப ஆயுள்நாளில் ஏற்றகைம்மாறு செய்வேனென்று துணிந்துகூற மாட்டேன். எனக்கு என்மனைவி செய்த உபகாரத்தில் ஆயிரத்திலொருகூறுகூட என்தாய்தந்தையர் எனக்குச்செய்திரார். ஆகவே எனதுநாவு என்னுடையசிறந்த நாயகியைப்பற்றிப் புகழ்ந்துகூறற்குக் கொஞ்சமும்கூராது என் ஆயுளுள்ளளவும் அவளுடையாலுபதேசத்தை ஏற்று அவளுடைய நேத்திரங்கள்போலப் பிரகாசிப்பேன். அவள் மிகக்கருணையும், சாந்தமும், உயர் நடையுமுள்ளவள் எழுத்தறப்படிக்கத்தெரியாத சிலபெண்கள் தங்களைத் தாங்களே மதித்துக் காவிப்பதுபோல்பவளல்ல. இப்போது அவளுடைய கல்விதாழ்ந்தும் என்னுடைய கல்வி உயர்ந்துமிருக்கினும் அவளே எனக்குமுதலாசிரியள், நல்லறிவைத்தரவல்லகற்பனைகதைகள் சொல்வதில் நான் அவளுக்கு முற்றும் தாழ்ந்தவனேயாவன்.

என்று பிரசங்கித்துக்கொண்டிருக்கையில், ஒரு சிறுவன் அக்கூட்டத்தை நீக்கிக்கொண்டுவந்து வல்லாளனிடம் ஒருகடிதத்தைக் கொடுத்தான். அதில் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

தங்கள் பிரியை புஷ்பவேணி தேவரீருடைய பாதாரவிந்தத்திற்கு நமஸ்கரித்துத் தெரிவிக்கின்றேன். தாங்கள் ஏதோ பிரசங்கம்செய்வதாகச் சொன்னீர்கள். அதைக்கேட்க அவாவுற்று வந்தேன். அதைவிடுத்து நாயினும் கடையேன், பேயினுமிழிந்தேனாகிய என்னைத் தாங்கள் அளவுகடந்து புகழ்வதைக்கேட்க என் மனம் நடுங்குகிறது. அடியாள்மேல் கிருபைசெய்து இனி புகழாதிருக்கக் கோருகிறேன். தங்களடியாள்

புஷ்பம்.

என்றிவ்வாறெழுதி புஷ்பவேணி கொடுத்தனுப்பிய கடிதத்தைப்பார்த்துப் புன்னகைசெய்து பின்னர் அடியில்வரும்விஷயத்தைப் பிரசங்கிக்கலானார்.

சபையோர்களே!

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

என்ற குறளில் கற்றவர்களே கண்ணுடையவர்கள். கல்லாதவர்கள் முகத்திலிரண்டு புண்ணுடையவர்களென்று திருவள்ளுவநாயனார் ஸ்திரீ புருஷர்களுக்குப் பொதுவாகச் சொல்லுகிறாரேயல்லாமல். புருஷர்களுக்குமட்டும் சொல்லவில்லையே! குருடனைச் செந்தாமரைக்கண்ணன் என்பதுபோலும், அஷ்ட தரித்திரம் பிடித்தவளை அன்னபூரணி என்பதுபோலும், படியாத பெண்களுடைய கண்களை நீலோத்பலமென்றும், வண்டென்றும், மானென்றும், மீனென்றும் மற்ற வித்வான்கள் எவ்வளவுதான் வர்ணித்தாலும், நாமொருநாளுமொப்பமாட்டோம். புண்ணென்றே சாதிப்

போம். ஏனென்றால், திருவள்ளுவருக்கு மற்றப் புலவர்கள் அஜகஜாந்திரமல்லவா ? கல்வி யென்னும் ஔஷதப் பிரயோகஞ்செய்து மேலே சொல்லப்பட்ட புண்களைக் கண்களாக்காதவரையில் நாம் நம்முடைய கக்ஷியைவிடோம். கற்பு என்கிற பதத்துக்குக் கல்வி யென்று அர்த்தமாகிறபடியால், பெண்களுக்குக் கற்பு வேண்டுமானால் கல்வியும் வேண்டுமென்பது அந்தப் பதத்தினாலேயேவிளங்குகிறது. ஸ்திரீயும்புருஷனும் ஒருதேகமென்பது சர்வமதசம்மதமானதால், புருஷன்மட்டும் படித்துப் பெண்சாதி படிக்காம லிருப்பது பாதியுடலிற் பிராணனும் பாதியுடலிற் பிராணனில்லாமலும் செய்கிற பாரிசவாயுபோலும், பாதி உடலை அலங்கரித்துப் பாதியுடலை அலங்கரியாமல் விடுவதுபோலுமிருக்கிறது, இது எவ்வளவு வெட்கக்கேடும் சக்கிலியக்கூத்துமா யிருக்கிறதென்பதையோசியுங்கள். பெண்கள்படித்தால் அவர்களுக்குச் சகலவிவேகமுமுண்டாகுமானதால், அவர்கள் புருஷர்களுக்கு மந்திரிகளைப் போலச் சமயத்தில் புத்தி சொல்வார்கள். காரியஸ்தர்களைப்போலக் கிரககிருத்தியங்களையெல்லாம் நடப்பித்துக்கொள்வார்கள். கணக்கர்களைப்போலவீட்டைச் சேர்ந்த கணக்குகளையெல்லாம் எழுதிக்கொள்வார்கள். தாய்போலப் புருஷர்களைச் சம்ரக்ஷிப்பார்கள். காவற்காரரைப்போல வீட்டுப்பண்டங்களை யெல்லாங் காத்துக்கொள்வார்கள், நல்லசுயம்பாகிகளைப்போலப் புருஷர்களுடைய நாவுக்கிதமான பக்ஷணங்களைச் செய்துகொடுத்து உபசரிப்பார்கள். வைத்தியர்களைப்போலப் புருஷர்களுடையதேகசௌக்கியங்களுக்கடுத்த காரியங்களைத் தேடிச்செய்வார்கள். சங்கீதவித்வான்கள்போல இன்பமானபதங்களைப்பாடியும், இங்கிதமான வார்த்தைகளைப்பேசியும் புருஷர்களுடைய ஆபத்துக்கு உதவுவார்கள் புருஷர்கள் பிசகிநடந்தால் அவர்களுக்குக் குருவைப்போல உபதேசஞ் செய்வார்கள் பெண்களுக்குப் படிப்பிலாமையினால் இவ்வளவு நம்மைகளையும் புருஷர்க ளிழந்துபோவது எவ்வளவு மதியீனம்! இப்போது பெண்கள் படியாதவர்களாயிருப்பதனால் புருஷர்கள் தங்களுடைய தொழிலைச்சேர்ந்த வெளிவேலைகளுடனே கூட வீட்டைச்சார்ந்த காரியங்களையும் வகித்துக்கொண்டு இரண்டு குதிரைகள்கட்டி யிருக்கவேண்டிய பண்டியை ஒரு குதிரை மட்டு மிழுப்பதுபோலத் தாங்கள் சிரமப்படவேண்டியிருக்கிறது.

பெரிய குடும்பங்களில் அநேக பந்துக்களும் பிள்ளைகளும்வேலைக்காரர்களும் இருக்கிறபடியால், அடிக்கடி கலகங்களும், மனஸ்தாபங்களும் உண்டாகுமே! குடும்பத்தலைவி படியாத அவிவேகசிரோமணியாயிருந்தால், அவள் அந்தக் கலக சண்டைகளை நிவர்த்திசெய்யவும், மற்றவர்களுக்குப் புத்தி கற்பிக்கவும், எப்படிச் சாத்தியமாகும்? குருடனுக்குக் குருடன் வழி காட்டவும். முடவனுக்கு முடவன் சிலம்பங் கற்றுக்கொடுக்கவுங் கூடுமா ? நிரக்ஷா

குக்ஷியாயிருக்கிற கலியானவள் வேலைக்காரர்கள் செய்கிற திருட்டுகளையும் புரட்டுகளையும் மோசங்களையுங் கண்டுபிடித்துப் பொருட்சேதமில்லாமல் குடும்பத்தை எப்படிப் பராமரிக்கக்கூடும்? மூடன் ஆஸ்தி-முழுவதும் நாஸ்தி, என்பதுபோலப் பெண்களுக்குப் படிப்பில்லாமையினால் திரவியநஷ்டம் சம்பவிக்கவும் இடமுண்டாகின்றது.

பெண்கள் படித்திருந்தால் அவர்கள் வீட்டு வேலைகள் செய்கிற நேரம்போக மற்ற நேரங்களில் நல்ல புஸ்தகங்களைவாசித்துத் தங்களுடைய புத்தியை அபிவிர்த்தி செய்யவுங் குழந்தைகளுக்குப் படிப்பிக்கவும் தக்கவர்களா யிருப்பார்கள். அப்படி யில்லாமையினால் ஸ்திரீகள் வீண் பேச்சும், வம்பு வார்த்தைகளும், கோளும், புறணியும் பேசி, துன்மார்க்கங்களைக் கற்றுக்கொள்ள இடமுண்டாகிறது. சிறு குழந்தைகளுக்குத் தகப்பனைவிடத் தாய்மார்களிடத்தில் அதிக பழக்கமிருப்பதனால், 'பிள்ளையாரைப் பிடித்த சனியன் அரசமரத்தையுங்கூடப் பிடித்தது' போலப் படிப்பில்லாத தாய்மார்களுடைய அறியாமையும் துர்க்குணமும் பிள்ளைகளையுஞ் சாரும்படியா யிருக்கிறது, புருஷர்களைப் பார்க்கிலும் பெண்களுக்கு அதிக அவகாசமான நேரமிருப்பதால் அவர்கள் படித்தவர்களா யிருந்தால் ஒளவை முதலானவர்களைப்போல அநேக பிரபந்தங்களை யுண்டுபண்ணவும் நூதனமான காரியங்களைக்கண்டுபிடித்துச் செய்யவும் அதனால் இந்தத் தேசம் ஐரோப் தேசத்தைப்போலச் சீக்கிரத்தில் நாகரீகம் அடையவும் இடமுண்டாகுமென்பது கரதலாமலகம்போல விளங்க வில்லையா ?

பிள்ளைபெற்றவளைப் பார்த்து மலடி பெருமூச்சுவிட்டதுபோல, யூரோப்தேசத்து நாகரிகத்தைப்பார்த்து நாம் பெருமூச்சுவிடவேண்டியதே யல்லாமல் பெண்கள் கல்விகல்லாதவரையில் நம்முடைய தேசம் திருந்தவேமாட்டாது. பெண்களுடைய கல்வியினால் புருஷர்களுடைய கல்வியும் அதிகரிக்குமென்பதுபிரகாசமாயிருக்கிறது. எப்படியென்றால், பெண்கள் தங்களைக் கல்வியில் வெல்லாம லிருக்கும் பொருட்டும், பரிகாசஞ்செய்யாமலிருக்கும்பொருட்டும் புருஷர்களுக்குக் கல்வியில் அதிககவனமும் முயற்சியும் உண்டாகுமென்பதற்கும் எவ்வளவும் ஐயமில்லை.

கல்வி கல்லாத பெண்கள் எவ்வளவோ அழகுள்ளவர்களாயிருந்தும் அவர்களுடைய அழகானது எட்டிமரம் பழுத்தது போலும், பிரேதத்தை அலங்கரித்ததுபோலும், சுத்தநிஷ்பிரயோசனமா யிருக்கிறது, உயிரில்லாத பண்பாவைக்கு நகைகள் பூட்டி

ளுற்போல கல்லாத பெண்களுக் குண்டாகிய அழகினால் பிரயோசனமென்ன ? அவர்களுடைய வாயைத்திறந்தால் அவர்களுடைய வார்த்தை புத்திமான்களுக்கு எவ்வளவும் கேட்கச் சகிக்காமல் கர்ணகடோரமா யிருக்கிறது.

அவர்களிடத்தில் பேசினால் தமக்கிருக்கிற புத்தியும்மழுங்கிப் போமென்று பயப்படவேண்டியதா யிருக்கின்றது சில புருஷர்கள் தங்கள் பத்தினிகள் எவ்வளவோ சுந்தரமுள்ளவர்களா யிருந்தும், அவர்கள் படியாதவர்களாயும் மதுரமான சம்பாஷணஞ் செய்யத்தகாதவர்களாயும் இருப்பதால் வீட்டுப் பெண்சாதிவேம்பும், நாட்டுப்பெண்சாதிகரும்பும், என்பதுபோல, சொந்தஸ்திரீகளை விட்டுவிட்டு அழகில் மூதேவிக்கு மூத்தவளாயிருக்கிற தாசிகள் பாதமேகதியென்று ஓடுகிறார்கள். தாசிகள் கல்வி கற்றுமதுரமாய்ப் பேசுவதே இதற்குக் காரணமா யிருக்கிறது, பெண்கள் கல்வி கற்றிருந்தால், அவர்கள் அழகில்லாதவர்களா யிருந்தாலும் அவர்களைப் புருஷர்கள் தாசிகள் வீட்டுக்குப் போகிறவழியை அடைக்குமென்பதற்கும் இதுவே சாட்சியமாம்,

ஒரு புருஷனுக்குத் தன் பெண்சாதிமேல் சந்தேகமுண்டாகி அவளைக் கண்டித்துத் தலைமண்டையுள்ளவரையில் சோரநாயகனைச் சேருகிறதில்லை யென்று சத்தியம் பண்ணும்படி கேட்டனனும் அவள் புருஷனுக்குத் தெரியாமல் ஒரு மண்டையோட்டையெடுத்துத் தலைமேல் வைத்துக்கொண்டு தலை மண்டை யுள்ளவரையில் வியபிசரிக்கிறதில்லை யென்று பிரமாணஞ்செய்துகொடுத்துப் பழைய படியே நடந்துவந்தனளாம் இப்படிபட்ட படியாத ஸ்திரீகளுடைய கற்பைப் புருஷன் தடியெடுத்துக்கொண்டு காக்க வேண்டியதா யிருக்கிறது பெண்கள் படித்தால், அவர்களுடைய கல்வியே கற்புக்குக் காவலாயிருக்குமென்பது நிச்சயமே.

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை."

என்று திருவள்ளுவநாயனார் சொல்வது உண்மைதானே.

என்று சரமாரியாக அன்று இரவு 9-மணிவரையில் அனேக விஷயங்களை மேற்கோளாகக்காட்டிப் பிரசங்கித்தார். எல்லோரும் கர்ணாமிர்தம் கர்ணாமிர்த மென்று களிமகிழ்கிவெய்தி, வல்லாளனைப் புகழ்ந்து சென்றனன் :—சுபம்.

மனோரஞ்சனி.

முற்றிற்று.

